வேதாந்தம்·
வழி நூல்கள்·

உ

சிவமயம்

# பரமாத்துவித சித்தாந்தம்

## கட்டளையும்

## அனன்ய ஸத்கார்ய வாதமும்.

[மேலான ஒற்றுமை]

---

ஆசிரியர்

குலசேகரப்பட்டினம் போடிபட்டி

ஸ்ரீ அருணாசல சுவாமிகளின்

சிஷ்யருள் ஒருவரும், உபயபாஷா பண்டிதரும்
இதோபோதகரும், பரமாத்வைத சித்தாந்த
ஸ்தாபகரும் பிரவர்த்தகரும் ஆகிய
திருவேடசெந்தூர் உபந்யாஸ ரத்னாகரம்

திருத்தேவர் பழநியப்ப கவுண்டர்

---

ஸ்ரீநிவாஸ பிரஸ், திருவையாறு.



1947

உ

## அறிவிப்பு.

---

பரமாத்துவித ஆசிரியரால் இன்னும் "முதற் குறளும் முதல் வனும்' என்னும் நூலும், 'இறை வனும் எழுத்தைந்தும்' என்னும் நூலும் விரிவாயும் விளக்கமாயும் பூர்வாசாரியர்களின் கருத்துக்களு டனும் பரமாத்வைத சித்தாந்த போதகாசாரியரான

ஸ்ரீ அருணாசல சுவாமிகளின்

விசேடமான கருத்துக்களுடனும் எழுதப்பட்டு அச்சிலுள்ளன. சீக்கிரத்தில் வெளிவரும்.

சிவமயம்

# பரமாத்துவித சித்தாந்தம்

## கட்டளையும்

## அனன்ய ஸத்கார்ய வாதமும்.

[மேலான ஒற்றுமை]

---

ஆசிரியர்
குலசேகரப்பட்டினம் போடிபட்டி
ஸ்ரீ அருணாசல சுவாமிகளின்
சிஷ்யருள் ஒருவரும், உபயபாஷா பண்டிதரும்
இதோபோதகரும், பரமாத்வைத சித்தாந்த
ஸ்தாபகரும் பிரவர்த்தகரும் ஆகிய
திருவேடசெந்தூர் உபந்யாஸ ரத்னகரம்
திருத்தேவர் பழநியப்ப கவுண்டர்.



---

ஸ்ரீநிவாஸ பிரஸ்,
திருவையாறு.

1947

# பொருளடக்கம்.



பரமாத்துவித சித்தாந்த போதகாச்சாரியர்

**ஸ்ரீலஸ்ரீ. அருணாசல சுவாமிகள்**

உ

சிவமயம்.

॥ श्री अरुणाचलज्ञानदेशिकेन्द्रमहागुरवे नमः ॥

# முகவுரை.

—:o:—

வண்மை யுகந்த வருளால் வரந்தரு மாதவனுர்
உண்மை யுணர்ந்தவ ரோதுவிக்கின்ற வுரைவழியே
திண்மை தருந்தெளிவொன்ருற் றிணியிரு ணீங்கியநாம்
தண்மை கழிந்தனந் தத்துவங்காணுந் தரத்தனமே.

[ஸ்ரீமத் வேதாந்தகுரு]

**விண்ணப்பம் :**

பாதத்துவத்திற்கும் உலக உயிர்களுக்கும் உண்டான ஒற்றுமையை 'தனது' என்றும் 'அன்னியம்' என்றும் பாரபக்ஷமின்றி உள்ளவாறு அறிந்துகொள்ளவேண்டுமென்று ஆவலுள்ள மக்களுக்கு மாம்பழம் வாங்கப்போகும் ஒருவனுக்கு ஒரு துண்டத்தைக் கொடுத்துப் பழத்தைவாங்க ஆசை உண்டுபண்ணுவதுபோல எனது பரமகுருவின் கிருபையால் கிடைத்த அதிநேர்மையானதும், அநுபவபூர்வமானதும், அதிரஸத்தோடு கூடியதுமான விஷயங்களை எடுத்து அவருடைய கட்டளைக்கிணங்கி 'பரமாத்துவித சித்தாந்தக் கட்டளை' என்னும் இந்நூலை அச்சிட்டு வெளியிடலானேன்.

இவ்வுலகில் இறைவனுடைய சிருஷ்டி பலவற்றில் ஆறு ஆதாரமும் நேராய் நிமிர்ந்து நிற்கவல்லது மனிதப் பிறவி என்பது ஒன்றே. இந்த மனிதப்பிறப்புக்குக் கடவுள் 'பகுத்தறிவு' என்பதை விசேஷமாகக் கொடுத்துப் படைத்திருக்கின்ருர். இந்த அறிவைக்கொண்டு ஒருவன் தெரிந்து

கொள்ளவேண்டிய முக்கிய லக்ஷியத்தைவிட்டு ஆற்றைக் கடக்கக்கொடுத்த தெப்பத்தினைக்கொண்டு கரையேருதே ஆற்ரோடு ஒழுகிக் கடல்புகுவாரைப்போல் கேவலம் வயிறு வளர்ப்பதும், இனம் பெருக்குவதுமே நோக்காகக்கொண்டு வாழ்நாள் முழுவதும் நேர்மையின்றி அலைந்து காலத்தைக் கழிக்கின்ருன் என்ருல் இதை மனிதப்பிறவி என்பதா? அல்லது மிருகப்பிறவி என்பதா ?

இந்த உண்மையான மனித லக்ஷியத்தைத் தெளிவாய் விளக்கிக்காட்டுவதற்கன்ரோ நம் இந்தியத் தாயானவள் வாய்மை, தூய்மை, பொறுமை, இன்சொல், செய்ந்நன்றி அறிதல், பிழை பொறுத்தல், கறவாது கொடுத்தல், வீரம், கருணை, நேர்மை முதலியவைகளை இழை(நூல்)களாகக் கொண்டு திரித்த தெய்வக்கொள்கை யென்னும் பொற்ருலியை,எவ்வளவோ பஞ்சக்கொடுமைகளால் அடிபட்ட காலத்திலும், எத்தனையோ துராக்ரமிப்புகளால் இடிபட்ட காலத்திலும், தம் பிள்ளைகளில் சிலர் நேர்மாருகப்போய் தொடர்பு விடுபட்ட காலத்திலும், நரமாம்ச பக்ஷிணிகளைத் தன்னிடத்தில் சூடிவிட்டகாலத்திலுங்கூட, இழந்துவிட்டாள் இல்லை. ஆதலினுற்ருன் மற்ற மண் பாகத்திற்கும், விண்பாகத்திற்கும் இன்னும் அழகு செய்பவளாகின்ருள். உலகசமுதாயத்தில் இந்தியாவானது நேர்மையான தெய்வக்கொள்கை என்னும் பொற்ருலியை எந்த ஆபத்திலும் தாங்கிநிற்கக் கழுத்தாய் அமைந்திருப்பதொன்ருலேயே மண்ணுலகை ஈன்ற சிருஷ்டியின் குறிக்கோள் நிறைவேறியது எனலாம்.

**நூல் எழுதக் காரணம் :**

மக்களுக்குள்ள அகஉணர்ச்சியானது புற அறிகருவிகளான கண், மூக்கு, காதுகளைப்போலவும், மிருகாதிகளின் அகவுணர்ச்சிபோலவும், இளமையிலிருந்து முதுமை வரையும

ஒரேபோக்குள்ளதாக அமையாமல் நாளுக்குநாள் ஒன்ருே டொன்றைக் கூட்டிப் பெருக்கிக் கழித்து வகுக்கும் முறையில் பெருகிவளர்வதாய் அமையப்பெற்றிருக்கின்றது. பூதேவியான அன்னையானவள் அறிவுபடைக்கத்தக்க நேரான சில மக்களைப் பெற்று ஒரு விதத்தில் சந்தோஷத்தை அடைகின்ருள். அவளே சில அறிவில்லாத மக்களைப்பெற்றும், அறிவு படைத்த பெருமக்களைச் சாகக்கொடுத்தும் ஒருவிதத்தில் கஷ்டத்தையும் அடைகின்ருள். இந்தத் தாயின் கஷ்டத்தை யும், பரிதபிக்கக்கூடிய நிலைமையையும் அறிஞர்கள்கண்டு மிக்க வருந்தத்தக்கதாயிருக்கின்றது. இதுவும் தாய்க்கு ஓரள வுக்கு ஆறுதலைக்கொடுப்பதாகவும் ஆகின்றது.

இப்படி தாய்க்குண்டான அந்தப் பரிதாப நிலையையும், மக்களுக்குண்டான மிருகவியற்கையின் நீங்கிய அகஅறிவின் வளர்ச்சியையும் கண்ட புலவர்பெருமக்களும், சித்தர்களும், யோகிகளும், ஞானிகளும் தாயின் துர்தசையால் உளதாகிய கேட்டினின்றும் மக்களை விடுதலைசெய்துவிடலாமென்னும் தைரியத்தினுலும், கருணையினுலும், தாங்கள் காணுமையைக் காணும்(மரணத்தைச்சந்திக்கும்)முன்னரே கண்ட உண்மை யைச் சகோதரர்களுக்குச் சொல்லிவிட வேண்டுமென்று வீட்டில் கருத்தைவைத்து ஏட்டில் கையை வைக்க ஆரம்பித் தார்கள்.

## ஆதார நூற்கள் :

இவ்வாறு தேசீய வீட்டில் (விடுதலையில்) கருத்தைவைத்து ஏட்டில்வைத்த கைகள்தான் மக்களை நேர்மையான முறையில் உலகநெறிப்படுத்தும் தேசீய நூல் களாகிய வாக்குண்டாம், நல்வழி, ஆத்திசூடி; வெற்றி வேற்கை, திருக்குறள் முதலியவற்றைக் கண்டெடுத்தன.

அவ்வாறே ஆன்ம விடுதலையில் கருத்தைவைத்து ஏட்டில் வைத்த கைகள்தான் திருவாசகம், திருவாய்மொழி, தேவாரம், உபநிடதம், கீதை, பிரமசூத்திரம் முதலியவைகளைக் கண்டெடுத்தன.

நல்வழியிற்சென்ற ஔவையாரவர்கள் ஒரே கருத்தமைந்த இரு பிரிவாயுள்ள பிரமாண நூற்களான

'தேவர் குறளும், திருநான்மறை முடிபும்,
மூவர் தமிழும், முனிமொழியும்,—கோவைத்
திருவா சகமும், திருமூலர் சொல்லும்,
ஒருவா சகமென் றுணர்'.

என்ற நவமணிகளையும் நன்கு தெளிந்து பொறுக்கி எடுத்து அழகுபடக் கோத்து உலகத்தாயின் சிறந்த அவயவமான பரத கண்டம் என்னும் கழுத்தில் அழகுபொலிய அணிவித்தனர்.

இந்த நவமணிகளும்கூடி ஒரே கருத்து என்னும் சீரிய அழகொளியைக் குமரியிலிருந்து கைலாயம் வரையிலும் இடையில் எத்தகையபேதமும் தலைகாட்டாதபடி அடக்கி. யாவர் கண்ணுக்கும் மேலான ஒற்றுமை என்னும் அழகொளியைப் பரப்பி ஒரே ஜோதிசொரூபமாய்ப் பொலிகின்றன.

## நூலின் விஷயம் :

இந்நூல்களால் உலகு, உயிர், இறை என்னும் முப்பொருளின் தனி இயல்பும் ஒற்றுமையும் நன்கு போதிக்கப்படுகின்றன. அதாவது மக்கள் உலகத்தோடு ஒட்டிஒழுகுந் தன்மையும், இறைவனோடு ஒட்டிஒழுகுந்தன்மையும், மீண்டும் இதற்குக்காரணமாயுள்ள இறைவன் இவ்விரண்டோடும் ஒட்டிஒழுகுந்தன்மையும் விளங்கக் கூறப்படுகின்றன. கடவுள் உலகுயிரோடு ஒட்டி நிகழ்தல் மற்ற எல்லாப் பொருள்களின் நிகழ்ச்சிக்கும் அஸ்திவாரமாகும். இதைத் தெரிந்தவனே ஆன்மாக்கள் மற்ற இரண்டோடும் ஒட்டி

ஒழுங்குதலை உள்ளபடி சொல்லவல்லவன். அஸ்திவாரபலம் அறியாதவனது பேச்சைக்கேட்டு மேலே பாரத்தை ஏற்றிஞல் ஒருசமயம் விபரீதபலனும் உண்டாகிவிடும். மேற்குறித்த நூலாசிரியர்களோ, எல்லா நிகழ்ச்சிக்கும் காரணமான இறைவன் நிகழ்ச்சியை உள்ளவாறு அறிந்தவர்களாவார். இதனுற்ருன் 'அவர்களும் அவர்களின் நூல்களும் பலவாயினமையால் மயக்குற்று அவைகளில் பேதஉணர்ச்சிகொள்ள வேண்டா'மென்று 'ஒருவாசகமென்றுணர்' என இடித்துப் புத்தி சொல்லுவதுபோல ஔவையார் சொல்லுகின்ருர்.

இந்நூற்களெல்லாம் இறைவனேடு உலகு உயிர்களுக்கு இயல்பாயுள்ள தொடர்பானது காரிய காரணத்தொடர்பென வெளிப்படையாகவே கூறுகின்றன. இதற்கு குடத்திற்கு மண்ணும், நூலுக்குச் சிலந்திப்பூச்சியும், பணிக்குப் பொன்னும், எழுத்துக்களுக்கு அகரமும்போன்றவன் உலகத்திற்கு இறைவன் என திருட்டாந்தங்களும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. எனவே உலகுயிர்கள் காரியமென்பதூஉம், இறைவன் உபாதான காரணன் என்பதூஉம் பெறப் பட்டன. இதனுல் கடவுளைத்தவிர உலகப் பொருள்கள் இல்லையென்பதுஉம், கடவுளிருப்பைக்கொண்டே அவைகளும் இருக்கின்றன என்பதுஉம் முறையே சூக்குமமாயும், தூலமாயும் பெறப்பட்டன.

### பிரமாண சுருதிகள் :

உலகம் காரியம், கடவுள் முதல் காரணம் என்பதற்கும், அதனுல் இறைவன் இவ்வுலகமாய் இருக்கிருன் என்பதற்கும் பிரமாண சுருதிகள்—

सदेव सौम्य इदं अग्रे आसीत् । एकमेव अद्वयं सदा स ऐक्षत बहु स्यां प्रजायेय । तदात्मानं स्वयमकुरुत । मृदा कुम्भादिकं यथा।

*

ஸதேவ ஸௌம்ய இதம் அக்ரே ஆஸீத், ஏக ஏவ அத்வயம் ஸதா, ஸ ஐக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய, தத் ஆத்மானம் ஸ்வயம் அகுருத, ம்ருதா கும்பாதிகம் யதா.

[சத்தான கடவுள் ஒருவனே முன்னர் இருந்தான். அவன் 'எல்லாமாக ஆவோம்' என எண்ணினுன். அவன் தானே தன்னை உலகமாகச் செய்துகொண்டான், மண்ணுற் குடாதிகளாறுற்போல.]

எனப் பூர்வாச்சாரியர்கள் அனைவரும் பாஷ்யம் கண்ட பிரதானமான திருநான்மறை முடிபுகளில் கூறப்படுகின்றது.

இவற்றை யெல்லாம் கசக்காமல் வடிகட்டித் தெளிய வெடுத்துச் சொல்வார்போல மூவுலகத்தும் முக்காலத்தும் முற்றும் உள்ள நாக்களுக்கும் மத்தியிலிட்ட அரியாஸனத்துக் கோலுவீற்றிருந்து சொல்லுலகமனைத்திலும் சுருதியாதிமூன்றிலும் நடுநிலையில் செங்கோல் செலுத்தும் பேறுபெற திருநாவைப் பெற்ற பெருமானும், 'ஒன்ருய் உலகனைத்தும் ஆனுய் நீயே' என்றும், 'ஒன்ருய் உலகனைத்தும் ஆனுர் தாமே' என்றும் முன்னிலையாகவும் படர்க்கையாகவும் (தத்பரனுய் சதாசிவனுய்) 'தானும் நானும் ஆகின்ற தன்மையானை' என இறைவனை பொருள்களில் தன்னையும் உடன்கூட்டியும் உள்ளவாறு அருளிச் செய்கின்ருர். மேலும் இப்பொருளில் ஒரு ரஸமான பாகம் சொல்லுகின்ருர். அதாவதும் தாம் காணச்சென்ற பொழுது கடவுள் என்ன செய்துகொண்டிருந்தார்? என்ருல் 'ஒவ்வொரு பொருளுமாக எல்லாப் பொருள்களுமாகிக் கொண்டிருந்தார்' என்று பல பதிகங்களிலும் கூறுகின்ருர். இது, காரியம் காரணத்திற்கு அனன்யம் என்னும் பரமாத்து விதப்பொருளில் எவ்வளவு ஆழமுடையதாயும் ரஸகரமாயும்

இருக்கின்றது. இது பொருளோடு பாராயணம் செய்யும் மக்களுக்கு நன்கு விளங்கும்.

மேலும் கடவுளை முதலாகக்கொண்டு உலகுயிர்கள் உண்டாயிருப்பதனுற்றான் 'ஏததாத்ம்யம் இதம் ஸர்வம்' இவை யெல்லாம் கடவுளைப் பொருளாகக் கொண்டிருக்கின்றன; ஸர்வம் கல்லு இதம் ப்ரஹ்ம இவை யெல்லாம் பெரும் பொருளல்லவா; வாஸுதேவ: ஸர்வம் இதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: எல்லாப்பொருளும் வாசுதேவனுகவே யிருக்கின்றன; என்று அறியும் மஹாத்மா கிடைத்தற்கரியவன்; என்பன முதலிய சுருதிகளும் கீதையும் பொருத்தமுடையனவாயும் இப்பொருளை வலியுறுத்துவன வாயும் ஆகின்றன.

தாழ்வாரை யெல்லாம் தடுத்தாட்கோண்டு வாழ்வார்க்கெல்லாம் வழிகாட்டிய நம்மாழ்வார் பெருமானும் இப்பொருளை அப்படித் தெளிய விளங்க 'நிற்பனவும் திரிவனவும் நீயே மற்றொரு பொருளு மின்றி நீ நின்றமையால்' என்றும், 'தானேயாகி நிறைந்து எல்லா வுலகும் தானேயாய், தானே யான் என்பானுகித் தன்னைத்தானே துதித்து' என்றும், 'பண்ணார்மொழிகள் இன்கவிகள் யானுய் தன்னைத்தான்பாடி தென்னுவென்றும் என்னம்மான்—என்பனவாதி யாகவும் திருவாய் மலர்கின்றார். 'பூதங்களைந்தாகி எனத் தொடங்கி பேதங்களனைத்துமாய் பேதமிலாப் பெற்றியனை' என்பதாதி மணிவாசகங்களும், 'அளவறுபேதப் பலபொருளாயிட்டு எந்த உபாதிக்கும் கரியாய் நின்று எங்கும் வியாபிக்கும் பரமீசன்' என்பதாதி 'தத்துவ அரசனுர் வாக்கும்' ஏனைய மற்றும் இயம்பாத இயங்கி நிற்கப்படுவவெலாம் ஞான கனமாம் இறைவனே' என்பதாதி ஸ்காந்த புராண சூதஸம் ஹிதை யஞ்ஞவைபவகண்ட உத்தரபாக வசனங்களும், 'விரிபொழில் பாராகாயம் அப்பொருளும் தானேயவன்' என்பதாதி பேயம்மையார் வாக்குகளும் சிதாத்மைவ ஹி தேவ அந்த:-

स्थितं इच्छावशात् बहि: योगीव निरुपादानं अथ जातं प्रकाशयेत् ।

[அறிவே சொரூபமான கடவுள் போகியைப்போல வேறு முதற்காரணத்தை விரும்பாமல் உள்ளிருந்த அனன்யப் பொருள்களனைத்தையும் வெளியே தோற்றுவித்தார்]

என்பதாதி ஆகம (பெரியோர்) வாக்குகளும் இவைபோன்ற பலகோடி வாக்குகளும் இக்காரியகாரணத் தொடர்பை எவ்வளவு அழகாயும் உறுதியாகவும் விளக்கி அதனுல் இறைவன் இயங்கியல் நிலையியலாயுள்ள எல்லாப் பொருளுமாயிருக்கின்றுன் என்பதையும் தெரிவிக்கின்றன. தமிழ் வேதத்தில் ஆனுன்— ஆனுய்— ஆனது என்ற சொல்லும், ஆரிய வேதத்தில் (**अभवत्**) அபவத், என்ற சொல்லும் இறைவனை எழுவாயாகக்கொண்டு கேட்கப்படுவதால் ஸர்வாத்மகத் (எல்லாமாயிருத்தற்) தன்மையில் சிறிதும் ஐயமில்லை.

ஆயிரம் பாடலால் இப்பொருள் கொண்டாலும் சரி, அரைப்பாடலால் இப்பொருள் கொண்டாலும் சரி, எப்படியாயினும் பிரமாண நூலனைத்தினும் முடிந்த முடிபுக்கு மாறுபட்டு ஒருவாசகத் தன்மையைக் கெடுக்காமலிருந்தாற் போதுமானது.

**மதங்கள் :**

இந்நூற்களைப் பிரமாணமாகக் கொண்டு அத்வைத வாதங்களனைத்தும் இத்தொடர்பை அங்கீகரிக்கின்றன. ஆனுலும் சிறிது ஒன்றற்கொன்று வேறுபாடு உண்டு. தார்க்கிகர் முதலிய சிலபெரியோர்கள் உலகத்தோடு இறைவனுக்கு நிமித்தமாத்திரத் தொடர்புண்டென்றும், உலகப் பொருள்களை சத்பொருள்கள் எனக் கொள்கின்றனர் சில பெரியோர்கள். கடவுள் என்றுலே உலகுயிரும் சேர்ந்த பொருளாகும். அது சூக்குமாவத்தையிற் (பிரளயத்தில்)

தெரியாது. கடவுள் தூலாவத்தை(ஸ்ருஷ்டி நிலை)யை அடைந்தபோது கடவுள் உலகமாகியும் இருக்கும் தன்மை புலப்படும். இவ்விரண்டிற்கும் உண்டான தொடர்பு சரீர சரீரித்தொடர்பு போலும் குணகுணித் தொடர்புபோலும் என்று சொல்லுகின்றனர். இன்னும் சில பெரியோர்கள் இறைவனுக்கும், உலகத்துக்கும் நேர்மையாகச் சொல்லத்தகுந்த ஸம்பந்தம் ஒன்றுமில்லை என்றும், உலகப்பொருள்கள் மயக்கத்தல பொருள்போன்றன, ஆண்டவனே நிர்விகாரி, அவனோடு இதற்குள்ள ஸம்பந்தம் கயிற்றோடு அரவுக்குண்டானதும், கிழிஞ்சலோடு வெள்ளிக்குண்டானதுமான ஸம்பந்தம்போலுமென்றும் சொல்லுகின்றனர்.

இவர்களெல்லாம் தாங்களெடுத்துக் கொண்டதற்கேற்ப உதாரண முகத்தாலும் திட்டவட்டமாக சுருதி யுக்தியனுபவங்களைக்கொண்டு அழுதபடப் பொருளை நிச்சயிக்கின்றார்கள்.

பரமாத்துவிதமானது சுருதியின் முகத்துக் கொடுக்கப்பட்ட மட்குடம், பொற்பணி முதலிய திருட்டாந்தங்களைக் கொண்டு இவைகளுக்குண்டான தொடர்பை நேரான உபாதான காரண காரியத் தாதாத்மியத் தொடர்பெனக் கூறுகின்றது.

### திருட்டாந்தம் :

ஒரே இயல்பாயுள்ள மண்ணானது, திரிகை மேலேற்றி வைக்கப்பட்டபின் முதலில் தாளி, பின்னர் குடம், பின் கலசம் முதலியனவாகவும் ஆகின்றன. தாளி உண்டான பின்னர் அந்த மீதி மண்ணில் குடத்துக்கென வேறொன்றையும் சேர்க்கவில்லை. ஆயினும் குடமுண்டாகின்றது. அப்படியே கலசத்துக்கும் சட்டிக்கும்.

* *

ஒவ்வொரு காரியத்துக்கும் எனத் தனித்தனி விசேஷணங்களைக் காரணத்தில் சேர்க்காததால் அந்தக் காரியங்கள் ஒன்றற்கொன்று வேருக இல்லாமலும் இல்லை. இக்காரியங்கள் பெயராலும் வடிவத்தாலும், பயனுறுவதாலும், விவகரிப்பதனுலும் ஒன்றுக்கொன்று வேருயிருப்பது அனுபவமான விஷயம். கலசம் வாங்கச்சென்றவன் மண்ணுக்கு வேறில்லையென சாலை வாங்கிவருகிறதில்லை யல்லவா?

இவைகள் காரியத்தில் தங்களுக்குள் வேற்றுமையாகவும் யாவும் காரணத்தோடு அனன்யமாகவும் இருக்கும். ஒன்றும் சேராமல் ஒன்றினின்றும் வேறுவேருன பொருள்கள் எவ்வாறு உளதாகுமென்ருல்—அது நிமித்தகாரணனது திருவுள்ளமாகும். குடமுண்டான பின்னர் சட்டியுண்டாக மண்ணில் வேறு ஒன்றும் சேர்க்கவேண்டாம். 'சட்டியை ஆக்குவோம்' என்னும் நிமித்தனது திருவுள்ளம் சேர்ந்தாற் போதுமானது. அது சட்டியாய்விடும். இதுவே காரியங்களுக்கு காரணத்தோடுள்ள அனன்னிய (அபேதம் = ஒற்றுமை)மாகும்.

இதுபோலவே இறைவன் மண் முதற்கொண்ட ஒவ்வொரு பொருளுமாவதற்கு, தன்னேடு யாதானுமொன்றைச் சேர்த்துத்தான் ஆகவேண்டுமென்பதில்லை. உபாதனமே எங்கும் இருக்கின்றது. இனி அது காரியமாதற்கு அனுகூலமான எண்ணம் ஒன்றே தேவை. ஆதலினுற்ருன் 'ஆவேன்' என எண்ணினுர். 'அப்படியே ஆனுர்' என்று சுருதி கூறுகின்றது. கடவுள் (மண்ணுடையாரைப்போல) இயல்பாய் ஞானனந்த சொரூபனுய் இருப்பினும் மண்ணைப்போல உலகத்துக்கு உபாதான யோக்கியனுகவே இருக்கின்ருன்.

ஆதலால் எந்த இடத்தில் மலை அவசியமோ அந்த இடத்தில் 'இவ்வளவு பாகத்தில் இந்த அளவில் மலையாக

ஆவேனாக' என்று எண்ணுகின்றார், அப்படியே ஆகின்றார். எவ்விடத்தில் கடல்வேண்டுமோ அங்கு 'இவ்வளவிற்கு கடலாக ஆவோம்' என எண்ணுகின்றார். எவ்வளவுக்கு வானம் எவ்வளவில் எவ்விடத்தில் மண் இன்னும் எவ்வெவ் விடத்தில் எவ்வெப் பொருள்கள், எவ்வெவ்வளவிற்த, எவ் வெக்காலத்திற்றோன்றி எதுவரையும் நிலைத்திருக்கவேண் டுமோ அப்பொருள்களை அவ்வாறு ஆக்குவதற்காக 'ஆவேன்' என்றால் போதுமானது. இதைத் திருமூலனாரும் 'குசவனைப் போல் எங்கள் கோன்நந்திவேண்டில் அசையில் உலகம் அது வதுவாமே' எனக்கூறுகின்றார். இங்கே அசைதல் அதுவாகும் எண்ணம். 'தன்னிதயமே ஸகலமும்' என்ற பிரமதேவனார் வாக்கும் இதை வலியுறுத்துகின்றது.

இவ்வொற்றுமையையே இங்கு மேலான ஒற்றுமை என் கின்றோம். காரணம் ஒன்றானதால் தாளியும், குடமும், கலச த்துக்குள் புகாது. கலசந்தான் தாளிக்குள் புகவேண்டும். ஆதலின் இது பேதமதம் போல மரியாதையையும் கடவாது, எல்லாப் பொருள்களுமிருத்தலால் யாவையும் மெய்யே யென்று நம்மாழ்வார் சொல்லுவதால் பரமாத்துவிதத்தில் பேதமும் அன்வயிக்கும் (பொருந்தும்). இறைவன் மண்போன்று உபாதானமாவதோடு குயவனாரைப்போன்று சேதனனாயுமிருத்தலின் அவருடைய 'ஆவோம்' என்ற எண் ணத்தை நானாபேதத்துக்கும் துணையாகக்கொண்டு தானே எல்லாமாயிருத்தலின் மண்ணைத் தவிர அணுமாத்திரமும் தனக்கெனக் காரியங்களுக்குப் பொருள் வேறின்மையின் ஸதஸத் விலக்ஷண அநிர்வசனீயபாவப் பொருள் உலகம், இறைவனொருவனே உள்பொருளெனக்கூறும் மித்யாவாதக் கொள்கையும் இப்பரமாத்துவிதத்தில் பொருத்தமுடையதா யிருக்கிறது. மண்ணானது அவஸ்தா வேற்றுமையாகவாவது

குடமாக நிகழ்ந்து கொண்டிருத்தலினாலும் குட சத்தி உபாதானத்தைப் பற்றவே முக்காலத்தும் நிகழ்வதாலும், ஒன்றுக்கொன்று பொருந்துமாறு விசேடணமாகக்கூறும் விசிட்டாத்துவிதமும் இதில் பொருத்தமுடையதேயாகும்.

இங்ஙனமாக எல்லா அத்துவிதங்களுக்கும், நூல்களுக்கும் நடுநிலையில் நின்று யாவரையும் எவற்றையும் தழுவிக் கொண்டு இந்த பரமாத்துவிதம் நடுநிலையில் ச்ருதியாதி மூன்றையும் நன்கு வளப்படுத்தும். இது நூலைப் பாரபக்ஷமின்றித் தடவிப்பார்க்கும்பேருள்ளங்களுக்கு நன்கு புலனும்.

இது காரிய காரண அனன்ய சத்கார்யவாதமாதலின் உண்மையாகவே இல்லாத பொருள்கள் அனைத்தும் உண்மையாகவே இருந்து விளங்கி விவகரிக்குமாறு கடவுள் அவைகளுக்குக்காரணமாயிருக்கின்றார் என்பதுவே அதன் முடிந்த பொருளாகும்.

இல்லாத பொருள் இருக்குமாறு கடவுள் இருப்பதெப்படியென்றால், உண்மையாகவே அடிபெயர்த்து வைத்துப் போகாதமக்களெல்லாம், உண்மையாகவே போகுமாறு அவ்வளவு பொறுப்புவாய்ந்த போகும் தன்மை எருதுகளிடத்துக் காணப்படுகின்றது. வண்டி ஏறி பழநிக்குப் போனார்கள் என்றால் அடியெடுத்து வைத்தோ நகர்ந்தோ சிறிதும் மக்கள் போகவில்லை. ஆனாலும் போனார்கள். பாதையில் 10 மயிலுக்கு அடி பெயர்த்துவைத்தது எருதுகளே. அதைத் தங்கள் போக்குக்கும் உண்மையாகக் காரணமாய் கொண்டதனால் தான் இவர்கள் உண்மையாய் பழநிக்குப் போனவர்களானார்கள், அடிபெயர்த்துப் போகாதவர்கள், போனார்கள் என்றால் விரோதமில்லையா? என்றால் போகாதவர்களுக்கு, அடிபெயர்த்துப் போகாதவர்கள் என்று பொருள். போனவர்

களுக்கு விடையின் போக்கையே தன் போக்காகவும் கொண்டவர்கள் என்று பொருள், விரோதமின்மையும் காணலாம். தன்னை அடுத்த போகாதவர்களும் போகுமாறு அவ்வளவு பொறுப்புள்ள போகுந்தன்மை விடையிடத்திருப்பதே விரோதபரிகாரத்துக்குக் காரணமாகும்.

இப்படி உலகப் பொருள்கள் காரியமாதலால், உள்ள பொருள்களுமாகும், இல்லாத பொருள்களுமாகும். எப்படியென்றால் உபாதான காரணமான கடவுளானவர் தனக்கென வேருக இருப்பில்லாத மாயை முதற்கொண்ட உலகப் பொருள்களனைத்தும் உண்மையாகவே இருப்போடு இருந்து விளங்கி எல்லாவிதத்தாலும் விவகரிக்கப்படுவதற்குத் தக்கவாறு அவ்வளவு பெரிய பொறுப்பு வாய்ந்த இருப்போடு கடவுளொருவர் இருக்கின்ருர் என்பதுவே கடவுளிருக்கும் பூரணநிலையாகும். இதனுலே உண்மை இன்மை முதலிய எல்லாவிவகார விரோதங்களும் நேர்பட்டுவிடுகின்றன.

சுருதிகளில் காரிய உலகத்தையே உண்டு இல்லை எனக் கூறுவதன்றி காரணமான கடவுளை அன்று என்பது, அப்பர் சுவாமிகள் இருநிலனுய் தீயாகி நீருமாகி என்றும், மண்ணில்லை, விண்ணில்லை, மலையுமில்லை என்றும் வாய்மலர்ந்தது கொண்டும் இவ்விடயத்தில் ஒப்பெடுத்துக்கொள்ளத்தக்கது.

நூலகத்தில் இவ்விடயங்களெல்லாம் சில உதாரணமுகத்தாலும் சுருதி, யுக்தி யனுபவங்களைக் கொண்டு விளக்கப்பட்டிருக்கின்றன. மதஸம்பந்தமான சில விடயங்கள் சில வெளிப்படையாகவும் சில சூசனையாகவும் சில அர்த்த கர்ப்பமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. பொதுவாகப் பிண்டப் பொருளாகவே ஆராயப்பட்டிருக்கின்றது. சில விடங்கள் விசேடமாகவும் ஆராயப்பட்டன. இன்னும் இப்

***

பொருளில் சில பிரகரணங்கள் சேர்த்து எழுதவேண்டிய விடயங்களும் இருக்கின்றன. விளக்கத்துக்காக எடுத்ததை மீண்டும், எடுத்தாளப்பட்டதும் உண்டு. மனக்கண்ணுக்கும் முகக்கண்ணுக்கும் பல தெரிந்தும் நகக்கண்ணைந்திருந்தும் காலதேச வர்த்தமானங்களைக் குறித்து எழுதுகோலை அதிகம் உபயோகிக்கவில்லை.

**குருநாதன்:**

எதற்குமீடுபடாத என் வன்நெஞ்சத்தை வளதே மீர்த்துக் கல்லைக்கனிவித்தவா போலப் பக்குவப்படுத்தி அடியனேன் மனதில் இச்சித்தாந்தத்தினை விளக்கப் பதித்து வெளியீடு செய்கவெனக் கட்டளையிட்ட பெருமான் ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணசலசுவாமிகளாவார்கள்.

இவர் புருடாயுள் முடிய (நூறு வயது) வாழ்ந்தவர். இம்மகானை தாங்களும் கண்டு அடிமைபூண்டு அநுபவித்து, என் சிறு வயதிலேயே நான் தவறிப் போகாதவாறு, காட்டிக்கொடுத்தவர்கள் பழனியம்பதி ஸ்ரீ-ல-ஸ்ரீ சாதுசுவாமிகளும், திருஞானப்பொறைச்செல்வரும் தந்தையனையரும் ஆகிய ஸ்ரீ சுப்பையக்கவுண்டர் அவர்களும் ஆவர்.

ஸ்ரீ சுவாமிகளை அடியேன் அடிமைபூண்டு அடுக்கும்போது அப்பெரியார் அப்பரைப் போன்ற தளர்ந்த வயதும் நேர்மையும், வியாச முனிவரைப் போன்ற கருத்த நிறமும் பெருத்தவுள்ளமும், நம்மாழ்வாரைப்போன்ற பரந்த கருணையும் விரிந்த ஞானமுமுடையவராகக் காணப்பட்டார்கள்.

இருமொழிகளிலும் போதியவறிவும், மதநூல்களில் நிறைந்துவழியும் புலமையும், வாக்குவாதத்திற் சமயோசித சாதுர்யபுத்தியும், சுவாநுபவத்தில் என்னாலறிய முடியாத

சமாதி நிலையினையும் பெற்றிருந்தார்கள். மாடமாளிகைகள் கட்டிவைப்பினும் சிரத்தையுடன் பாடங் கேட்காதவர்களிடத்துச் சிறிதுந்தங்கமாட்டார்கள். ஆன தர்க்கத்தோடு சிரத்தையோடும் சாத்திர பாடங்கள் கேட்பார்களாயின் அங்கு குடிக்கக்கூழும் இருக்கக் கூறையும் ஆயினும், கானமுண்டு கல்லின் கீழிருந்து பாடஞ்சொன்னவனைப்போல ஓயாது மிகத்தெளிவாகச் சொல்லுவார்கள். இவர்கையானது காசம் மாசினைக் கண்டறியாது, மூழந்தாளும் ஆடையடுத்தறியாது.

இவர் தம் தனிவரலாற்றில் ஏனைய பெருமையனைத்தும் விரித்துரைக்கப்படும். ஆண்டுக்காண்க. இந்நூலும் அவர் தம் சரிதத்தின் ஓர் பகுதியுமாகும். இப்படியாக, குருநாதருடைய திருவுள்ளமெனும் திருப்பாற்கடலினின்றுஞ் சுருதிசாரமெனுமமுதமானது. அவர் வாக்காகிய மத வழியாய்ப் புறப்பட்டு அடியேனுடைய காதென்னும் வாய்க்கால் வழியோடி வந்து, என்னுள்ளமென்னும் காமக்குரோதாதி துஷ்ட ஜந்துக்களுக்கு நீங்காக்குடியாகவுள்ள பாழுங் களர்க்குட்டை நிலத்திற் பாய்ந்து மீண்டதனைப் புனிதப்படுத்தி இப்பரமாத்துவித தான்யராசி விளைந்ததோ அன்றி அஃதப்படியேயிருக்க, இது விளைந்து அதனல் இதற்கேதாகிலும் மாசு மறு ஏற்பட்டுவிட்டதோ யான் அறியகில்லேன்.

ஆயினும் உத்தம வறிஞர்கள் கூட்டமென்னும் தாம்பு பூட்டி நன்ருக மிதிக்கவிட்டு போகாது பவங்கள் என்னும் காற்றிற்றூற்றிவிட்டுப் போயின போக நின்றவைகளை ஓரினமாய்ப் பரமாத்துவித ராசியாகக் குவித்துச் சீனிவாசப்பதிப்பகமென்னுங் களத்தில் காகிதவடிவக் கோணிப்பையிலிட்டுப் புத்தகமென்னும் வண்டியிலேற்றி அறிவுலகத்திற்கு விடப்பட்டிருக்கின்றது.

இஃதச் சேருங்காலத்தில் சில பேராசிரியர்கட்கனுப்பி னேன். அவர்களுடைய மதிப்பினையும் ஸ்ரீ சுவாமிகளுடைய பழமையான சீடர் பெருமக்களிடத்தும் இப்பொருளைப் பல வாறு வாதித்து அவர்கள் மதிப்பினையும்பெற்று இதனை நிறை வேற்றிக்கொண்டேன்.

மதிப்புரையில் பிறருக்கென்ன தெரிகின்றதோ? என் னளவில் அவர் தம் பெருந்தன்மையே காணப்படுகின்றது. இப்பிறப்பில் என்னையனுரான வரதநஞ்சையனுரை ஒரு முறையே திருமுறையாக்கண்டுசாவி என்னைப்பரிகொடுத்து வந்தேன். அங்கம் என்னைக் களவாண்டதன்றியும் தம்மை யான் கவர்ந்துகொண்டதாகப் பொய்யுரையும் புகல்கின்ருர் கள். இதுதான் உள்ளங்கள்வர் கள்வனுர் பரம்பரையே போலும். முதிர்வு செய்த புதுமைபோலும். இளமையி லேயே கல்வி கேள்விகள் பூத்து முதிர்ம்மையோடவைகளும் பழுத்த பெருமக்களிடமே இத்தகைய பணியுமாமென்றும பெருமையென்னுமிலக்கணம் அமைந்திருப்பதைத் தெளிவா கக் காணலாம். இத்தகைய பெருந்தகைமைகளையே இந்நூல் மதிப்புறைகளின் மூலமாக யான் காண்கின்றேன்.

மதநூல்கள் சம்பந்தமான எல்லாவித வுணர்ச்சிகட்கும் நம் குருநாதரே தாயாகவிருந்தருளினுர்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ முக் தானந்தவடிகளார் அவர்களும் ஸ்ரீ-ல-ஸ்ரீ பண்டித சித. நாராயண சுவாமிகள் அவர்களும் முறையே ஆரியப்பாலை யும் தென்றமிழ்த்தேனையும் கலந்து வார்த்துதவி வளர்த் தருளினுர்கள்.

ஒப்பில் முப்பத்திரண்டறங்களையுமொருங்கே வளர்த்தருள் பெருமகனுகிய உயர்சைவத்திரு T.P.இராமாசாமிபிள்ளையவர் களுடைய கலாசாலைக் கல்விவளர்ச்சியும், வளர்ச்சிக்கான

உடல் வளர்ச்சிக்குரிய உணுவளர்ச்சியுமாகும். அன்னார்க்கு அடியேனுடைய வணக்கமுரித்தாகுக. ஸ்ரீ சுவாமிகள் காலத்திலேயே இந் நூலைப் பதித்திருந்தால் எல்லா விதத்தாலும் எனக்குச் சிரமமின்றி இருந்திருக்கும். அப் பொழுதே இதனை மேற்கொள்ளாத சோம்பலால் இப்பொ ழுது ஏற்பட்டிருக்கும் வருத்தம் காற்றுள்ளபோதே தூற்றிக் கொள் என்னும் பழையோர் மொழியே அழகுற வறிவித்து விட்டது. ஐயா, சுப்பைய கவுண்டர் அவர்களும், என் மாணவருட்சிலரும் இந்நூலினைச் சிறிதாகவாவது (கட்டளைப் பகுதியாவது, எழுதி வெளியிட வேண்டுமென்று தூண்டி யதே இந்நூல் வெளிவருவதற்குரிய சீரிய காரணமாகும்.

இந்நூல் வரையும் காலத்தில் ஒப்பிலியனூர் தேசியத் தலைவர் உயர்திரு. S. நஞ்சப்பக்கவுண்டரும் தம் வாழ்க் கைத்துணைவியாரும் தம் குடும்பத்தைச் சேர்ந்த பெருமக்க ளும் தம்மிடத்தில் வைத்து ராசோபசாரம் செய்து என்னைப் போற்றிவந்தனர். அப்படியே வரம்பாளையம் திருநாவுக்கரசு மடாலயம் ஸ்ரீ மௌனானந்த யோகிகளும் ஆதரவளித்து தேவாரத்திலும் அந்தர்முக விஷயத்திலும் பல மேலான கருத்துகளை எடுத்துரைத்து உதவினார்கள். உருதிராப் பாளையம் திருஞானச்செல்வர் P. மாரிமுத்துக் கவுண்டரும் திருவாய்மொழியில் பல சிறந்த கருத்தமைந்த பாசுரங்களைக் கொடுத்துதவினர். கேள்விச்செல்வத்தோடு மற்றச் செல்வ மும் படைத்த வல்லக்குண்டாபுரம் ஐயா முதலியோரும், அவனாசி செல்லப்பம்பாளையம் திருவுடை அன்பர்களும் கோட்டூர் அண்ணா ந. பொன்னியக் கவுண்டர் முதலிய அன்பர்களும் மற்றப்பெருமக்களும் எல்லா உதவியோடும் ஊக்கத்தைப் பெரிதும் வழங்கினர். இவர்களெல்லாம் செய்த

* * * *

இப்பேருதவி இம்மைக்கும் ஏழேழ்பிறவிக்கும் மறக்கத் தக்கதன்று.

மேலும் இப்படிக் கையால் வரைந்த இந்நூலை அச்சிடும் போது புரூப் சரிபார்த்துக்கொடுக்கும் சிரமத்தை எனக்குக் கொடாது தாமே பொறுப்பை வஹித்து நேர்மையாய் அச்சிட்டுக்கொடுத்த திருவையாறு ஸ்ரீவிலாஸ பிரஸ் ப்ரொப்ரைட்டர் ஸ்ரீ S. விஜயராகவய்யங்கார் அவர்களுக்கும். அச்சாகும் ஸமயத்தில் எல்லாவிதத்தாலும் உதவிய ஸ்ரீ தி.சு. செல்லப்ப சுவாமிகளுக்கும், சங்கத்து சித. நாராயண சுவாமிகளுக்கும். தமிழ்ப் பேராசிரியர் பண்டித வித்துவான் இராம. கோவிந்தசாமி பிள்ளை அவர்களுக்கும்; கையேட்டுப்பிரதியை பலமுறை தெளிவாய் எழுதிக்கொடுத்த ஆருயிர் நண்பர் கோவை K. R. நரஸிம்ம மூர்த்தி அவர்களுக்கும், எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலில் எனது மறதியால் ஏற்பட்டிருக்கக்கூடிய மாசு மறுக்களை தயவுடன் எனக்குத் தெரிவிக்கவேணுமாய் எம் நண்பர்களுக்கும், அறிஞர்களுக்கும், வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இப்படியாகப் பலவிதத்தாலும் உதவிய அன்பர்களுக்கும், இதை சிரத்தையுடன் கேட்போர்க்கும், படிப்போர்க்கும் குருநாதன் திருவருளாலும் பரமாத்துவிதமான பரமாத்துமாவின் திருவருளாலும் பரமாத்துவித ஞானமுண்டாகி எல்லாநலங்களும் இம்மை மறுமைப் பேறும் பூரணவிடுதலையும் எளிதில் பெறுமாறு இந்நூலை இடையூறின்றி முடிப்பித்து உலகுக்குக் கொடுத்த அம்பிகாபதியின் திருவருளை ஒன்றிய கருத்தோடுளங்கொள்கின்றனன்,

அழிவிலாக் குருநாத னருளி னுல்யாம்
அல்லாத வழிகளிலும் நல்லவையும் கண்டோம்
ஒழிவிலா விருமொழியி னுள நூல்கட் கெல்லாம்
ஒத்தபொருள் நம்பரம வத்துவிதப் பொருளே
கழிவிலாப் பொருளெனவும் 'ஆனுய்' என்றப்பர்
காட்டுதலால் மட்குடம்போல் ஒன்ருதல் கண்டோம்
வழியலா வழிகடந்தோம் வாழ்வெல்லாம் பெற்ருேம்
வழக்கிலா வொற்றுமையில் சழக்கற நின்ருேமே.

திருத்தேவ. பழநியப்பக் கவுண்டர்,
திருவேடசேந்தூர்.





பரமாத்துவித சித்தாந்த ஸ்தாபகாச்சாரியர்

திரு. தேவர் பழநியப்பக் கவுண்டர்

௨

சிவமயம்.

திருவையாறு அறுபத்துமூவர் மடாலய அதிபர்

உயர்திரு. பண்டித சங்கத்து. சித. நாராயணசுவாமி

அவர்கள் இயற்றிய

## சிறப்புப் பாயிரம்.

---

மலர்தரத் திகழ்வுறு மூலகத னிலையினைக்
காணிய முயன்ற மாணிய லறிவினர்
அறிவுறு வனவென அறிவறு வனவென
இருதிறத் தொடுமின் றிலகுறக் காணுச்
சிறுவ னியக்குறுந் தேரினை நோக்கி
இவனித் தேரினை யியற்றியோ னல்லன்
தேரினை யியற்றியோன் றோர்தரின் வேறென
உளங்கொளல் போல வுயிருறை யுடன்முனும்
உலகினை யாத்த உணர்வுரு மெய்ப்பொருள்
உண்டுவே றெனவே கண்டன ரன்றியும்
இறையென மிளிர்தரு மறையினைத் துருவியும்
உரம்பெறத் தெளிந்தனர் நிரம்பிய வுணர்வுறம்
மெய்த்தவர் பலரு முய்த்துணர்ந் துரைத்த
இறையுயி ருலகென நிறைவுறு பொருளினுள்
உலகது தோன்றிய நிலவுறு மிறையும்
மாயையும் வேருய் வருமுத லிமித்த
முன்னிலை யரமென முடித்தன ரொருசிலர்

நாடுறு மூர்ண நாபிபோ லிறையே
வேறற மாயையை மேவிநின் றதனல்
நிமித்தமு முதலுமாய் நிற்குமென் ஞெருசிலர்
உரைத்தனர் வலம்பெற வுரைத்தவம் மாயையின்
முதல்யா தெனவே நுதறரி னதற்கு
முதலிலே மூன்றுஞ் சிதறுத பிலவே
என்றனர் பின்றர வெழுந்தவம் மாயையின்
முதலிறை யாகு மூன்றுமவ் விறையே
என்றுநன் றியம்பிய வென்றிகொ ளுணர்வினர்
தாம்பிடைத் தோன்றும் பாம்பினுக் கவ்வியல்
தாம்பெனப் பணிகட் காம்பொனு மெனவிறை
மாயையின் முதலென வகுத்தன ரவற்றுள்
முன்னதாம் விவர்த்த முன்னிலே யதனை
உன்னலு மரிதே யுற்றவர் மனங்கொளப்
பன்னலு மரிதெனப் பின்னதாம் விகாரமில்
பரிணும முன்னிலே பகர்தனன் றெனவே
பிரமப் பரிணுமம் பெருகிய மாயை
என்றகோட் பாட்டினே யெடுத்துநன் கியம்பிய
நன்னூ லொன்று முந்நூல் பலவும்
ஆய்ந்து மறைமுடி வாய்ந்து சங்கரர்
உடையவர் மாத்துவர் உயர்மேல கண்டர்
சிவஞான போதச் சிவஞான முனிவரும்
உரைத்தபே ருரைகளும் விரித்தநன் நூல்களும்
நால்வராழ் வார்களின் நற்றமிழ் மறைகளும்
துருவியே வர்க்கும் விரிதரு பிரமமே
உலகமாய் விரிந்துநின் றிலகிய தெனுங்கோள்
உண்டென நாட்டிக் கண்டனன் கண்டு
பரமாத் துவிதம் பகருநற் கட்டளே

யெனும்பெயர் சாத்தினன் எழுந்தவந் நூலிடைப்
புகுதுமா மாசினைப் போக்கிப் புரந்தரத்
தந்தன னனன்ய சத்காரிய வாதம்
எனுநூ லொன்றும் யாரவ னெனிலோ
நூல்பல நுழைதரும் வாலறி வுடைய
துறவறப் பெரியோன் கறையறு முளத்தினன்
ஒருபொரு ளொழிய வுறுபொரு ளிலையென
நாட்டிய வுரவோன் வீட்டிய தளையினன்
தேடரும் புகழ்கொளும் போடிப்பட் டித்தவ
அருணு சலமுனி யடிமலர் கதுவிய
அன்பருட் சிறந்த முன்ப னினிமைகொள்
தண்டமிழ் நாட்டிடைக் கொண்டல் வந்துறங்குறும்
விண்டுரூழ் தரவளம் விழுமுற யாங்கணும்
உழவது மலிதரப் பழவிறல் கெழுமுற
வறுமை யிறையெனு மருவி யறிதராக்
கொங்குமண் டலத்தினிற் பொங்குசீ ருடுத்த
வேடசேந் தூரினில் வேள்பாரி யோரி
காரி முதலிய மாரியு நிகர்தராக்
கொடைக்கை யாளர் கொழுமர பதனிடைத்
தோன்றிய செல்வன் ஆன்றநல் லறிவினன்
வடமொழித் தென்மொழிக் கடலிடம் பெறவே
தேறிய புலவன் ஊறிய நட்பினன்
தேவ ரண்ணல் செய்தவப் பயனுய்
யாவரும் புகழ்தர இங்கு வந்துதித்துத்
தழைதரு **பழனிச் சாமிக்**
**கவுண்ட** ரெனும்பெயர்க் கருத்துயர்ந் தோனே.

---

உ
சிவமயம்

மதுரைப் பூங்குடிச் சுவாமிகளின் சீடராகிய
பரஞ்சோதி சுவாமிகள் இயற்றிய

## பாயிரம்.

வத்துவொன்றதுவே முதலும் காரியமாய்
வழுவற வழங்குதல் தன்னை
சித்தமேமகிழ்ந்து பால்கடலுதித்த
தெள்ளமுதென்னவே தெளித்து
வைத்தனன் பரமாத்துவிதக் கட்டளையில்
வழுவற வேடசெந்தூர் வாழ்
பத்தருக்கினிய பணிவினன் பழநியப்பனும்
பாக்கியன் மாதோ.

கவலையை யோட்டி யேரது பிடித்துக் களத்திடை
மலைமலை யெனவே
சிவனுடை யூர்தி யருளினூற் றிரட்டிச் செகமெலாங்
காத்திடு மரபோர்
தவத்தினி லெழுந்த பழனியப் பனுக்குத் தகுதியும்
வாழ்க்கையும் திருவும்
தவமுடன் யோகம் சகலமும் பலிக்கச் சங்கர
ரநுளுவர் மாதோ.

---

சென்னை 'திருப்புகழ் அமிர்தம்' ஆசிரியர்
ஸ்ரீ கிருபானந்த வாரியார் அவர்கள்
இயற்றியது

தலைமைபெறு கோங்கின் தகைமைதிருத் தேவ
கலைபழநி யப்பக் கவுண்டர்—நிலையாய்
பரமாத் துவிதமதைப் பண்புடனே செய்தார்
வரமாப் புனிதவருள் வாய்ந்து.

சிவமயம்.

சென்னை வியாஸர்பாடி பிரஹ்மநிஷ்ட காபாத்திர
சிவப்பிரகாச சுவாமிகளின் சீடராகிய
ஸ்ரீலஸ்ரீ பரமசிவ சுவாமிகள் இயற்றிய

# பாயிரம்.

—:❀:—

இந்நூலாசிரியரும் நானும் இது அச்சாகும் ஆரம்பத்தில் நான்கு நாள் இதுபற்றிய சிந்தனையாகவே விசாரித்தோம். நானும் இதிலுள்ள சிலபகுதிகளுக்குத் துணையாகப் பாதஞ்சலயோக சூத்திரத்திலிருந்து சில மேற்கோள்கள் கொடுத்தேன். தன் பெருந்தன்மைக்கிணங்க, ஆதரவோடு அதைப் பெற்றுக்கொண்டார். முன் கையெழுத்துப் பிரதியைப் பார்த்ததற்கும், இப்போது அச்சுப்பிரதியைப் பார்ப்பதற்கும் விடயம் மாறுவிடினும் உருவமும், விளக்கமும் மிக நன்கமைந்துள்ளது. இதில் சுருக்கமாக இரண்டு விடயம் காண்கின்றோம். 'உணர்ந்துணர்ந் துணரினும் இறைநிலை உணர்வதரிது உயிர்காள்' என்னும் நம்மாழ்வார் திருவடி ஒன்றும், 'இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன், என்றெழுதிக் காட்டொணாதே' என்னும் வாக்கரசர் திருவடி ஒன்றும், ஆக இரண்டும் நூல் முழுதும் அடிச்சுவடு தெரியும்படி ஒவ்வொரு பொருளிலேயும் நன்கு அடி-

வைத்து, மாறிமாறியும், ஜோடியாகவும், நடந்து செல்லு வதைக் காண்கின்றோம். இந்நூலில் எந்த இடத்தில் இத்திருவடிகள் நடனமிடுகின்றனவோ, அந்த இடமே கவுண்டரவர்களின் ஸித்தாந்தமாகிய பரமாத்துவிதம் என் பதையும் கண்டோம். இன்னொன்று:— வடமொழி, தென்மொழியாகிய, இரண்டு கண்களையும் காமாலை முத லிய தோடமின்றியதாக்கி சுத்த நீரால் அவைகளைக் கழுவிப் பரமாத்துவிதம் என்னும் மாணிக்கக் குன்றைக் கண்டு பலருக்கும் காட்டுவதையும் காண்கின்றோம். இந் நூலை வாசிக்கும் ஒவ்வொருவரும், மதவேற்றுமை, பாஷா வேற்றுமை, ஜாதிவேற்றுமை, தெய்வவேற்றுமை, முதலிய வைகளால் பிளவுபடாமல் மேலான ஒற்றுமை என்னும் இத்துறையில் ஒன்றுபடுவர் என்பது நிச்சயம். ஜாதி மதம் என்றும், சைவம், வைணவம் என்றும், ஆரியம், செந்தமிழ் என்றும் பின் விளைவு தெரியாது. ஒருவருக் கொருவர் வாதாடி உயிர்க்கிறுதியும், இந்தியாவின் பண் டையபெயர்க்கிறுதியும் தேடிக்கொண்டிருக்கும் இக்காலத் தில், இதற்குத் தகுந்த சிறந்த மருந்தாய் இப்பரமாத்து விதம் தோன்றியது, 'காலத்தால் செய்தநன்றி சிறிதெ னினும் ஞாலத்தின் மாணப்பெரிது' என்றபடி பேரு தவியாயிருக்கும் என்று நம்புகிறோம். மேலும், இது சிறிதும் அன்று. இது மேலான ஒற்றுமை என்னும் செந்தமிழ்ப் பெயரையுடையதாய், நாட்டை வீட்டை, ஊரை பேரை, உடலை, உயிரைக் கெடுக்கும் எல்லா வேற் றுமையையும் போக்கி, இவ்வனைத்திற்கும் (அடியிலி ருந்து முடிவரையும்) அததற்குத் தகுந்த முறையில் மறி

யாதை கடவாது ஒற்றுமை போதிக்கும் முறையில் நேர்மையாய் அமைந்திருப்பதனால் இது மேலான ஒற்றுமை என்பது சொல் மாத்திரமல்ல பொருளாலுமாம் என்பது நன்கு விளங்கும். இந்நூலில், 'சுயமரியாதையின் ஒழுங்கு, மரியாதையின் முடிவு, மனிதவுடம்பின மேன்மை, அதன் பொறுப்பு என்பதைப் பார்ப்பவர்களுக்கு பரமாத்துவித கிரந்தம் தேசிய வாதிகளுக்கும், கர்மகாண்டிகளுக்கும், எவ்வளவு போராதரவு அளிக்கின்றது என்பதும் நன்கு விளங்கும்.

ஒருபொருளைக்கொண்டு எல்லா விவகாரங்களையும் தராசு முனைபோன்று ஞானநிலை, உலகநிலை இரண்டிற்கும் பொதுவாய் இப்பரமாத்துவிதம் நடுநிலையிலிருந்து பொருத்தமுற அவைகளை ஏற்ற இறக்கமின்றிச் சரி செய்து கொள்ளுகின்றது.

ஒரு மதப்பிடிவாத முள்ளவனுங்கூட இதை இரண்டு தடவை சிரத்தையாகப் படிப்பானாயின் உடனே அந்த மதப்பிடிவாதம் தளர்ந்துவிடும் என்பது உண்மை. தேவாரம், திருவாய்மொழி, திருநான்மறைமுடிவு முதலிய பூங்கொடிகள் தனித்தனி வெவ்வேறு கொம்பைப் பற்றிப் படர்ந்து வெவ்வேறு மணம் வீசாது மேலான ஒன்றைப்பற்றிப் படர்ந்து உலகமுழுதுக்கும் ஆறுதலையளிக்கும் ஒருநறுமணம் வீசுவதற்கு மேலான ஒற்றுமை என்னுமியல்பாயுள்ள இந்தப் பரமாத்துவிதக் கொம்பை எடுத்து நிறுத்தி அப்பூங்கொடிகளையெல்லாம் சிறிதும் ஒடிக்காமல், வளைக்காமல், கிள்ளி எறியாமல்நேர்மையாய்

இக்கொம்பில் படரவிட்டு இது எப்புறமும் சாயாது ஒருவராலும் தள்ளப்படாத முறையில் ஊமுறக் கூறு குத்தி உலகமுள்ளளவும் நின்று நிலவி நேர்மையான பயன் கொடுக்குமாறு நிலைநாட்டிய பெருமை நமதன்பராகிய கவுண்டர் அவர்களுக்கே உரியதாகும். தமிழ் மொழிக்கும் சிறப்பாய் பெருமை கொள்ளத்தகுந்த தொன்றாகும். இதை ஆராய்ந்து நுணுகிப் பார்ப்பவர்கள் மீண்டும் வேறொன்றைப் பாராதவர்கள் என்றுகூடச் சொல்லலாம். எல்லா மதங்களின் உண்மைக் கருத்தும் இவ்வொரு நூலாலேயே நன்கு புலனாகி அவைகளுக்கு உள்ள தாரதம்மியங்களும் எளிதில் புலனாகும். இது எங்ஙனம் கூடுமென்றால் அவைகளை எடுத்து விளக்குவோரின் சுவானுபூதியின் பெருமையினால் என்பார்கள். இப்பரமாத்துவிதம் அறிவதற்கும் அனுட்டிப்பதற்கும் எளிமையாயும் கிடைப்பதற்கு அருமையாயும் பிரயோஜனத்தில் பெருமையாயும் உள்ளதென்பது இதையறியும் ஒவ்வொருவருக்கும் வெளியிடை மலைபோல நன்கு விளங்கும். இதைப் பொதுமக்களும், புலவர்பெருமக்களும் ஒன்றுபட்டு ஆதரித்து அறிந்து நன்மையும், இன்பமும் பெறுவார்களாக.



ஸ்ரீ அருணாசல சுவாமிகளின் பிரதம சீடர்களாகிய
பழநியூர் **சுப்பைய கவுண்டர்**
மஞ்சநாய்க்கனூர் சாமியார் **செல்லப்ப கவுண்டர்**
கோட்டூர் ந. **திருமைய கவுண்டர்**
மூவரும் இயற்றிய

## முகவுரை.

---

இந்நூலின் விடயமாகிய பரமாத்துவிதம் வேத ஆகம புராண இதிகாசங்களுக்கும், பிரஸ்தானத்திரயத்திற்கும் தேவார திருவாசக திருவாய் மொழிகளுக்கும் ஊக அனுபவத்திற்கும் நடுநிலையான சித்தாந்தமென்பது நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது. இந்நூற்களையே பரமப் பிரமாணமாகக் கொண்டு பல சிறந்த அத்துவிதங்கள் உலகத்தில் பரந்து விரிந்துவிளங்குகின்றன. அவைகளுள் ஒன்றற்குப் பிறிதொன்றோடு எவ்வளவுதூரம் உண்டோ அவ்வளவு தூரம் இப்பரமாத்துவிதத்தோடு மற்ற அத்துவிதங்களுக்கு இராது, என்பது இந்நூலை அன்போடு வாசித்துத் தெளிந்துகொள்ளும் பெருமக்களுக்கு நன்கு விளங்கும். இதிலுள்ள ஒவ்வொரு விடயமும் எங்களோடு நன்கு ஆராயப்பட்டது. இது எமது குருநாதராகிய அருணாசல சுவாமிகளால் நூலாராய்ச்சி பூர்வகமாகவும், தியான சமாதி பூர்வக மாகவும், நன்கு தெளிந்து நிச்சயித்துச் சொல்லப்பட்டதாகும் இந்நூலாசிரியர் பள்ளிப் பருவத்திலேயே சுவாமிகளை எம்மால் அடுத்துத் தம் பிள்ளைக்கு அப்பருவம் வரும்வரையும் சுவாமிகளை விடாது தொடர்ந்திருந்தார்.

இருமொழியிலும் புலமைபெற்று அவற்றிலுள்ள வைதிகமான நூல்கள் பலவற்றையும் பாஷ்யாந்தம் சுவாமிகளிடம் நன்கு பயின்ருர். இச் சித்தாந்தத்தைப் பற்றிச் சுவாமிகளிடமே பலதுறையிலும் அழுத்தமாக எங்கள் முன்னிலையில் இவர் வாதித்தார். விசிட்டாத்து விதத்திலாவது மித்யாவாதத்திலாவது இவ்வித்துவிதத்தை அடக்கிவிட முடியுமென்று தன் புலமை முழுவதையும் செலுத்தி பிரம சூத்திரத்தின் நான்கு பாடியங்களையும் விரித்துவைத்துக்கொண்டு இந்த இந்த விடயம் இவ்விவ் வதிகரணத்தில் இந்த இந்த ஆசிரியர் கருத்திலடங்கு மென்று பல ஊகானுபவங்களோடுகூடப் பலநாள் வாதிட்டார். இது இன்றைக்கி பதினேழு வருடங்களுக்குமுன் நடந்ததாகும். அப்பொழுது வளர்த்த கடாய் கையைப் பாய்ந்ததுபோல குரு சிஷ்ய பாவத்தைக்கூடக் கடந்து பேசுகின்ருரே என்று நாங்கள் வருந்தியதுமுண்டு. ஆனல் இப்புத்தகத்தைக் கண்டவுடனே அந்த வருத்தம் போனவிடம் தெரியாது போனலும், அது இருந்த இடம் கூடத் தெரியாது போயிற்று.

இவர் அங்ஙனம் அந்தந்த வாதியாய் வாதித்த தன்மை இந்நூலில் ஒவ்வொரு வாதியமையும் படர்க்கை முன்னிலையோடு விடாது உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில் சேர்த்து அணைத்துக் கூறுவதிலிருந்து நன்கு வெளியாகின்றது. இவர் எவ்வாறு வாதாடினலும் சுவாமி கள் சிறிதும் விட்டுக்கொடுத்தாரில்லை. அதற்குத் தகுந்த ஊகானுபவங்களையும் சுருதியையும் நேர்மையிற் கொடுத்து

ஐயங்களை நீக்கி உற்சாகப்படுத்தினர். மீண்டும் இவருக்கு ஐயங்கள் விட்டபாடில்லை.

அப்படியிருந்தும் ஜீவேச்வர ஜகத் மூன்றும் கூடி யிருக்கும் நிலையை பலபேர் பலவித மாகச் சொன்னாலும் அது ஒன்றுபோலத்தானே இருக்கும்? இதற்காகப் பெரியோர்கள் சொல்லுகின்றபடி யெல்லாம் அம் முப் பொருள் மாறி மாறி அமைந்திருக் கின்றதென்று கொள்ளுவதா? அல்லது அது அமைந்தபடி இவர்கள் அறிந்து சொல்லவில்லை என்று கொள்ளுவதா? அல்லது இவர்கள் சொல்லுவதில் எவர் சொல்லும் முறையில் அது அமைந்திருக்கின்றது? இதை எவ்வாறு தெரிந்து கொள்ளுகின்றது? இவைகளில் ஒன்றும் விவரமாய்த் தெரிந்து கொள்ளப்படாமையினல் யாமும் தான் முப் பொருளிருக்கும் நிலை இப்படி யென்று ஒன்று சொல்ல லாமா? அப்படி ஒவ்வொருவரும் தங்களிஷ்டப்படி சொல்லுவதென்றல் இப்பொருளுக்குத்தான் விலை தலை யில்லையா? அப்பொழுது மரியாதையும் ஒழுங்கும் சூரை க்காற்றிலகப்பட்ட பூளைப்பூப் போலல்லவோ ஆகும்? என்றெல்லாம் பல ஆக்ஷேபங்கள் சுவாமிகள் முன்னிலை யிலேயே இவரால் மீண்டும் எழுப்பப்பட்டன. அதற்கும் சுவாமிகள் சிறிதும் வழிவிடாதவராய் பொருந்துமாறு சுருதி, யுக்தி, அனுபவங்கள் காட்டித் தடுத்துவிட்டார்கள்.

மறுபடியும் இதற்குத் தடையாக வேறுவழியில் ஒன்று கொண்டுவரப்பட்டது. அதாவது— அத்து விதக் கருத்துக்கள் ஒருவழியாகயில்லாமையினல் யாதானு

மோர் அத்துவிதத்தை ஆதரித்தால் மற்றதை நிராகரித்தது போலாகும். அப்பொழுது அவர் மாத்திரம் அவ்வளவு பெரியவராயுண்மை கண்டுவிட்டார்; மற்றவர்களெல்லாம் உண்மைகாணுது பொய்சொல்லி விட்டார்களா? அப்படியாஞல் இதை மாற்றி வைத்துக்கொண்டாலென்ன? ஆதலால் நமக்கு ஒருவர் பழிபாவமும் வேண்டாம் ஒரு அத்துவிதக்கருத்தையும் தழுவவும் வேண்டாம். நாமுமோர் அத்துவிதம் சொல்லவும் வேண்டாம், எந்த அத்துவிதமாயிருந்தாலும் முடிவில் (முத்தியில்) போய் பார்த்துக் கொள்வோம். அதற்காக இங்கு ஒன்றென்று மிரண்டென்றும் பலவென்றும் அடித்துக்கொள்ளுவானேன் "ஒன்றெனில் வீடும் இன்று உண்டேனும் லீலையால், பின்நேயும் சாருமென்றுந்தீபர பெத்தமனித்தமென்றுந்தீபர" என்று அத்துவிதத்திற்கு ஒன்றெனப் பொருள் கூறும் வாதியரையும் விடுத்து, "ஓர் இரண்டேல் இறைக்குற்ற கருணையால் சார்வர் அன்றே இன்று முந்தீபர, சார்தலென் ஜீவர் வீடு உந்தீபர" என்று அத்துவிதத்திற்குப் பொருட்டன்மையில் ஜீவவேஸ்வர பேதம் கூறுவோரையும் விடுத்து இவ்தவாதங்களுக்கும் வாதிகளுக்கும் விரோத மில்லாமல் நடுநிலையில் நின்று தாங்களும் ஓர் அத்துவிதம் கூறும்ல் சமரசமாகச் சாந்தலிங்க சுவாமிகள் அவர் நூற்குப்பாடியக்காரராகிய சிதம்பரசுவாமிகள் முதலிய பெரியோகள் செல்லுகின்றனர். இவ்வாருக நமக்கும் முன்னுள்ள அத்துவிதக்கருத்துக்களில் ஒன்றும் பிடித்தமாக இல்லாவிட்டால் ஒன்றிலும்

பற்றிக்கொள்ளாது சமரஸமாகப் போகும் பேரூர் சாந்த லிங்க சுவாமிகளையாவது பின்பற்றிச் செல்லலாமல்லவா ? என்றும் அதற்குத் தகுந்த புத்தியுத்திகளோடும் கேட்கப் பட்டது அப்பொழுது சுவாமிகளுக்கு எங்கு இதை இவன் கைநழுவ விட்டுவிடுவானோ என்ற அச்சமும் சிறிதுண்டாயிற்று. ஆயினும் ஓய்வொழிவில்லாமல் சமா தானம் கொடுத்துக்கொண்டே வந்தார். இக்கேள் விக்கு சுவாமிகள் சமாதானம் சொன்னதாவது—

இறைவன் நூலான வேதோபநிடத ஆகம கீதைகளும் அவற்றையெல்லாமொன்றுக்கும் பிரம 'சூத் திரமும் (பெரியகயிறும்) முப்பொருளையும் நேரேகண்ட நம்மாழ்வார், நாவரசர் முதலியோரது வாக்குகளும் சந்தேகத்திற்கிடமில்லாதவாறு நேர்மையில் காரியமானது காரணத்திற்கனன்யமென்று கூறும்போது அவ்வாறு அப்பொருளை நிச்சயிப்பதில் என்ன தவறு இருக்கும் ? மேலும் பொருள் நிச்சயத்தை ஒரு சிறந்த சாதனமாகவும் சுருதியே சொல்லுகின்றது. 'எண்ணித் துணிக கருமம்' என் றது இப்பொருளிலுள்ள சிவோகம் பாவனையையும் விட்ட தல்ல, சுருதியில் அந்த மாமறையால் நாடிய பொருளை அழகுற அறுதி யிட்டு அல்லல் பந்தமாம் மயற் பற்றறுத்த மாதவர், எனப் பொருளை அழகாக வரம்புகட்டி இப்ப டித்தான் என நிச்சயிக்கலாமென விளக்கமாகக் கூறப் படுகின்றது. மேலும் " உருத்திரன் மான் முதலாகத் தம்பமீறுயுள பொருட்குச் சான்றாகு மொருவன்றன்னை கருத்துறத்தர்க்கத்தாலும் மானத்தாலும் கண்டவன் கண்

டவன்—தருக்கமான ஞானம் கருத்துற உள்ளவன் உலகி னின்றும் தன்னைத் தன்னாலே வேறுபடக் கழற்றிக்கற்கிரு னென மிகவிளக்கமாகப்பிரமதேவன் கூறினர். கருத் துறத் தருக்கத்தாலும் பிரமாண நூலாலும் பரோக்ஷ மாகக் கண்டவனை கண்டவனென மீண்டும் இப்பொருளில் ஐயமில்லாதவாறு வலியுறுத்தி இவ்வாறு கண்டவனைக் காணுதவன் எனுதே, எனவும் அறிவித்து மேலும் "தருக் கமான ஞானம் கருத்துற உள்ளவன் உலகினின்றும் தன்னைத் தன்னாலே வேறுபடக்கழற்றிக் கற்கிருன்" என்று அனுகூல்மான தருக்கமும் பிரமாண நூலும் கற்றவன் மீண்டும் என்னவெல்லாம் கற்றவனுகின்முன் என்றும் கூறும் பிரமாணவாக்குகளை இன்னும் பல முகாந்தரங்க ளோடும் எடுத்துக்காட்டித் தனக்கு இஷ்டமில்லை யென் முல் விட்டுவிட்டுச் சும்மா இருக்கலாமேயொழிய ஒன்றை நான்கு பேரும் நான்கு விதமாகச் சொல்லிவிட்டார்க ளென்ற காரணத்தால் வேறு மொருவர் அதற்கு மாமு கவோ வேருகவோ பொருள் நிச்சயம் செய்யக்கூடா தென்பதில்லை. இதற்கு அவர்கள் கூறுவதே சாஷியாகும். ஆனல் பிரமாணவாக்குகளுக்கு மாருகவும் வேருகவும் நிச்சயிக்கக்கூடாது என்பது மாத்திரம் உண்மை, என்று இதற்கு முன்னுள்ளவர்கள் கொண்டதற்குமேல் வேறொ ன்றும் கொள்ளவேண்டுவதில்லை. சமாசவாதத்தின் பின் செல்லலாமென்னும் வழியையும் அடைத்துவிட்டார்கள்

மேலும் இவர்களைப்போல நாமும் ஓர்அத்துவிதம் கூறவேண்டும் என்னும் கருத்துச் சிறிதுமின்றி

எதைப் பிரமாணமாகக் கொண்டு அத்துவித வாதிகள் ஒன்றற்கொன்று வேருன பல அத்துவிதம் கூறுகின்ருர்களோ அதையும் இவர்கள் கூறும் ஒவ்வொன்றையும் தனித்தனி சேர்த்து பாரபக்ஷமின்றி உள்ளக்கண்ணுல் அடியிலிருந்து நுனிவரையும் நன்கு தடவித் தடவிப்பார்க்கும்போதெல்லாம் எந்த இடத்தில் சுருதி, யுக்தி, அநுபவத்திற்கும் இவர்கள் கூறுவதற்கும் சிறியபெரிய வேற்றுமைகள் காணப்பட்டனவோ அந்த இடத்திலெல்லாம் அவ்வளவு வேற்றுமைகள் காணப்படாமல் மற்றவைகளோடும் அதிக வேற்றுமையின்றி சுருதியாதி மூன்றையும் வளப்படுத்துமொன்று தானே கைமேலேறிக் கண்பார்க்க நிற்கும் நெல்லிக்கனிபோன்று ஆங்காங்கு இயல்பாய், வெளிப்பட்டுக் காணப்படுமாயின் அதை எவ்வாறு கொள்ளாது விடுவது ? தேடிப்போன மிஞ்சி பொன்மிஞ்சியாய்க் காலிலேயே தானேவந்து மாட்டிக்கொள்ளுமாயின் நான் உன்னைக்குறித்துத் தேடவில்லை நீ வேண்டாமென்று யாராவது உதறித்தள்ளுவார்களா ? இன்னும் உலகப் பொதுமக்களனைவருக்கும் எந்தச் சுருதி, யுக்தி, அநுபவங்கள் முக்கிய பிரமாணங்களாயிருக்கின்றனவோ அம்மூன்றினும் இது நடுநிலையில் நின்று நிலவுவதாய் ஒன்றையும் தாக்காது விளங்குவதாகவுமிருக்கின்றது. மேலும் நாவரசர் வாக்கும் நம்மாழ்வார் வாக்கும் இப்பரமாத்துவிதத்தை வளப்படுத்துவதாகவுமிருக்கின்றன என்றும் இன்னும் இவைபோல்வன பலவும் இப்பொருளை ஆதரித்துப் போற்றுவதற்குத் தகுந்த காரணங்களாய் எடுத்துச்

சுவாமிகளால் நன்கு விளக்கிக் காட்டப்பட்டன. அதிலிரு ந்து இப்பொருளில் இவர் அமைதிபெற்ருர். பின்னர் இப்பரமாத்துவிதத்தை எவ்வளவு தூரம் பிறிதொன்ரூேடு ஒப்பிட்டு ஆராய்ந்திருக்கின்ருர் என்பதை நூலின் பிற் பகுதி எடுத்துக்காட்டும். நூலின் முற்பகுதியானது தத்துவ உற்பத்தி, அவைகளின் இயல்பு, அவைகளின் காரிய காரணங்கள் முதலியவற்றை நன்குவிளக்குகின்றது. அதில் மக்களாக்கை மனித உடம்பின் மேன்மை முதலி யன சர்வசாதாரணமாய் யாவரும் அசிவயம் படித்து அறிந்து பயனுறத்தக்கவைகளாகும் இது பண்டிதர்களுக் கும் வலியதாயிருக்குமாயினும் சாதாரண மக்களுக்கு எளிமையாயுமிருக்கும். பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றன் பிரிவாயுள்ள அத்துவித வாதங்களனைத் தையும் ஒன்ருய் அணைத்துச்சொல்லுவதால் இதுயாவருக் கும் எல்லாநூல்களுக்கும் ஒப்பமுடிந்த பொருளாகும்.

இது மேலான ஒற்றுமையென்னும் தமிழ்ப்பெயரு டையதாய், குடும்ப சகோதர ஒற்றுமை, சங்க ஒற்றுமை, தேசபாஷை மத ஒற்றுமை, முதலாக ஜீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கு முண்டான ஒற்றுமைவரையும் நன்கு விளக்கி அவைகளுக்கு தகுந்த ஆதாரவளித்து அவற்றின் மரியாதையைக் காப்பாற்றுவதால் இது பரமாத்துவித மென்பது சொல்லாமலேயே நன்கு விளங்கும். இன்னும் சிலமுக்கிய நூல்கள் ஆசிரியரால் எழுதப்பட்டுள. சீக்கிரம் அவைகளும் வெளிவருமாயின் அறிவுலகத்திற்குப் பேரு தவியாயிருக்கும். இத்தகைய ஒரு பெரிய சித்தாந்தக்கருத் தமைந்த நூல் வெளிவருமாறு எல்லாவிதத்திலும் உதவிய பெரியோர்களுக்கும், நல்ல முறையில் அச்சிட்டுதவிய ஸ்ரீநிவாஸ பிரஸ்ஸாருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

---

உ

சிவகுகமயம்.

திருவையாறு அரசர்கல்லூரித் தமிழ் விரிவுரையாளரும்
தருமபுரவாதீனத் தமிழ்ப்புலவரும் ஆகிய
பண்டித வித்துவான் திரு. சிவ. இராம. கோவிந்தசாமி பிள்ளை
அவர்கள் இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

## வெண்பா.

1 அத்துவித நற்கலைக ளாய்ந்தவரு ணாசலப்பேர்
சித்துருவ னன்றருளிச் செய்பரம—வத்துவிதச்
சித்தாந்தக் கட்டளையைத் தேவ பழனியப்பன்
சித்தாந்த மாச்செய்தான் தேர்ந்து.

2 வேடசெந்தூர்த் தேவணன்செய் மெய்த்தவத்தான் வந்துதித்
நாடரிய செந்தமிழ்தேர் நாவலவன்—சேடனனி [தோன்
தான்பரவுஞ் சித்தாந்தத் தண்டமிழ்நூல் கண்டனன்சீ
மான்பழனி யப்பனு மன்.

3 வீர மூயர்பயிர வக்குலத்து வேளாள
தீரன் பழனியப்ப தேவணன்சேய்—சீரனன்ய
சற்கார்ய வாதமெனுந் தண்டமிழ்நூ லாக்கினனெஞ்
சிற்பரனைச் சிந்தையிருத் தி.

4 மேற்கோள் பலவற்றை மேவிடுமா வேண்டுமிடத்
தேற்கபழ னிச்சாமி யேந்தலிவன்—பாற்படுநெய்
யாமிறையைத் தேர வத்துவிதக் கட்டளைநூ
லாமிதனை யாக்கின னுய்ந்து.

5 துங்கமுறு தொல்கலைக டோய்ந்தாயுந் தூய்மைமிகு
கொங்குவே ளாண்குலத்துக் கூர்மதியன்—சங்கநூல்
சங்கையின்றித் தேர்ந்த தமிழ்ப்பழனிச் சாமிவேள்
பங்கமிலிந் நூற்பதித்தான் பார்த்து.

6 தண்டமிழ் மூாரியந்தேர் தக்கோன் பழனியப்பன்
அண்டருந் தாம்பரவ வச்சதனிற்—கண்டளித்தான்
சீர்பர மாத்துவிதச் சிந்தாந்தச் செந்தமிழ்நூல்
ஏர்பெறுமா ருயவினி தே.

7 ஆரியமுஞ் செந்தமிழும் ஆயும் பெருநலத்தோன்
சீரியநல் லத்துவிதந் தேர்கலைஞன்—நேரியதாஞ்
சாத்திரமுந் தோத்திரமுந் தங்குபழ னிச்சாமி
சாத்திரிதான் வாழி தழைத்து.

---

உ

दक्षिणामूर्तये नमः।

சென்னை வியாசர்பாடி கரபாத்திரசிவப்பிரகாச சுவாமிகள்
மடாலயத்தலைவர், உபயபாஷாப்ரவீணர்

## வித்வான். சுவாமி. முத்தானந்தா அவர்களியற்றிய

## சாற்றுப்பா.

ஆசிரிய ரெல்லார்க்கு மான கருத்திதுவென்
ருசிரிய நற்பரம வத்துவிதம்—பேசும்வகைக்
கட்டளைநூல் யாத்தான் கருது தமிழ்ப்புலவன்
சிட்டன் பழனியப்பன் றேர்ந்து.

---

ஓம்

சிவகுருவே போற்றி.

உடுமலையைச்சேர்ந்த மானுப்பட்டிக்கிராமம்
பெருநிலக்கிழவரும் தமிழ்ப்புலவரும் ஆகிய உயர்திரு.

## K. குப்புசாமிக் கவுண்டர் அவர்கள்

இயற்றிய

# நூன்முகம்.

—◇●◇—

அகவற்பா.

கடல்புடை யுடுத்த நெடுநில மகட்குக்
கண்ணென மிளிரும் புண்ணிய மிக்குயர்
பரதகண் டத்தின் பற்பல பகுதியுட்
சீர்தனிற் சிறந்த தென்றமிழ் நாட்டின்
றென்பாலோங்குஞ் சேரகொங் கதனுட்
கங்குலும் பகலுங் கண்டுணர் வரிதெனப்
பொங்கொளி விசும்பிற் புயறரு மாரியின்
நீர்தரு செழிப்புடன் நிலம்படு வளனுங்
கார்தரு விளையுளுங் கண்டனர் வியப்புறா உஞ்
செல்வம் நிறைதிரு வேடசெந் தூரினுட்
சான்றோர் பலருடன் றருக்க நூலாய்ந்தும்
அறவினை யாதெனிற் கொல்லா நெறியெனு
மறைமொழி கடவா மாண்புளோ ருடனும்
நிலையிலா யாக்கையி னியல்புணர்ந் தருளின்
கலையெனுந் தத்துவங் கற்றுணர் குழுவுடன்
கூடியே மகிழ்வுறாஉங் குணநல முடையோன்
பவநெறி யகற்றும் பண்பமர் ஞானக்
குரவவனு மருணா சலசற் குருவின்

திருவடி தாழுஞ்சென்னியன் றெளிந்த
கலைபல வுணர்ந்த காட்சியன் நட்டார்க்
கருணெறிக் காம்பல வறிவுரை புகன்றிறை
திருவருள் விளக்குஞ் செவ்வியன் றெய்வ
மொழியின் புலமையும் மும்மைத் தமிழும்
நாடியே கற்றுணர் நவைதீர் புலவோன்
பற்பல புலமைப் பண்டிதக் குழாஅத்துஞ்
சொற்பொழி வாற்றுஞ் சொன்னய முடையோன்
அழுக்கா றவாவெகு ளழுக்ககத் தில்லான்
ஒழுக்கமும் பொறையு மொருங்கமர் தூயன்
பவந்தரு மவிச்சைப் பாற்பட் டயராக்
கலங்குறு மாந்தர்தங் கருத்தினி லிறைவன்
றிருவருட் செயலினைத் தெளிவுற விளக்கத்
தோன்றிய சமயத் தொகுதிகள் பலவாய்
விரிந்துதங் கொள்கையே மேலென நாட்டி
வாதமே புரிந்திறை வழிநெறி யுணரா
திடர்ப்பட் டலைதரூஉ மின்னல் தவிர்ப்பான்
பொன்னும் பணியும் போற்பிரி வின்றியும்
மண்ணே கலசமாய் மருவிய தெனவும்
காரணப் பொருளே காரிய மாகி
உலகு யிரிறையெனு முயர்முப் பொருளாம்
வேற்றுமைப் படாது விளங்குறு நிலையைக்
கையுறு நெல்லியங் கனியெனக் காட்டி
அப்பர் தேவாரமும் ஆழ்வார் மொழியுடன்
உபநிடதக் கருத்தோங்கித் திகழச்
செய்தனன் பரமாத்துவிதப் பெருநூல்
திருத்தே வண்ணறன் செய்தவப்பயனும்
பழனியப்பன் னெனும் பண்புயர்ந்தோனே,

உ

பாவலரும் நாவலரும் புலவரேறுமாகிய தமிழ்ப்பேராசிரியர்

அ. வரத நஞ்சையனார் அவர்கள்

இயற்றிய

# பரமாத்துவித சித்தாந்தத்தின்

# மதிப்புரை.

——:⚘:——

அளப்பரும் பரப்பினகன்றாழ்ந்து நிரம்பிய செந்தமிழ், ஆரியமெனும் இருமொழிப்பெருங்கடல்களுண் மூழ்கிமிக்க ஆழத்திற்செறிந்துகிடந்த அரும்பெருந் தத்துவ நுட்பங்களாம் விலைவரம்பறியாப் பன்மணிகளையும் கூர்த்தநுண் மதிப்புலமையாம் கைகளால் அவ்வாரிகளினின்றும் நிறைவுறவாரிக்கொணர்ந்து, அத்துணை ஆற்றலின்றிக் கரைப்புறத் துலாவித்திரியும் நம்மனோர்க்கு அன்புடன் வழங்கி இருமையின்பமும் எய்துவித்த இந்நூலாசிரியர் எந்நாட்டினர்? (எந்த நாட்டினர்) என வினவுவோர்க்கு 'எந்நாட்டினர்' (எமது தமிழ்க் கொங்குநாட்டினர்) என இறுமாப்போடு விடையிறுப்போம். மீண்டும் அவர் இந்நூலில் 'என்னாட்டினர்'? (என்ன சாதித்தனர்) என்போர்க்கு, வடமொழி வேதம், உபநிடதம் முதலிய தலையாய பிரமாணங்களானும் தமிழ்மொழியில் தேவார திருவாசகங்கள் திருவாய்மொழி, திருவள்ளுவர் பொதுமறை ஆகியாய தலைசிறந்த மேற்கோள்களானும் சமயங்களாற் போதரும்

சிக்கல்களை அறக்களைந்து, சமரசம் ஓங்க உயிர்கள் இறைவனை முறையான் வழிபட்டு அந்தமிலின்பத்தழிவில் வீடடையும் செந்நெறியைக் கிளந்தெடுத்தோதித் திறம்பட **பரமாத்து விருந்தை** நிலை நாட்டினர் எனவும் செப்புவோம். இந்நூலாசிரியராய இருமொழிப் புலவர் பெருமான் திருத்தேவ பழநியப்பனார் தாம் இயற்றிய இக் கட்டளையுடன் 'இதற்கோர் ஆய்வுரை தருக' எனப் பிறிதோர் கட்டளையும் எனக்கு விடுத்தனர்.

காய்தல், உவத்தல் அகற்றி ஒருபொருளை ஆய்தல் அறிவுடையார் கடன் ஆதலின், யான் அங்ஙனம் நடு நின்றாராய்ந்து துணிபுரைக்கும் நுண்மாணுழை புலமுடையேனுமல்லேன். கற்றதூஉம் ஒருமொழி, கற்றவையும் ஒரு சில; அவற்றையும் என் முதுமை தன்நண்பனும் மறதிக்கு வழங்கிவிட்டது. அன்றியும் இவ்வாசிரியர், இதன் முன்னரே தமது வியத்தகுபுலமையாலும் தன் பெருமையுணராது சிறிது கற்றோர் மாட்டும் மிக்கப் பணிவுடைமை, இன்சொல் கூறல், அன்புமிகுந்து எவரையும் நட்டோராக்கும், எளிமை முதலிய பெருமைப் பண்புகளாலும் எதற்கும் ஈடுபடாத என் வன்னெஞ்சத்தை எளிதே கவர்ந்து தன்வயத்ததாக்கிக்கொண்டனர். மதிப்புரை (புத்திக்குற்றம்) உற்று இங்ஙனம் இருக்கும் யான் இதற்கு மதிப்புரை கூறல் யாங்ஙனம் இயலும்? எனினும் இயன்றவாறு இந்நூலை ஆய்ந்து கண்டவுண்மைகளை அவர் கட்டளைக்கஞ்சி சொல்லத் துணிகின்றேன்.

அத்துவித மென்னும் வேதமொழியின் நகரம், இன்மை, அன்மை, மறுதலையென முத்திறப் பொருள் தருதல் பற்றிப் பிரமமொன்றே உளது என இன்மைப் பொருள்கொண்ட கேவலாத்துவிதி (வேதாந்தி) களும், அன்மைப் பொருள்கொண்டு ஒன்று போல்வதாகிய இரண்டு என விசிட்டங் கொண்ட விசிட்டாத்துவிதி (வைணவர்)களும், இரண்டாக நின்று முடிவில் ஒன்றுவது எனப் பொருள்கொண்ட சுத்தாத்துவிதி (சைவர்) களும், இறைவன் வேறு உயிர்க்குலங்கள் வேறு என மறுதலைப் பொருள்கொண்ட துவைதிகளும் சேர்ந்து நால்வராயினர். ஒவ்வொரு சமயியும் தன்றன் சமயமே நிகரறச் சிறந்த தெனக் கூறிப் பிறரை இழித்தலின் சமயவுண்மைபோய்ப் பகைமையும் வேற்றுமையும் மலிந்தன. பண்டைக் காலத்தே பல்வகை வளங்களும் நிரம்பிய இந்நாடு இக்காலத்துச் சீர்கேடுற்றுக் கீழ்நிலையெய்தற்கு ஏற்ற காரணங்களுள் இச்சமயப் பூசலுமொன்றும் என்பதை யாரே மறுப்பவர்? சமயவுண்மைகளனைத்தும் நுனித்துணர்ந்து செம்பொருள் காணவல்லோர்க்கு அரண்செய்து நன்னெறி செலுத்துவனவே யல்லது முரண்விளைத்துப் பகை மூட்டுவனவல்ல. ஒரோவழி முரண்படுவதாகத் தோற்றினும், அஃதும் ஒருபட்சாந்தரமாய் ஒரு வகையிற் பயன் படுவதேயாகும். ஒரு சமய நூலைமட்டும் நெட்டுருப் போட்டு, அதனின் மிக்கப் பிறிதொன்றிலது என்றுரைக்கும் பலர் பொரிமாவைப் புகழும் பொக்கைவாயன்போல்

இவ்வுண்மை யுணர்தல் அரிது. எல்லா சமயங்களும் அவ்வவர் அறிவின் திட்பநுட்பத்தாத்திற்கேற்ப வகுக்கப்பட்டன. ஒவ்வொரு சமயமும் சித்தமுஞ் செல்லாச் சேட்டியனுய முதல்வனது அளப்பரும் பெருமைகளுள் ஒரு சிறு அணுத்துணையளவு உண்மையையேனும் உட்கொண்டுள்ளது எனக் காணின் சமயப் பிணக்கு நேரிட இடனின்றும். இந்நூலாசிரியர் இங்ஙன் சமய ஒற்றுமை காணப் பெரிதும் பாடுபட்டு அதனை நன்குகண்டு நாட்டியிருக்கின்றுரென்பது இந்நூலைக் கருத்துடன் கற்போரறிவர்.

விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தன மென்னும் நால்வகைத் தோற்றங்களையும், எடுத்துக்காட்டி, அனன்ய சற்காரிய நெறிகடைப்பிடித்து சைவ, வைணவ, வேதாந்த சமயங்களின் முதல்வராயுள்ள பெரியோர்களின் அருமைத் திருவாக்குகளை மேற்கோளாகக் காட்டலின் எவரும் முறுமுறுத்தற் கிடங்கொடாது. சூன்ய முதற்காரணம், பரமாணு முதற்காரணம் ப்ரகிருதி முதற்காரணம், மாயை முதற்காரணம். பிரம முதற்காரணம் எனப்பல திறப்படும் உலகப் படைப்புக் காரணங்களில் பிரமமுதற் காரணமே சாதித்து முதல்வனே முதலும் நிமித்தமுமாகிய இரு காரணனுகின்றுன் என முடிபுரைக்கின்றுர்.

தொடக்கத்தே, பதி, பசு, பாச நிலைகளைக்கூறிப் பின் 96 தத்துவங்களையும் முறையே காட்டி அவற்றைச் சுருக்கும் வகையுமுணர்த்தித் தாம் கொண்ட பரமாத்து விதப்பொருளைத் திறம்படப் பலவகை எளிய இனியநகைச்

சுவையும் விரவிய உவமானங்களை இடைக்கிடை பெய்து குறிக்கோள் காத்துச் செல்கின்றார். 'விறகிற்றீயினன்' என்னும் ஆளுடைய அரசர் திருப்பாசுரத்தை நன்கு அல சிப்பொருள் புலப்படுத்துகின்றார். பெரும்பான்மையும் நம் மாழ்வாரையும், அப்பர் பெருமானையும் அடிக்கடி புளியம் பொந்துப் பெரியார் புற்செதுக்கும் கிழவனாரெனகூறி உவகையுறுதலால் அம்மெய்யடியார்பாற் பொய்யாவன் புடைப் புனிதத்தன்மை இவர்பாற் காணக்கிடக்கின்றது.

முடிவாக இவர் வேதாந்தத்தையும் சைவ சித்தாந் தத்தையும் விசிட்டாத்துவிதத்தையும் கலந்து ஒருதிரண்ட பொருள் காட்டுகின்றார். இது புதுவதென யாம் கருதிற் றிலேம். அங்ஙனம் ஆசிரியர் கூறவுமில்லை. இப்பர மாத்துவிதம் முன்னோன் முன்னோர் நூலின் முடிந்த முடிபேயாகும் என்பதையே நன்கு விளக்குகின்றார். 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே' எனவும் 'வேதாந்த சித்தாந்தம் வேறென் றூர் கண்களிக்கும்' எனவும் 'சந்ததமுமெனது செயல் நினதுசெயல் யானெனுந் தன்மை நினையன்றியில்லாத் தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த சமரசசுபாவ மிதுவே' என அம்முப்பாற்சமயமும் ஒன்றுபடும் நெறியைக் கூறி, இவ்வுண்மை காணற்குத் தாம் மிக அரும்பாடு பட்டதனை 'இந்த நிலை தெளிய நான் நெக்குருகிய வாடிய வியற்கை திருவுளமறியுமே' எனத்தாயுமானப் பெருந்

தகை திருவாய்மலர்ந்த செம்பொருளே இவர்கொண்ட பொருளுமென எண்ணுகின்றேன்.

சைவசித்தாந்த முதற்றமிழ்க்குரவராம் எந்தம்மெய்கண்ட சிவமும், சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரம் முதலதிகரணத் திருவெண்பாவில் 'தானேயுலகாம் தமியேனுளம் புகுதல், யானேயுல கென்பனின்று' எனக் கூறியதையே நம் கட்டளை ஆசிரியரும் கட்டளையிடுதலின் வைதிக சைவ சித்தாந்த நண்பர்கள் இக்கட்டளைப் பொருளில் மாறுகூற வகையின்றுதலும் பெற்றும். சைவ சித்தாந்தப் போக்குடன் ஒன்றுச் சில வேறுபாடுகள் இந் நூலுட்காணப்படினும் முற்கூறியவாறு வெண்ணெய் நல்லூர் மெய்கண்ட சிவனார் யாது கருதி மேற்பாசுரங்கூறினரோ அதனையேகருதி எம் நண்பரும் கூறினார். அதனால் இழுக்கில்லை என நிமிர்ந்து சாற்றுவோம்.

இத்தகைய மேலான ஒற்றுமை போதிக்கும் அரும் பெருநூலொன்றைச் செப்பமுற வகுத்துச் செந்தமிழ்நாட்டுக்குதவிய நண்பர் பழநியப்பனார் ஓவாதென்னுள்ளத் துறையும் தென்பழநியப்பரே போன்று என்றும் இளையராய் எவ்வெவர்க்கும் சிறிதும் இளையாராய் மற்றும் பல தமிழ்த் தொண்டுகள் புரிந்து இம்மை மறுமைப் பெருநலன்களும் பெற்று வாழ்கவென முருகப்பெருமான் திருவருளை உளங்கொள்கின்றேன்.

தோரமங்கலம். } இங்ஙனம்
**அ. வரதநஞ்சையன்.**

உ

शिवमयम् ।

பாண்டிச்சேரியில் அத்வைதசாஸ்த்ர ஞானபானுவாய்
விளங்கும்
ஸ்ரீ-ல-ஸ்ரீ வேதானந்த சுவாமிகளின் திருக்குமாரரும்
ஸாஹித்ய சிரோமணியும்
பொள்ளாச்சி முனிசிபல் ஹைஸ்கூல்
ஸம்ஸ்க்ருத பண்டிதருமான
S. V. கருணாகர முதலியார் அவர்களின்

# अभिनन्दनम् ॥

## [அபிநந்தனம்]

---

महतस्तान् संयक् जानीमः ये वेदान्तशास्त्रपारंगताः, उभयभाषापण्डितबिरुदभाजः, कोङ्गुमण्डल वेळालभैरवकुल शिरोमणयः पळनियप्प कौण्डर् नामधेयभाजः, शिष्टाचारतिलकाः ।

तेषां कृतिरेवेयं 'परमाद्वैतसिद्धान्तम्' इति । भगवद्रूपकारणादनन्यं चराचरात्मकं जगद्रूपं कार्यमिति सिद्धान्तोऽस्मिन् ग्रन्थरत्ने विपुलतया विचार्यते वागीशादीनां वाक्यमुदाहृत्य स्फुटीक्रियते च । ये भिन्नाशयाः वैदिकाः तेषामप्यत्यन्तोपकारिणी, प्राचीनसकलग्रन्थमततत्त्वसारनिधिश्च, ज्योत्स्नेव वेदान्ततत्त्वगाढान्धकारापहारिणी चेयं कृतिरिति शम् ।

एस्. वि. करुणाकर मुदलियार्.

உ

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் கல்லூரித்
தமிழ் விரிவுரையாளரும்
திருமயிலை யாதீனவித்துவானுமாகிய
**திருஞானசம்பந்த தேசிகர் B A., M. O. L.**
இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

—◇●◇—

விருத்தம்

சீர்தழைக்கும் பலவளஞ்சேர் திருவேட
சேந்தூர்ப் பதியிற் சிறப்புற்றோங்கி
கார்தழைக்கப் பெயுமழைபோற் பல்கலையும்
ஆரியமுந் தமிழுங் கருதிக்கூட்டி
ஊர்தழைக்கத் திருத்தேவர் **பழநியப்பக்**
கவுண்ட ருரைத்த தோன்றிலோன்றேன்
பார்தழைக்கப் பரமாத்வித சித்தாந்த
வனன்ய சத்கார்ய வாதமாமே.

---

இன்னூலாசிரியரின் மாணவருள் ஒருவராகிய
கோட்டாம்பட்டி ஜமீன்
வித்துவான் ரா. **குப்புச்சாமிக் கவுண்டர்**
இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

—❀—

இருமொழிக் கடல்கடைந் தெடுத்தளித்தனன்
பெருகுறு பரம வத்துவிதப் பேற்றினை
கருமயலோடு நூற்கடல் மயலற நம்
பரகுரு வாம்திருப் பழநி யப்பனே.

உ

# பிழை திருத்தம்.

—:o:—

குறிப்பு:— இப்பிழைதிருத்தங்களை முதலிலேயே புஸ்தகத்தில் திருத்திக்கொண்டு தடங்கலின்றி படிப்பது நலம். திருத்தத்திலில்லாமல் பிழையில் மட்டும் குறிப்பிட்டவைகளை பிழையாகக் கருதி எடுத்துவிட்டுப் படிக்கவேணும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 9 | பெரிய | பெயரிய |
| 5 | 17 | ணிமத்த | நிமித்த |
| 48 | 19 | உபயகாரண | உபாதானகாரண |
| 51 | 22 | ரூபமாகி | ரூபமாக |
| ,, | 23 | சரிப்பொருந்தும் | சாலப்பொருந்தும் |
| 52 | 26 | முதலியவைகள் | முதலியவைகளால் |
| 54 | 5 | காரியங்களுக்கும் | காரியங்களும் |
| ,, | 24 | அத்வய: | அத்வயம் |
| ,, | 25 | வாத்வய: | வாத்வயம் |
| 59 | 19 | வாகியே | வாதியே |
| 64 | 13 | இவனுகி | இலனுகி |
| ,, | 24 | காரணங்கள் | காரணங்கள் [முழுதும் |
| 68 | 9 | எனஉணர்வின் | என்உணர்வின் |
| 72 | 19 | என்பதும் | என்பதும்ஒவ்வா [ததுபோல் |

| | | | |
|---|---|---|---|
| 75 | 24 | இதுபோற் | இதுபோல் |
| 76 | 13 | என்றும் | என்னும் |
| 79 | 4 | புமும் | பும் |
| 81 | 21 | பேதமதத்தில் | பேதமதத்திலும் |
| 82 | 4 | பெரியோர்களுக்கு | பெரியோர்களுக்கும் |
| ,, | 15 | மூன்ருவது | மூன்று |
| 87 | 3 | மிரைப்பினும் | மிருப்பினும் |
| 88 | 1 | உவமானத்திலுள்ள | |
| 91 | 9 | தில்லை | தில்லை. இதனல் |
| 93 | 19 | இவ்வேற்றுமை | இவ்வொற்றுமை |
| 94 | 21 | சிறிதளவாவது | சிறிதளவே |
| ,, | 21 | ஆனலும் | |
| 95 | 14 | சொல்லுவதற்காக | சொல்லுவதற்காகவாவது |
| 96 | 9 | பரமாத்துவா | பரமாத்துவித |
| 98 | 17 | இயற்றயல் | ஈற்றயல் |
| 139 | 2 | அங்கு | அங்கும் |
| 149 | 22 | அதனல் | அதனல்வரும் |
| 153 | 13 | என | |
| 157 | 10 | சிறிய | சிறிய |
| 165 | 3 | அவனே | அவனை |
| 168 | 15 | இதில் | அதில் |

---

உ

கடவுள் துணை.

ஸ்ரீ அருணாசல சுவாமி திருவடிகள் வாழ்க.

# பரமாத்துவிதக் கட்டளை.



### கடவுள் வணக்கம்

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும்
மறைக்கோவும் தழற்கால் சூலம்
அங்கேந்து மம்மானுந் தத்தமது
தொழிற்றலைநின் றுற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும்
பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்.

### குரு வணக்கம்

அருணான்கு சாதனங்க ளற்றவெமைப்
போல்வாரும் அடைய முத்தி
முரணாமல் தத்துவங்க டமையுணர்த்த
முதல்வனே மூர்த்தி யாகும்
பொருணாலே மும்முடிவாம் பரமசிவா-
நந்நியத்தைப் பொருந்தக் காட்டும்
அருணாசலக்குரவ னடிக்கமலம்
முடிக்கழகா யணிந்து வாழ்வாம்.

## ௬-வது பதி நிலை.
## [கடவுளிலக்கணம்]



சுத்த அறிவே சொரூபமாய், ஞானவொளியாய், சச்சிதானந்த பரிபூரண பரமான்ம சொரூபமான கடவுள் இவ்வுலகங்களெல்லாம் உண்டாவதற்கு முன்னர் அநாதியாகவே இருந்தார். இவையெல்லாம் அவராகவே இருந்தன. இவரே ஆன்மாவென்னும் பெயர்க்குரியர். இவரிடத்தில் இவ்வகிலலோகங்களையுந் தோற்றுவிப்பதற்கு ஏதுவானதும், சர்வ வல்லமையுடையதும், அநிர்வாச்சியமானதும், முக்குணங்களோடு கூடினதும், அக்னியில் சூடுபோல அநந்நியமாயுள்ளதும் ஆகிய பராசத்தியெனப் பெரிய சத்தியொன்றுண்டு. இவ்விறைவன் ஒருவனே, பிரம, விட்டுணு, சிவ, நாராயண, சங்கர, மஹாதேவ, குகாதி சப்தங்களால் வேதோபநிடத ஆகமங்களாலும இச்சப்தங்களோடுகூட கணபதி சுப்பிரமணியன் இராமன் கிருட்டிணன் முகுந்தன் வில்லி வேலன் முதலிய பெயர்களால் புராண இதிகாசங்களாலும் சில வேடங்களிற் கூறப்படுகின்றான். இவ்வாறே இறைவன் கடவுள் இயவுள் முருகன் ஆண்டவன் செம்பொருள் முதலிய பெயர்களால் செந்தமிழிலும் அழைக்கப்படுகின்றான்.

ஒவ்வொரு பொருளையும் உத்தமம் மத்திமம் அதமம் என மூன்றாகப் பிரிக்கலாமன்றோ! அஃதேபோல இந்தச் சிவ அனன்னியமான பராசத்தியின் உத்தமமான சத்துவ பாகம் மாயை யென்னும் பெயருடையதாய், நீக்கமின்றி நிறைந்திருக்கும் பரிபூரண பரமாத்துமாவிற்கு வேறாயிருப்பதற்கின்மையால், ஈசுவரனோடு ஒழுகக் காய்ச்சின இரும்பு (தப்தாயப் பிண்டம்) போலும், பாலும் சுவையும் போலும் ஒற்றுமையாயிருக்கும்.

இவ்வாறு குடத்தில் உபாதானமாய் நிறைந்த மண் போன்று மாயையில் நிறைந்த அறிவு வடிவமான கடவுளுக்கு ஈச்சுரன் என்றும், ஆண்டவன் என்றும், எல்லாவுலகங்களை யும் ஆக்கி அளித்து அழிக்கவல்லவன் என்றும், ஆங்காங்கு மேற்கொண்ட உருவங்கட்கும் நிலை தொழில்கட்கும் தக்க வாறு பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசன், சதாசிவன் என்றும் மாயாவிசிட்ட பிரமம் என்றும் பெயர்கள் உண்டு.

சத்துவகுணமான மாயையானது ஒன்றாயிருந்தபோதி லும் தன்னுடைய அம்சங்களின் வேற்றுமையினால், பலவா யிருத்தலின் இதனோடு அநந்நியமாய்க் கலந்த பிரம சைதன் னியமும் பிரமன், விட்டுணு, உருத்திரன், கணபதி, குகன் சத்தி, இலக்குமி, நாமகள், முதலிய கடவுள் பேதங்களை யடைந்தாலும் ஒன்றாயிருக்கும் தன்னியற்கை கெடாமல் அநந்நியமான எல்லாவுலகங்களையும் இயக்கிக் கொண்டி ருக்கும்.

பரமான்மாவே இந்த மாயாதிவிசிட்டனாய் எல்லாவுல கங்கட்கும் நூலுக்குச் சிலந்திப்பூச்சியைப்போல அபின்ன நிமித்த உபாதான காரணன் ஆகின்றான்.

---

## உ-வது பசு நிலை.

### [ஆன்மவிலக்கணம்]



பராசத்தியின், மத்திமபாகமான இரசோகுணமானது அவித்தையென்று வழங்கப்பட்டு, பல கூறுபாடுகளாகப் பிரிந்து பலவாய் வேற்றுமை யெய்தி நின்று தாரதன்மிய மாயிருக்கும். இந்த அவித்யாம்சம் ஒவ்வொன்றும் தனது

விசிட்டமான கடவுட்சைதன்னியத்தினை மறைத்து நன்கு விளங்கவொட்டாமல் கொதித்த நீரில் இருக்கும் தீயானது விளக்கத்தினைப் பெறுது உருவம் தெரியாது தடைபட்டிருப்பதுபோலத் தடுத்து ஆன்மாவின் சச்சிதானந்த சொரூபத்தினைத் தெரியவொட்டாமல் அநாதியே மறைத்து நிற்கும். இந்த அவித்தையினுல் மறைக்கப்பட்ட ஈசுராம்சங்களையே சீவர்கள் எனவும் பசுக்கள் எனவும் பெரியோர் கூறுவார். ஆனுல் ஏன் இவ்வாறு அவித்தையானது தனது விசிட்டமான கடவுட் சைதன்னியத்தினை மறைக்கவேண்டும்? அதுதான் இரகசியமானது. ஏன் மறைத்தது? எவ்வாறு மறைத்தது எப்போது மறைத்தது? என்பவற்றிற்கெல்லாம் விவரமாகிய காரணம் என்னவென்ருல்:

எப்போது மறைத்தது என்ருல்— அநாதிகாலத்திலேயே மறைத்தது. எவ்வாறு மறைத்தது என்ருல்— முழுவதும் மறைக்கவில்லை. ஆனுல் கொதித்த நீர் தீயின் பிரகாசத்தினையும் உருவத்தினையும் மறைத்தாலும் சூட்டினை மறைக்காதவாறு போலப் பொதுவாயுள்ள நான் என்னும் அறிவினை முக்காலத்திலும் மறைக்காமல் சிறப்பாகவுள்ள சச்சிதானந்த வியல்புகளை மறைத்திருக்கின்றது.

ஏன் மறைத்தது என்ருல்— ஆன்மாக்கள் சுவர்க்க மத்திய பாதாள உலகங்களிற் பலபடியாகச் சஞ்சாரம் செய்துவரும் இந்நிலை அநாதியே மறைப்பதற்கும் காரணமாயிருந்தது.

இப்போது உயிர்கள் இருக்கும் இந்த நிலை முன்னரே அவித்தை மறைப்பதற்கு (ஆன்மா தன்னை மறப்பதற்கு)எவ்வாறு காரணமாகும்? குழந்தை தந்தைக்கு காரணமாவது போன்று பொருத்தமில்லையே என்ருல் ஏன் பொருத்தமில்லை?

குழந்தையின் வயது உடல் நிலை முதலியவை தந்தையானவன் இத்தனை வயதிற்குமுன் இந்நிலையில் பிறந்திருக்கவேண்டும் என்பதற்கு ஏதுவாகவில்லையா ?

மேலும் ஐந்து வயதுடைய ஒரு தோட்டிப்பிள்ளையைப் பார்த்து நீ ! இவ்வீட்டிற்கு எப்பொழுது வந்தாய் ? என்று கேட்டால் ஐயா ! நான் இதற்குமுன் ஆறுவது வருடத்தில் வந்தேன் என்றும், எவ்வாறு வந்தாய் என்றால் ? தாயின் கருவினின்றும் வந்தேன் என்றும் ஏன் இவ்வீட்டிற்கேவந் தாய் என்று கேட்டால் 'தெரியாது' என்பதொரு சமாதானம் உண்டு. அஃதிருக்கட்டும். தெரிந்த சமாதானம் என்ன வென்றால் :— நெய் பால் தயிர் இன்றியும் உண்ண உணவும் உடுக்க உடையும் படுக்கக்கிடையும் இன்றியும் வருந்தி வாழும் இந்த என்னிலையானது இந்தத் தோட்டித் தாய் தகப்பன் வீட்டில் பிறப்பதற்குச் சரியான காரணமா கின்றது என்றும் கூறுவான். காட்டிலிருக்கும் இராம பிரானை உன் சின்னம்மை ஏன் அவ்வாறு வரங்கேட்டாள் என்றால் :— எனக்கும் என்னிமத்தமாகப் பிறக்கும் இங்கு நிகழும் இன்னிகழ்ச்சியோடுகூடிய இந்த என்னிலையே அவ் வாறு கேட்பதற்குச் சரியான காரணமாகும். இன்றேல், நேற்றுவரையும் உயிருக்குயிராய் என்னை வைத்திருந்தவர் இன்று காட்டிலலையச் செய்வாரா ? இதனால் தொடர்பு டைய இரண்டில் ஒன்றற்கொன்று ஏதுவாக எதை வேண்டு மானாலும் சொல்லலாம்.

இம்மறைப்புக் கடவுளின் அம்சமான ஆன்மாவிற்கு எப்பொழுது போகும் ? எவ்வாறு போகும் என்னும் வினா விற்கெல்லாம் விவரமான விடையும் சுருதியாதி பிரமாண நூல்களிலே சொல்லப்பட்டிருக்கின்றது, ஆடையில் அழுக்கு

எப்பொழுது வந்தது? எப்படி வந்தது? வருவானேன்? என்பனவற்றிற்கெல்லாம் சரியான காரணம் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும் முடிந்தாலும் சாரமண் (உவர்மண்) ணிட்டு ஊறவைத்துத் தோய்த்தால் அழுக்கு முழுவதும் போய்விடும் என்பதுமாத்திரம் உறுதியாய் ஆணையிட்டுச் சொல்லமுடியும்.

இதனைப்போல பரோபகாரமான கருமம் பக்தி ஞானம் ஞான நூல் விசாரணைகளினால் அறியாமை (மறைப்பு) நீங்கும் என்பது சுருதி யுக்தி அனுபவங்களினால் முடிந்த முடிபாகும்.

மேலும் இம்மறைப்பின் காரணங்கள் தெரிந்த பின்புதான் அதுபோகும் என்பது கிடையாது. அழுக்கு வந்ததின் காரணம் தெரிந்தபின்னர்தான் அழுக்குப் போகும் என்பது இல்லை. வருவதற்குண்டான காரணங்களை ஒருவாறு நன்கு தெரிந்துகொண்டாலும் போவதற்குண்டான காரணங்களை நன்கு தெரிந்து நடத்தாத விடத்துச் சிறிதும் போகப் போவதுமில்லை.

மக்களுடைய நிலையில் வைத்துத்தான் நாம் இவ்வளவும் கூறினோம். இறைவன் நிலையில் வைத்து நோக்கும்போது அதிசுதந்தரனாகிய பரமேசுரன் தனது அநந்யமாயா வல்லமையினாலே தனது அவித்யாம்சங்களில் கட்டுண்டவனைப் போன்று மறைந்து நின்று தனது பிரகிருதி தந்த உடம்புகளில் புகுந்து அறியான்போல நின்று அனைத்தையும் அனுபவிப்பதன்மூலம் படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல் (சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம்) ஆகிய ஐந்தொழில்களை (பஞ்ச கிருத்தியங்களை) யும் அருள் ஆனந்த விளையாடல்களாகச் செய்துகொண்டிருக்கின்றார் என்பதை:

"ஈதெலாம் விளையாட்டே விளையாடும் இடங்களே
இப்புர மூன்றும்
ஆதலாகாமை சொல்லவும் படுமோ அதிசுதந்
தரனை அன்னியமாய்
ஓதலாமோ இப்புரங்களும் அவன்றனுநவமே
யொழியவின் மையினல்" எனவும்
தாக்கரும் பரமன் தன்சுதந்தரத்தால் தன்னுடை
மாயை தன்னலே
ஆக்கின இந்த உடம்படைந்து அறியான் போல
நின்றனைத்தையு மதிலே
ஜாக்கிரத்தென்னும் இடம்வகுத்து அன்னபானமும்
தையலார் முதலாம்
போக்கியங்களையும் புசித்திடும் கனவும் பண்ணியத்
தன்மையே புசிக்கும்.
(சூதசம்ஹிதா—கைவல்லியோபநிடத்)

என்ற சுருதிகளிலும் அறியத்தகுந்தது. இந்த ஒவ்வொரு அவித்யாம்சமும் அதன் காரியங்களும் சீவனகவும் ஈசனக வும், இருந்து எவ்வாறு அநுபவப்படுகின்றது என்பதற்கு ஒரு திருட்டாந்தம் கண்டுகொள்ளல்வேண்டும். அதாவது—

ஓர் குடியானவனுடைய நிலமானது அவனுக்குந் தான் அரசனுக்குந்தான் சொந்தமானது. தமக்குரியது என்ற அநுபவம் இருவருக்கும் உண்டு. குடியானவன் அந்த நிலசம்பந்தமாகத் தான் வகித்த பொறுப்பளவில் பாடுபட்டு நல்ல முயற்சி செய்வானயின் நல்லபலன்களை அடைவான். இதனை. அரசன் ஒரு சிறிதும் பறித்துக்கொள்ளமாட்டான். தன் பொறுப்பை நடத்தாது பாழ்படுத்தி விடுவானயின் அத ஞல் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை அனுபவிக்கவேண்டியவன் அவன்தானே!

இந்தப் பூமியின் நஷ்டத்தால் அரசனுக்கு யாதொரு வித நஷ்டமும் வந்துவிடப் போவதுமில்லை. இதனைக்குறித்து அரசனானவன் துக்கிக்கப் போவதுமில்லை. ஆனால் இவனைக் காட்டிலும் அதிக சொந்தம் அப்பூமியில் அரசனுக்குத்தான் உண்டு.

இதனைப்போல அவித்தையினால் மறைபட்ட சிவாம்ச மான ஆன்மாக்கள் ஒவ்வொருவரும் தமது பொறுப்பை யுணர்ந்து நடந்து கொள்வார்களாயின், எல்லா நன்மைகளும் உண்டு. அதனை உணராமல் வாணாளை (வாழ்நாளை) வீணாகப் பாழ்படுத்திவிட்டால் அதனால் உண்டாகும் விலங்கு முதலிய கீழ்ப்பிறப்பு நரகம், வறுமை, பிணி, முதலியவைகளை எய்துவதும் தாம் தாம் என்பதும் இவற்றினை யெல்லாம் நன்றாக ஆராய்ந்து அதன்படி நடந்துகொள்ளும் பொறுப்பு மனிதப்பிறவி யெடுத்த ஆன்மாக்களுக்குத்தான் உண்டென் பதும் அறியத்தக்கதாம்.

இந்த அவித்தை ஆன்மாக்கட்குக் காரணசரீரமென்று சொல்லப்பெறும். இவ்வவித்தை பல பிரிவுகளானபடியி னால் எந்த அகத்திலுள்ள அவித்தை மெய்ஞ்ஞானத்தினால் கெடுகின்றதோ அந்த ஆன்மாவை மூடியிருந்த அஞ்ஞானம (அவித்தை) போய்விட்டதாகின்றது, மற்றை ஆன்மாக்களை மறைத்த (மூடிய) அவித்தை கெடுகின்றதில்லை. இதுதான் ஒருவன் முத்தி அடைந்தும் மற்றவர் அடையாதிருப்பதற்குக் காரணமாம்.

இது, எந்த வீட்டில் விளக்கேற்றப்படுகின்றதோ அந்த வீட்டிலுள்ள இருள்மாத்திரம் நீங்குகின்றது. மற்றை வீட்டிலுள்ள இருள் போகின்றதில்லை. என்பதுபோலக் கண்டுகொள்ளத் தக்கதாகும்.

அகலின்றித் திரியின்றி எண்ணெயின்றித் தானே சுயம் பிரகாசமாய் எரிகின்ற ஆன்மசோதியாகிய மாணிக்கமானது இந்த அவித்தையாகிய குடத்தால் மூடப்பட்டிருக்கின்றது, (மறைக்கப்பட்டிருக்கின்றது) மெய்யுணர்வு (ஞானம்) ஆகிய தடியைக்கொண்டு அவித்தையாகிய குடத்தை உடைத்து எறிந்து விடுவானாயின் ஆன்மசோதியாகிய மாணிக்கமானது இருதயத்தில் யாதொரு தடையுமின்றி இயல்பாகப் பிரகாசிக்கும். இக்கருத்தை:—

"இன்றெனக் கருளி இருள் கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின்றன்மை"

யென அருள்வாராயினர் மணிவாசகப்பெருந்தகையார்.

இந்த அவித்தையினைக் கெடுக்கும் ஞானமானது சுய நலப் பற்றற்று நிட்காமியமாகப் பரோபகாரமாகச் செய்யப் படும் தானம், தருமம், பூசை தபசு, செபம், தியாகம், தியானம் முதலியவற்றினாலும், வேதாந்த சாத்திர (கீதாத்திரய) விசாரணையினாலும் இறைவன் குரு இவர்களருளாலும் கால பாகத்தாலும் (காலபாகம் — பரிபக்குவம்) உண்டாகும். இந்த அவித்தையின் நீக்கத்தினையே சான்றோர்கள், சர்வ பந்த நிவர்த்தி யென்றும், சகல துக்காபாவம் என்றும், முத்தி யென்றும், மும்மல நிவர்த்தியென்றும், வீடு என்றும் கூறுவார்கள்.

இந்த அவித்தை யொன்றுடன் கூடிய நிலைதான் ஆன்மாக்களுக்குத் தூக்கநிலை (சுழுத்தியவத்தை)என்று சொல்லப் படும். இந் நிலையிலுள்ள அவித்தையாகிய இருண்மேகமானது நனவு கனவுகளில் காமக்குரோதம் (விருப்பு வெறுப்பு) ஆகிய மின்னல் இடிகளாகப் பரிணமிக்கும். இதைப் பகவானும் **काम एषः क्रोध एषः रजोगुणसमुद्भवः ।** (காம ஏஷ: குரோத ஏஷ: இரசோகுணசமுத்பவ:) அதாவது—

இரசோகுணத்தினின்றும் (அவித்தையினின்றும்) உண்டான காமக்குரோதங்கள் என்று தனது கீதையிலும் சொல்லியிருப்பது நன்காயத்தக்கதாகும்.

இங்கு, விருப்பு (காமம்) என்பது, நான் என்னும் உடற்பற்றும்(அகப்பற்றும்), எனது என்னும் புறப்பற்றுமாகும். வெறுப்பு (குரோதம்) என்பது அவை சம்பந்தமாக வரும் வெறுப்பு விருத்தியாகும்.

அவித்தை இருப்பிற்கு அநுபவப் பிரமாணமாவது ''என்னை நான் அறியேன்'' என்னும் உலகவிவகாரமாகும். அது வருமாறு :—

நீ ! யார் ? உன் வடிவம் என்னை ? உன் இயல்பு என்னை ? என்று ஒவ்வொருவனையும் கேட்போமானால் 'என்னை நான் அறியேன்' என்பான். நமக்கும் அவ்வாறே. இவ்வழக்கிலிருந்து என்னை யறியேன் என்றதால் தன்னிடத்து அறியாமை உண்டென்பதும், 'என்னை' என்னும் செயப்படுபொருள் விளங்குதலின் முழுதும் மறைக்கவில்லை (தன்னை அறியாமலிருக்கவில்லை) யென்பதும், அறியேன் என்னும் எதிர்மறைப் பயனிலையால் அவித்தைக்கு ஆச்ரயம்(இருக்கை) அவ்வான்மாத்தான் என்பதும், அவ்வான்மாவினலே தான் அவ்வறியாமை விளங்குகின்றது என்பதும், நன்கு விளங்காநிற்கும். இது, களங்கமானது சந்திரனை அநாதியே அடைந்து அதனைமுழுதும் மறையாமல் நின்று அச்சந்திரனலேயே தன்னையும் விளக்கிக்கொள்ளும் தன்மைபோலக்கண்டுகொள்ளத்தக்கது.

'என்னை நான் அறியேன்' என்னும் இவ்வழக்கு அவித்தை உண்மைக்குப் பிரமாணமாவதுபோல, அவ்வவித்தை நீண்டநாள் இருந்தாலும், ஓர்நாள் ஓர்பொழுது நிமித்தம் வந்தபோது நீங்கிப்போகும், என்பதற்கும் பிரமாணமாகும்.

அஃது வருமாறு:— செயப்படுபொருளும்(கர்மாவும்) எழுவாயும் (கர்த்தாவும்) வேற்றுப்பொருளாயின்றித் தானனபடியினுலும், பயனிலை அறிவானபடியாலும் (அறியேன் என்பது இன்மையின் அறிவானபடியினுலும்) வினைமுதலும் தானனபடியினுலும், கர்த்தாவான தானே செயப்படுபொருளாயும் வினைமுதலாயுமுள்ள 'என்னை நான் அறியேன்' என்னும் இவ்விவகாரத்தினல் அறியாமை இவ்வான்மாவிற்கு இவ்விடயத்தில் ஏற்படற்கு யாதொரு நியாயமுமில்லை. இங்ஙனமிருக்க, அறியாமை எப்படி வந்தது? வருவான் ஏன்? என்பனவாதியாக இவ்விடயத்தில் ஐயமும் கேள்வியும் வந்தாலும் வரலாமேயொழிய, அறியாமை நீங்கி, 'என்னை நான் அறிந்தேன்' என்னும் வழக்கு அவசியமாக ஏற்படும் என்பதில் யாதொருவித சந்தேகமும் வர நியாயமில்லையென்பது, இவ்விடயத்தில், சிறிது கருத்தூன்றி விசாரிக்கும் உள்ளத்திற்கு உள்ளங்கை நெல்லிக்கனி (கரதலாமலகம்) போலத் தெள்ளத் தெளிந்த விடயமாகும்.

---

## ௩-வது பாச நிலை.

### [உலக இலக்கணம்]

— ❀ —

### 1. சூக்குமபூத சிருட்டி.

இனி, பராசத்தியின் தமோகுண விசிட்ட சத்தின் உற்பத்தி வருமாறு:—

பராசத்தியின் தமோகுண விசிட்ட சத்சொரூபமானது ஆன்மாக்களின் போக நுகர்ச்சிக்காக, ஆன்மாக்க

ளுடைய கர்ம, கால வசத்தினுலும், மேற்கூறப்பட்ட மாயா சத்தி விசிட்ட பிரமத்தினுடைய "உலகமாக ஆவோம்" என்ற எண்ணத்தினுலும், மண் குடமானுற்போலவும்; நூல் ஆடையானுற் போலவும்; தானே தனக்கு அநந்யமாய் சத்த தன்மாத்திரையாயுள்ள சூக்கும ஆகாயமாகப் பரிணமித்தது (ஆயிற்று).

இப்படியே, இதனின்றும், பரிச தன்மாத்திரையாகிய வாயுவும், வாயுவினின்றும் உருவதன்மாத்திரையாகிய தீயும், இத்தீயினின்றும் சுவை (இரஸ) தன்மாத்ரையாகிய அப்புவும் (நீரும்) இந்நீரினின்றும் கந்த (மணம்) தன்மாத்திரையாகிய பிருதிவியும் (மண்ணும்) உண்டாயிற்று.

இவைகள், கர்ப்பத்திலிருக்கும் குழந்தையானது, காரியங்களொன்றும் செய்வதற்கில்லாமல் குழந்தையென்னும் உருவமும், பேரும் மாத்திரமாய்ச் சூக்குமமாய் இருப்பது போல இருக்கின்றபடியினுல் இவ்வைந்தினுக்கும் சூக்கும பூதங்கள் என்று பெயர்.

இனி இவைகள் பஞ்சீகரணஞ் செய்யப்பட்டே தூல காரியங்களுக்கு உபயோகப்படுகின்றபடியினுல் அதற்கு முன் இவைகளுக்கு அபஞ்சீகிருத பூதங்கள் என்று பெயர்

வேப்பங் கொட்டையின் கசப்பு அதன்கிளை தழை முதலியவற்றிற்கெல்லாம் இருப்பதுபோல தாயான பிரகிருதியின் முக்குணங்களும் இவற்றில் முழுவதும் வியாபித்திருப்பதால் இவைகட்கு முக்குணபூதங்கள் என்றும் பெயர் உண்டு.

---

## 2. அந்தக்கரணம் (உட்கருவி)

மேற்குறித்த சூக்கும பூதாதிகளினின்று அந்தக்கரண ஞானேந்திரியங்களின் உற்பத்தி வருமாறு:—
தயிரின் சத்துவ பாகமானது கடையப்படுவதால் முகந் தெரியத்தக்க நெய்யாவது போன்று ஆண்டவனுடைய ஆணையால் பூதசூக்குமங்களின் சத்துவபாகமானது அந்தக்கரணங்களாகவும் ஞானேந்திரியங்களாகவும் அளவுபடாத சீவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றாக அளவில்லாத பல ஞானசாதனங்களாகப் பரிணமித்து ஆன்மாக்களுக்கு அந்தரங்க பகிரங்க அறிகருவிகளாகவிருக்கும்.

இவற்றில் அந்தக்கரணமானது தனக்கன்றிப் பிறருக்குத் தெரியாதபடி உடம்பின் இருதயமத்தியில், வீட்டு நடுவில் ஏற்றப்பட்ட விளக்குப் போன்று இருந்துகொண்டு அறிந்து வருவதால் அந்தக்கரணம் ஆகும். அந்த:—உள்ளேயுள்ள, கரணம்—கருவி (சாதனம்) ஆகவே உட்கருவி எனப் பெயர் பெறும்.

இஃது, ஒன்றாயிருப்பினும் விருத்தி பேதத்தால் (போக்கின் வேற்றுமையால்) நானுவிதமாயிருக்கும். அது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று சொல்லப்படும்.

---

(1 மனம்)

(இவற்றுள்) மனமானது இந்திரிய வாயிலாகச் சென்று பொருள்களோடு பொருந்தி அப்பொருளை 'இது இன்னது' என்று விளக்கும். 'இது பசு' 'இது மரம்' என்பன போன்ற உணர்ச்சி வடிவத்தையுடையது மனம். இந்த மனதிற்கும் ஆன்மாவிற்கும் நெருங்கின தொடர்புண்டு. இந்த ஆன்மாவோடு சம்பந்தமுடைய மனம் இந்திரியத்தோடு [பொறி

யோடு] சம்பந்தப்பட்டு அதன்வழியாக விடயங்களோடு சம்பந்தப்பட்டு விடயாகாரபரிணாமத்தை அடைந்து விடயத்தை 'இது இன்னது' என உணர்த்தும்.

இங்கு ஆன்மசம்பந்தம் மனதிற்கும், மனசம்பந்தம் இந்திரியங்கட்கும், இந்திரிய சம்பந்தம் விடயப்பொருட்குமாகச்சம்பந்தம் ஒன்றற்கொன்று சங்கிலித்தொடர்புள்ளதாயும் ஆன்மாவிலிருந்து கீழ்கீழ் உள்ளவைகட்கு ஒன்றோடொன்று ஊடுருவின சம்பந்தம் உள்ளதாயும் அமைந்திருக்கும்.

இம்மனமானது, அடங்கி விடுதலைக்கும், விரிந்து கட்டுதலுக்கும், ஏதுவாயுள்ளது. ஒரு குழந்தையை ஐந்து வருடம் அரசனாகவும், மேல் இருபது வருடம்வரை ஆளாகவும், முப்பது வருடம் வரை நண்பனாகவும், அதற்கு மேல் தகப்பனாகவும் நடத்தி நலமுற நடந்துகொள்ளலாம் என்பது போல இந்த மனத்தை ஆரம்பத்தில் வேண்டியது கொடுத்து உற்சாகப்படுத்தியும் மீண்டு புலன் வழிச்செல்லாது சம தமாதிகளால் தண்டித்துக் கல்வி, கேள்வி, ஒழுக்கம், செபம், தியானம், முதலிய வற்றில் முறையாக நடத்தி அடக்கியாண்டும் மறுபடி நண்பனைப் போன்று சமமாகத் தழுவிச்சென்றும் கடைசியாகத் தகப்பனைப் போன்று அதன் இயற்கைப் பிரகாரம் விட்டுவிட்டுத் தான் தனது இயற்கைநிலையில் இருக்கவும் தகும்.

பஞ்சேந்திரிய வழியாக எங்கு எங்கு நல்லநல்ல விடயங்கள் உண்டோ அங்கு அங்கு எல்லாம், இதனைக் கூட்டிக் கொண்டு போய்க் காண்பித்துப் பழக்கி விட்டு விட்டால் இது நல்ல பலனைக் கொடுக்கும். அப்போது இதனைப்போல் நல்லபிள்ளை வேறொன்றும் கிடையாதெனத் தோன்றும்.

(2 புத்தி)

புத்தியானது, மனம் அறிந்த பொருளை 'இன்னது இவ் வித இயல்போடு கூடியது' என்று பகுத்தறிந்து நிச்சயித்துக் கொள்வது. இது 'கழுத்தில் அலைதாடி யுடைமையால் இந்த வியத்தி [பொருள்] பசுவேயாகும்' என்பது போல் ஐய மின்றித் தெளிவாய் நிச்சயித்துக் கொள்வதாகும். இது விவ கார நுணுக்கம் விரோதந்தீர்த்தல் நூலாராய்ச்சி தத்துவ ஆராய்ச்சி முதலியவைகளுக்கு மிக்க சாதனமாயிருக்கும்.

(3 சித்தம்)

சித்தமாவது கண்டு பகுத்து ஆராய்ந்து அறிந்துகொண்ட பொருளை ஓரே நினைவாகத்தடவித்தடவி நைந்து சிந்திக்கும் விருத்தியாகவுள்ளது. இஃது ஒரு மந்திரத்தினைப் பற்றிய செபத்திற்கோ அல்லது ஒரு பொருளைப்பற்றிய தியானத் திற்கோ சாதகமாகயிருக்கும் விருத்தியாயுள்ளது அருள்-கருணை பத்தி, அன்பு, ஆர்வம், முதலியவற்றுக்கு இடமா யுள்ளது

(4 அகங்காரம்)

அகங்காரம் என்பது நான் என்னும் வடிவமாய் உள்ள உணர்ச்சியாம்.

இது மூலாகங்காரமெனவும் தூலாகங்கார மெனவும் இருவகைத்தாம். இவற்றுள் தூலாகங்காரமாவது சுகதுக்கங் களை யுண்டுபண்ணுவதாய், தெளிந்த அறிவற்றதாய், யாதா னும் ஒன்றைப்பற்றியே நான் படித்தவன், நான்பணக்காரன் நான் வீரன், நான் இதிற் பெரியவன், நான் அதிற்பெரியவன் என்று நிலையற்ற அகங்கரித்துக் கொண்டே இருக்கும்.

மூலாகங்காரமாவது:— அந்தக்கரணமாகிய நான்கு கிளைகளும் நான்காகக் கிளைப்பதற்கு ஒன்றாய் அடிமரமாயுள்ளது. இது அவித்தையாகிய விதையின் முளையாய் அடித்தண்டாயுள்ளது இந்த மூலாகங்காரத்திலும் முக்குணங்களின் கலப்புண்டு. தனக்கு முதற்காரணமாயிருந்த பகவானுடைய ஒளியினைப் பெற்ற இது; தீயின் ஒளியைப்பெற்று தகதகவென்று அதுவாக விளங்கும் இருப்புக்குண்டு போல நல்ல சோதிவடிவமாய் அறிவுமயமாய் விளங்கும்.

இச்சிவப்பிரகாசத்தை தனக்கு அநந்நியமாகப்பெற்ற மூலாகங்காரமானது விவகாரிக சீவன் என்னும் பெயருடையதாய் தூல சூக்கும உடம்புகளை நான் என்று ஒரேவிதமாய் அபிமானித்து அதன் சம்பந்தமானவைகளை எனதென்றபிமானித்துப் புண்ணிய பாபங்களைச் செய்து சுவர்க்க மத்திய நரகம் முதலிய இடங்களுக்குப் போக்குவரவுடையதாயிருக்கும். கர்மங்களைச் செய்வதால் கர்த்தாவாகவும் அவைகளால் உண்டாகும் சுக துக்க வடிவ போகங்களை அனுபவிப்பதால் போக்தாவாகவும் விவகரிக்கப்படுகிறது.

ஞாதுரு, ஞானம், ஞேயம் என்னுந் திரிபுடி மூன்றினுள்ளும் ஞாதுருவென்பதும் ஞாதா என்பதும் இதுவேயாகும். இது சிவ சந்நிதானத்தின்கண் சடம்போன்றும் மற்றை பூத பௌதிகங்களின் முன்னிலையில் சித்துப்போன்றும் கண்ணாடியின் முற்பாகம் விளக்கமும் பிற்பாகம் விளக்கம் இல்லாததும் போன்று விளங்குமியல்புடையது.

இது நனவு கனவுகளில் ஒழுகக் காய்ச்சின இரும்பு போலச் சிவவிளக்கம் பெற்று விளங்கியும் அங்ஙனமின்றி, இருண்டு சூடுமாத்திரமாயுள்ள இரும்புபோலச் சுழுத்தியில் விளக்கமின்றியும் இருக்கும்.

இது அவித்தை அஞ்ஞானமென்னும் விதையினின்றும் ஆதிமுளையாய்க் கிளம்பி சித்தம் முதலிய கரணக்கிளைகளுக்கு அடிமரமாயிருந்து வருவதோடல்லாமல் ஸகல பிறவிகளுக்கும் அடியாய் மூலகாரணமாயிருக்கும்.

இது தன்னுள் ஆன்மஒளி பூரணமாய் விளங்கப்பெற்றதினால் ஆன்மாவைப் போல, விளங்கும். அப்படி விளங்குவதனால் இதற்கு ஆன்மாப்போலி, சித்துப்போலி, சிதாபாசன் என்னும் பெயர்களுண்டு. இன்னும் இதற்குப் பலகாரணங்களால் உயிர், சீவன், மைந்தன், விவகாரிக சீவன், இயமானன் என்பன முதலிய பெயர்களுமுண்டு. பதியின் நியம சக்தியில் கட்டுப்பட்டு சஞ்சரிக்கும் இயல்புடையதாதலாலும் பசுவின் தன்மையை ஒத்திருத்தலினாலும் பசு வென்னும் பெயரையும் பெறும்.

அகங்காரந் தெரியும் விதம் வருமாறு:- 'நான் ஆன்மா, என்னும் வடிவமான உணர்ச்சியிலேயோ அல்லது எனது உடம்பு, எனது கண், எனது மனம், என்பனவாதிய வடிவமான உணர்ச்சியிலேயோ இவ்வகங்காரமானது விடயமாகமாட்டாது,

'இந்த எனது அகங்காரம்' என்றுவது, 'நான் பருத்தேன்' 'நான் இளைத்தேன்' 'நான் கண்டேன்' 'நான் கேட்டேன்' 'நான் நினைத்தேன்' 'நான் சிந்தித்தேன்' என்றுவது, முறையே தனித்தோ தேகேந்திரிய அந்தக்கரணங்களோடு கூடியோ, வருகின்ற அறிவுகளில் இந்த அகங்காரம் விஷயமாய் இருக்கும். வேதாந்த சித்தாந்த சாத்திரப் பயிற்சியினால் இம்மாதிரி உணர்வுகளை எழுப்பி இந்த மூல அகங்காரத்தைத் தனித்தும் தேகாதிகளோடு சேர்த்தும் நன்கு தெரிந்து கொள்ளலாம்.

கோபதாபமாகிய கொடுங்காற்றுக் கிளம்பி மிக வேக மாக மோதியடித்தாலும். அகங்காரமான திரியில் பற்றி எரியும் ஆன்மஜோதியின் வெளிச்சமானது, அணைகிறதில்லை. அப்பொழுதும் பொருள்களைப் பிரகாசிப்பித்துக் கொண்டே இருக்கும். கோணலும் திருகலும் எல்லாம் இந்த அகங்கா ரத்தில் தான். இதைப்பற்றி விளக்கும் இறை ஒளி, ஒரே தன்மையாய் உள்ளது.

கோபம் தலைக்கேறி கத்தியைக் கொண்டு அகங்கார மூர்த்தியாய் ஒன்றைப், பின்பற்றிச்செல்லும் ஒருவனுக்கும் வழியில் குறுக்கே யுள்ளவைகளை 'இது கிணறு' இஃதன்று, இது மாடு இஃதன்று, இவள் தாய் இவளன்று எனத் தெரிந்து அவைகளில் முட்டி மோதி விழுந்து விடாமல் அங் குள்ள பொருள்களை விளக்கி விலகிச் செல்வதற்கு ஏதுவாய் உள்ளது இவ்வான்மவொளியே யாகும்.

ஒழுகக் காய்ச்சிய சூட்டுக்கோலில் உள்ள கோணல் திரு கல் இவைகள் எல்லாம் இரும்பினுடையதே பிரகாசமும் சுடுதலும் இதில் உள்ள அக்கினியின் தன்மைகளே. இது பற்றியுள்ள இரும்பின் கோணல் முதலியவை எல்லாம் இந் நெருப்புக்கு கிடையாது. ஓட்டை, கோணல், திருகல், முதலி யன வெல்லாம் குடத்திற்கேயாகும், இதற்கு உபாதான கார ணமான மண்ணிற்கில்லை. இது போலவே அகங்காரமும் இதில் பற்றி விளங்கும் ஆன்ம ஒளியின் தன்மையும் ஆராய்ந்து கண்டுகொள்ளத்தக்கன.

---

(ஞானேந்திரியம்)

மேகமானது சிறுசிறு துளிகளாகப் பரிணமிப்பதுபோல சத்ததன்மாத்திரையான சத்துவகுண சூக்கும ஆகாசமானது

சுரோத்திரம் என்னும் இந்திரியங்களாக அதாவது செவி என்னும் சிறு பொறிகளாகப் பரிணமித்து ஒவ்வொரு ஆன் மாக்களுக்கும் ஒவ்வொன்ருக தூலசரீர அவயவமான காதுக் குள் வைக்கப்பட்டு தூலபூதங்களின் குணமாயுள்ள வெளிப் படையான சப்தம் ஒன்றை மட்டும் அறிந்துகொள்ளுமியல் புடையது.

இவ்வாறே பரிசதன்மாத்திரையான சத்வகுண சூக்கும வாயுவானது சிறு துவக்கு என்னும் இந்திரியங்களாகப் பரி ணமித்து தூல சரீரமென்னும் மெய்முழுவதிலும் ஊடுருவி வியாபித்திருந்து நாலு பூதங்களில் வெளிப்படையாயுள்ள பரிசமொன்றை மட்டும் கிரகித்துக்கொள்ளுமியல்புடையது.

ரூபதன் மாத்திரையான சத்வகுண சூக்கும அக்கினி யானது அரத்தால் அராவப்பட்ட சிறுசிறு பொன்துகள்கள் போல கண்ணென்னும் சிறுசிறு பொறிகளாகப் பரிணமித்து கண்ணின் கருவிழி நுனியிலிருந்து கொண்டு நிலம், நீர், நெருப்பு என்னும் இம்முப்பூதங்களின் வெளிப்படையான உருவ மாத்திரத்தைத் தெரிந்துகொள்ளுமியல்புற்றது.

இரச தன்மாத்திரையான சத்வகுண சூக்குமமான ஜலம் இரசநேந்திரியங்களாகப் பரிணமித்து நாக்கிலிருந்து கொண்டு, மண், நீர் ஆகிய பூதங்களின் வெளிப்படையா யுள்ள இனிப்பு முதலிய இரச குணத்தை மட்டுமறிந்து கொள்ளுமியல்புடையது.

கந்ததன்மாத்திரையான சத்துவகுண சூக்கும பிருதிவி யின் சத்துவ பாகமானது—சிறுசிறு கிராணம் (மூக்கு) என் னும் பொறிகளாய் அமைந்து மூக்கின் நுனியில் இருந்து கொண்டு தூல பூதங்களின் நாற்றம் (வாசனை) என்னும் புலனை மாத்திரம் புலனுக்கிக் கொள்ளுமியல் புடையது.

இவ்வாருக ஸத்துவ குண சூக்குமபூதங்களைந்தும் ஒவ்வொன்றும் தனித்தனியே ஒவ்வொரு இந்திரியப் பெருங் கூட்டங்களாகப் பரிணமித்து ஒவ்வொரு ஆன்மாவுக்கும் ஒவ்வொன்ருய் இவ்வைந்தும் அமைந்து ஆன்மா அந்தந்த விஷயங்களை அறிதற்குச் சாதனங்களாயிருக்கும்.

இது உடம்பின் புறப்பாகத்து முகமுள்ளதாக அமைக்கப்பட்டு அறிந்து வருவதால் இதற்குப் புற அறி கருவி என்று பெயர்.

(வாயுக்கள்)

இரசோகுண விசிட்ட சூக்கும பூதங்களைந்தும் ஒன்ருய்க் கூடிய பாகமானது மேகம் துளி துளிகளாகப் பரிணமித்தது போல சிறுசிறு பிராணுதி பஞ்ச வாயுக்களாகப் பரிணமித்து ஒவ்வோரான்மாவுக்கும் ஒவ்வோரைந்தாகக் கொடுக்கப் பட்டு உடம்பின் மத்தியில் வைக்கப்பட்டு விருத்தி பேதத்திஞல் அதாவது—போக்கின் வித்தியாசத்திஞல், பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், என்னும் பெயர் பெற்று விளங்கும்.

இவைகளுள் பிராணனே முக்கியமானது. இதனது தொழில் வேற்றுமையினுலும். இட வேற்றுமையினுலும், போக்கின் (விருத்தியின்) வேற்றுமையினுலும், இது ஐந்தாகச் சொல்லப்படுகிறது.

இதில் பிராணன் மூக்கின் வழியாக உச்சுவாச நிசுவாசத்தைச் செய்யும் தொழிலுக்கு ஏதுவாய் சூக்குமமான பிராண சத்தியாய் இருதயத்திலுள்ளது.

அபானன், குடலைப்பற்றி நின்று கீழ்முகமுடையதாய் உண்ட நாலுவித அன்னத்தையும் பாகம் செய்யும் வைஸ்

வானராக்கினிக்குத் துணையாயிருந்து உதவி புரியும்.

ஸமானன், அன்னரஸமாகிய ரத்தம் முதலியவற்றை ரத்தாசயத்தினின்றும் அந்தந்தக் கருவிகளுக்கு வேண்டிய அளவு ஸமமாகப் பகுத்துத் தள்ளிக்கொடுக்கும்.

உதானன், உண்ட அன்னபானாதிகளை கழுத்தினின்றும் கடைந்து சென்று தங்கவேண்டிய இடங்களுக்குச் செலுத்துதல் முதலிய காரியத்தைச் செய்யும்.

வியானன், சரீர முழுவதும் வியாபித்து ஸப்த தாதுக்களிலும் நிறைந்து நின்று அவைகளை வளம்பெறச் செய்வது. இது மனோமய கோசத்துக்குப் பற்றுக் கோடாக இருக்கும். இவ்வைந்து வாயுக்களும் ஞனேந்திரியங்களுக்குள் வியாபித்து அவைகளைத் தொழிற்படுத்தும்.

(நாகாதி வாயுக்கள்)

இஃதன்றி வாந்தி பண்ணுவிக்கின்றது நாகன் என்றும், இமைத்து விழிக்கச் செய்வது கூர்மம் என்றும், தும்மச்செய்வது கிரிகரன் என்றும், கொட்டாவி கொள்ளச் செய்வது தேவதத்தன் என்றும். வீங்கச் செய்வது தனஞ்சயன் என்றும் ஐந்து வாயுக்கள் உண்டு. இவைகள் கர்மேந்திரியங்களைத் தொழிற்படுத்திக் கொண்டிருக்கும்.

(வைரம்பாதி வாயுக்கள்)

இவை யல்லாமல் வைரம்பன், முக்கியன், பிரபஞ்சனன் அந்தர்யாமி, மஹாப்பிராணன், என்னும் ஐந்து வாயுக்கள் உண்டு. இவைகள் சீவசம்பந்தமாய் இருந்துகொண்டு அகக்கரணங்களை நடத்திக்கொண்டிருக்கும்.

இவை பத்தும் பிராணாதிகளின் பேதமானவை என்று தத்துவக் கணக்கில் எண்ணாது விடுவதுமுண்டு. ஆயின்

அபானுதி நான்கையும் பிராண பேதம் என்று கொண்டு, உடம்பிலுள்ள வாயு பிராணன் ஒன்றே என்று கொள்ள லாமே எனின், ஒன்ருென்றேகொள்ளலாம். ஆயினும் முக்கிய மான பேதத்தை யங்கிகரித்து ஐந்துவாயுக்கள் என்று பெரி யோர்கள் சொல்லுகிருர்கள்.

இது ரஜசின் அம்சங்களை ஒன்ருய்க் கூட்டியபடியால் ஒன்ருயும், விருத்தி பேதத்தால் ஐந்தாயும், பத்தாயும், பதினைந்தாயுமிருக்கும்.

பிராணுதிகளின் சத்துவ பாகம் அகக்ரணங்களையும், மத்திம பாகம் ஞானேந்திரியங்களையும், தமோ பாகம் கர் மேந்திரியங்களையும், இயக்குமெனவும் சொல்லலாம்.

---

(கர்மேந்திரியம்)

இனி சூக்கும பூதங்களின் ரஜோகுண விசிட்டங்கள் ஞனேந்திரியங்களைப் போல தனித்தனியே காரியங்களா யின. அவற்றுள், சூக்குமமான ஆகாச பூதத்தின் ரசோம்சம், வாக்குகளாக பரிணமித்து வாயிலிருந்து கொண்டு பேசும் தொழிலைச் செய்யும். இம்மாதிரியே வாயுவின் ரசோ அம்ச மானது. பாணி (கை) என்னும் இந்திரியங்களாகப் பரிண மித்து இருகரங்களிலும் இருந்துகொண்டு சகல தொழில் களையும் செய்யும். அக்கினியின் ரசோ அம்சமானது பாதம் என்னும் கருவியாகப் பரிணமித்து, நடத்தல், ஓடுதல், முத லிய தொழில்களைச் செய்யும்.

அப்புவின் சூக்கும இரசோ அம்சமானது பாயு (மல சலங்களைக் கழிக்கச் செய்யும் சக்தி வாய்ந்தது) என்னுமிந்தி

ரியங்களாகப் பரிணமித்து, குகம் குய்யங்களைப் பற்றி நின்று மல ஜலங்களை விஸர்சனம் செய்யும்.

பிருதிவியின் இரசோ அம்சமானது உபஸ்தம் என்னுமிந் திரியங்களாகப் பரிணமித்து குய்யத்தைப் பற்றி நின்று சகல பிராணிகளுக்கும் இன்பத்தை அனுபவிக்கச் சாதகமா யிருப்பதன் மூலம் ஸந்ததி விருத்திக்குக் காரணமாயிருக்கும்.

இவ்வைந்தும் உயிர்களுக்குத் தொழில் செய்வதற்குச் சாதனங்களாய் அத்யாவசியமாயமைந்த படியினால் இவை களுக்குத் தொழிற் கருவிகள் (கர்மேந்திரியங்கள்) என்று பெயர் உண்டு.

இந்த வாயுக்களும் கர்மேந்திரியங்களும் இரசோகுண காரியமாதலால், ஆன்மாவானவன் முயற்சித்து பரோபகார மாய் நிஷ்காமமாக நல்ல தொழில்களைச் சலிக்காமல் செய்து, உண்மை நிலையை அடைவதற்குச் சிறந்த தொழிற்கருவிக ளாக பகவானால் அமைக்கப்பட்டிருக்கின்றன.

(தூலபூத உற்பத்தி)

தூலப் பொருள்களைப் பற்றி யல்லாமல் சூக்குமப் பொருள்கள். தொழிற்பட்டு பழுத்த பயன்களைக் கொடுக் கின்றனவில்லை.

ஆதலால் ஆண்டவனது ஆணையால் ("இவ்வாறு ஆவோம்" என்னும் எண்ணத்தால்) இச் சூக்கும பூதங்க ளின் தமோ பாகமானது, நெகிழ்ச்சியுடைய பால் தன் இன மான மோருடன் கலந்து தடித்துக் கட்டியானாற்போல ஐந்து பூதங்களும் ஒன்றோடொன்று சமமாகக் கலந்து சர்வ விவ கார சாதகமாகவும் எல்லா விதத்தாலும் உபயோகமாகும் படிக்கும் தூல பஞ்ச பூதங்களாயின. இவ்வைந்தின் கலப்பு பஞ்சீகரணமென்று சொல்லப்படும்.

இவ்வைந்தையும் சரி பாகமாக இரண்டிரண்டாகப் பகுத்து ஐந்து அரை அரைப் பகுதிகளையும் ஒவ்வொன்றை நான்காகப் பகுத்து தன் பாதி யொழிந்த நான்கு பூதங்களோடும் நான்கு அரைக்கால் பகுதியையும் கூட்ட ஒவ்வொரு பூதத்திலேயும் தன் அம்சம் பாதியும் மற்ற நான்கின் அம்சங்கள் சேர்ந்து பாதியுமாகக் கலந்து பஞ்சீகரணப் பட்டுத் தடித்து தூல பூதங்களாய் நிற்கும்.

(தூலபூத உற்பத்தியின் மற்றும் ஒருவகை)

ஒன்று ஐந்து பாகமாகும்படி ஐந்தையும் பகுத்து ஐம்பாகத்துள் ஒன்றை ஐந்தாகப் பகுத்து தன் பாகங்களை ஒழியாது ஐம்பூதங்களோடுங் கலக்க ஒவ்வொரு பூதத்திலும் இருபத்தைந்து பகுப்புக்களில் தன் அம்சமிருபத்தொன்றும் மற்ற பூதங்களில் இருபத்தைந்திலோரம்சமாக நான்கு பூதங்களினின்றும் நான்கு அம்சங்கள் சேர்த்து மொத்தம் இருபத்தைந்தும் நிறையப் பெற்று இப்படியே மற்ற பூதங்களும் ஒன்றிலைந்துமாகக் கலந்து பஞ்சீகரணப் பட்டு தூல பூதங்களாயின.

இவற்றுள் ஆகாயத்தில் சத்தகுணமொன்றே வெளிப்பட்டிருக்கும். காற்றில் சத்த, பரிசம் இரண்டும், தீயில் சத்த பரிச, ரூபமாய் மூன்றும், நீரில் சத்த பரிச ரூப ரச என்னும் நான்கும் மண்ணில் சத்த பரிச ரூப ரச கந்த என்னுமைந்தும் புலனாய் வெளிப்பட்ட குணங்களாயிருக்கும்.

இவைகளைச் சமமாகக் கலந்தபொழுது தாரதம்மியமாக குணங்கள் வெளிப்பட்டுத் தோன்றுதற்குக் காரணம் என்னவென்றால்:– பால் தயிராக மாறும்பொழுது வெண்மை மாறாமல் இனிப்பு மாத்திரம் மாறிப் புளிப்பாக ஆகிறது. மாங்காய் பழுக்கும்போது பச்சை நிறம் மாறி மஞ்சள் நிற

மாகவும் புளிப்புச் சுவைபோய் இனிப்புச்சுவை உள்ளதாக வும் மாறுகிறது. கடினமாயுள்ள அது கனிந்து மெதுவாகவும் ஆய்விடுகிறது. அது அது அந்தந்தப் பொருள்களின் இயல் புக்குத் தக்கவாறு கலப்பு வித்தியாசத்தினாலும் பாக வித்தி யாசத்தினாலும் அந்தந்த குணங்களோடு வேற்றுமையடை கின்றது.

அதுபோல ஆகாசாதி சூக்கும பூதங்கள் ஒன்றற்கொன்று வித்தியாசமுடையவைகளாயிருப்பதினாலும் காரணகாரியப் பொருள்களாயிருப்பதினாலும் இவைகளைச் சமமாகக் கலப் பதே சமமல்லாத கலப்பாகப் போய்விட்டபடியினால் காரண பூதங்களில் காரியபூதங்களின் குணங்கள் அந்தர்பாவமாய் (தோன்றாது)நிற்க, காரணபூதங்களின் குணங்கள் காரியபூதங் களில் வெளிப்பட்டுத் தோன்றி நிகழ்கின்றன. எங்ஙனமெ னில்:—பஞ்சீகரணம் செய்யப்பட்ட தூலஅக்னியில் காரண பூதங்களின் குணங்களான சப்த பரிசமிரண்டும் விளங்கு கின்றன. தன் குணமான உருவமும் விளங்குகின்றது. காரிய பூதங்களான நீர் மண் இவைகளுடைய அம்சங்கள் (பாகங் கள்) காரணபூதமான இவ்வக்னியில் கலந்திருப்பினும் பொருள்வித்தியாசத்தினாலும், கலப்பு வித்தியாசத்தினாலும், ஆண்டவனது ஆணையினாலும் அவைகளிலுள்ள, முறையே சுவையும் நாற்றமும் தோன்றுகின்றன இல்லை. அக்னியை முகர்ந்து பார்ப்பவரும் சுவைத்துப் பார்ப்பவரும் இல்லை யன்றோ! இவ்வாறே மற்ற பூதங்களின் தன்மைகளும் ஊகித்துக் கண்டுகொள்ளத்தக்கன.

———





## உலகப் படைப்பு

பரமான்மாவினுடைய அந்த ஆணையொன்றுலேயே தனக்கு அநந்யமாயுள்ள பிரமாதி கடவுள்களின் சங்கற்பத்தினுல் மேற்கூறிய தூல பூதங்களால் சீவர்கள் கர்மபலனையனுபவித்துப் பொதுநலச் சேவை செய்து முயற்சித்து ஞானம் பெற்று விடுதலை பெறுவதற்காக, மலை, கடல், மணல், மண், பாறை, முதலிய போகானுபவத்திற்குப் பொருத்தமான பூமிகளாகவும், நட்சத்திரம், சூரியன், சந்திரன், துருவன்முதலிய உள்ள வானமாகவும்,பாதலம், சுவர்க்கம், மத்தியங்களாயுள்ள அண்டங்களாகவும் இவை பல கோடிகளமைந்த பிரம்மாண்டங்களாகவும் இதன் உட்பிரிவானபுவனங்களாகவும் உலகங்கள் படைக்கப்பட்டன.

(தூல உடம்புகள்)

இவ்வுலகங்களிலும் உயிர்கள் கர்மபலனை நுகருவதற்கும், இனி நல்ல கர்மங்களைச்செய்து மேல் நிலைக்குப் போவதற்கும் யோக்யமாயமைந்த மக்கள், வீலங்கு, முதலிய உடம்புகளும் ஆக்கப்பட்டன. ஆறு தத்துவங்கள் உள்ளனவாகவும், ஏழு தாதுக்களால் அமைந்தனவாகவும், நால்வகை யோனியில் பிறந்தனவாகவும், ஏழுவகைத் தோற்றங்களில் வந்தனவாகவும், நாற்கதியிற் பட்டனவாகவும், மூவகைச்சாதியில் ஜனித்தனவாயும், இயங்கியலுடையனவாகவும், நிலையியலுடையனவாகவும், ஆறு ஆதாரமும் குறுக்குவடிவமுள்ளவைகளாயும், நெட்டைவடிவுள்ளவைகளாகவும் இவ்வுடம்புகள் ஆக்கப்பட்டிருக்கின்றன.

(மக்கள் யாக்கை)

அசு லக்ஷம் யோனி பேதமாயுள்ள இவ்வளவு உடம்புகளி லேயும் உயிர்கள் மேல் நிலைக்குப் போவதற்கும், கீழ்நிலைக் குப் போவதற்கும், நடுமுனையாயுள்ள உடம்பு எதுவென் ருல் இந்த மக்கள் ஆக்கை ஒன்றேயாகும். இதுவே உயிர் தங்கும் மர்மஸ்தானமாயுள்ள, மூலாதார முதற்கொண்ட ஆறு ஆதாரங்களும், உரியில், சட்டி யடுக்கினுற் போல, ஒன்றின்மேல் ஒன்ருக அடுக்கப்பட்டு ஊர்த்துவ முகமாய் நிமிர்ந்து நெட்டையாய் நிற்கவல்லது. மற்ற நீர் நிலம் விசும்பு களில் முறையே சஞ்சாரம் செய்யும் மிருகம் மீன் பறவை முதலியவற்றிற்கெல்லாம் மூலாதாரத்திலிருந்து தலை வரையு முண்டான ஆதாரங்கள் ஆறும் ஒன்றுக்குமேல் ஒன்ருயிரா மல், ஒன்றுக்கொன்று சமமாய்க் குறுக்கு(திர்யக்) வடிவமுள் ளதாய் அமைந்திருக்கும். இதுவே அவைகளுக்குப் பகுத் தறிவு வளராது போதறகுக் காரணமாயிற்று.

மக்களாக்கையிற்கூட உடம்பானது படுத்தும் வளைந்தும் நெளிந்தும் முடக்கியும் இருக்குமானுல் அப்பொழுது தெளிந்த அறிவும், கூரான மதிநுட்பமும், தொடர்ச்சியருத ஆராய்ச்சி யும் இடைவிடாத தியான செபங்களும் உண்டாகுவதில்லை.

வளையாமல், குனியாமல், கிடக்காமல், சாயாமல் ஆகார மாறும் ஒன்றற்கொன்று சமமாய் மேலோங்கி நிற்க நிமிர்ந்து உட்கார்ந்தபொழுது தான் மேற்சொன்னவைகள் கிரமமாக நிகழ்வதைக் காண்கின்ருேம். இவ்வுடம்புக்கு இயல்பாயுள்ள இந்த நிலையில் உடம்பைப் பெறும்பொழுது வைத்திராதவர் கள்தான் எல்லா நோய்களையும் சரீரத்தைச் சாய்த்து வளைத் துக் கிடத்தி அழைத்து ஏற்றுக்கொள்கின்றவர்களாக ஆகி ருர்கள். அல்லாமலும் நிமிர்ந்த ஆக்கை பெற்ற பலனையும்

கெடுத்தவர்களாகிறுர்கள். உடம்பை நிமிரவைத்து அதனுள்ளோங்கும் உணர்வையும் கோணலின்றி ஒரேமுகமாய் நிமிர வைத்து தோள், தலை, கழுத்து, உடம்பு, இவை நேரொக்குமாறு இருத்திப் பிராணவாயுவையும் அதன் இயற்கையளவில் வயிறு நிறைய உண்டுமிழ்ந்துகொண்டு சிறிதுநேரம் கூனுது, குறுகாது, சாயாது, வளையாது ஒரேமுகமான ஊர்த்துவமான இயற்கை நிலையில் இருந்தால் இடுப்புவலி உடம்புவலி தலைவலி எல்லாம் விட்டு வியர்த்து களைப்பு நீங்கி மனக்கவலையும் போய் தூல சூக்கும இரண்டு உடம்பும் தெளிவாயிருப்பதை அனுபவமாகக் காணலாம்.

ஆதலால் ஆன்மாக்கள் எதிர்பார்த்திருக்கத் தக்கதும் மேற்கதிக்கு அத்யாவசியமானதும் இன்றியமையாததும் எல்லாவிதமான அறிவுகளும் தாண்டவமாடுதற்கு அரங்கமாயுள்ளதும், படைத்தல் என்னும் தத்துவத்தின் லட்சியமாயுள்ளதும் அதன் முடியாயும், கிரீடமாயும், சிகரமாயும் உள்ளதும், ஆனுல் நீர்மேல் குமிழிபோல் நிலையாமையையே தலையிலெழுதி வந்ததும் இம்மக்கள் வடிவமைந்த உடம்பேயாகும்.

இத்தகைய இவ்வுடம்பை இறைவன் ஒவ்வொரு ஆன்மாவிற்கும் சிருஷ்டிக்கு ஒன்ருவது யாதானுமொரு செயலை விலையாகக்கொண்டு தனது பெரும் பரங்கருணையினுல் கொடுக்கின்ருர்.

இதனருமை பெருமை தெரியாது பகுத்தறிவைப் பயன்படுத்தி நாளுக்குநாள் முன்னுக்குச் செல்லாது விழித்துக் கொண்டே பராக்குப் பார்த்துக்கொண்டு ஒவ்வொருநாளும் பின்னுக்கு அடியெடுத்துவைத்துச் சாவுக்குழியில்விழுந்த மக்கள்தான் காலச்சக்கர வண்டியில் இறுகக் கட்டப்பட்டு இறைச்சி சுமந்து அலைந்து இழுத்து கஷ்டப்படுகிறவர்களாகிறுர்கள்.

படைப்பின் கடைசியான அவயவம் ஆங்காங்கு இத்தூல சரீரங்களேயாகும். இவைகளில் மனிதவுடம்பைப் பெற்றதனுல்தான் பராசத்தியானவள் பரமாத்துமாவை அநந்ய கணவனுகப்பெற்று சூல்கொண்டு பெற்றதனுல் பெற்ற பேற்றை பெற்றவளாகின்ருள். மற்றவற்றையெல்லாம் பெற்று எரிந்த வயறு குளிர்ந்தவளாகவுமாகின்ருள்.

---

## மனித உடம்பின் மேன்மை

சிருஷ்டியின் உன்னத (உச்சி) நிலை இம்மனித உடம்பில்தான் உண்டு. இதன் மேல்பாகத்தில் சுகங்களும் சுகத்துக் கேதுவானவைகளும் உண்டு. இதன் கீழ்பாகத்தில் துக்கங்களும் துக்கத்துக் கேதுவானவைகளும் உண்டு. இந்த உன்னத நிலையிலுள்ள ஆன்மா எந்த பாகம் வேண்டுமாயினும் வருத்தமின்றி வழுக்கிச்செல்லலாம்.

மரத்தில் பழுத்தபழம் காம்பினின்றும் விடுபட வேண்டியதுதான் முதலில் வேண்டப்படுவது. அது யாதானுமொரு முயற்சியால் விடுபடுமாயின் எவ்வளவு தூரமாயினும் யாதொரு பிரயத்தினமும் இல்லாமல் பூமிக்கு வந்து சேர்ந்து விடுமென்பதில் சந்தேகமில்லை.

மலை உச்சியிலிருக்கும் பெரிய உருண்டைக் கல்லை மேற்றிசைத் தாழ்வரைக்கோ அல்லது கீழ்த்திசைத் தாழ்வரைக்கோ கொண்டுவரவேண்டுமானுல் அதைக் கீழிருந்து உச்சிக்குக் கொண்டுபோவதற்குவேண்டிய முயற்சியில் பதினுயிரத்தில் ஒரு மடங்குகூட தேவையாக இராது. ஒரு உருட்டு உருட்டினுல் போதுமானது. அல்லது அசைத்துவிட்டாலும் சரி. மீண்டு அஃது மெதுவாகவோ, விரைவாகவோ முட்டி

மோதி, தான்மாத்திரமன்றி, இன்னும் சில பொருள்களையும் சேர்த்தடித்துக்கொண்டு வந்து, தங்கவேண்டிய கடைசி நிலத்துக்கு வந்துவிடும். ஆனால் முதலில், கீழ்நோக்கி அசைத்து விடுகின்றானா, அல்லது மேல்நோக்கி அசைத்து விடுகின்றானா? என்பதுதான் கேள்வி. அசைத்துவிட்ட பின்னர் எவ்வாறு அது தன் முடிவிடத்தை அடைகின்றது என்பதைப்பற்றிக் கேள்வியில்லை. ஏன் என்றால் அது அவ்வளவு உன்னத நிலையிலிருக்கின்றது.

அதைப்போல உச்சிநிலையாகிய இந்த உடம்பிலுள்ள இவனுக்கு யாதாயினும் ஒரு பக்கம் அடியெடுத்து வைக்கும் சுதந்திரம் உண்டு. உச்சியில் நிற்கும் இவனுக்கு மேல்பக்கம் (நன்மையிலோ) அல்லது கீழ்பக்கம் (தீமையிலோ) முதன் முதலில் அடியெடுத்து வைக்கும் பொறுப்பு முழுவதும் இவன் வசமாகவே விடப்பட்டிருக்கிறது. இதில் யாரும் தலையிட்டு எவ்விதத்திலும் எவ்வளவும் இவன் பொறுப்பை வாங்கிக்கொள்ளமாட்டார்கள். சிறிதும் இப்பொறுப்பினின்றும் இவனை நீக்க யாராலும் எந்த சாஸ்திரத்தாலும் முடியாது. இவனும், நன்மை தீமையில் முதலில் அடியெடுத்துவைக்கும் இப்பொறுப்பை இன்னொருவர்மேல் போட்டுவிட்டு எவ்விதத்திலும் எப்படியும் தப்பித்துக்கொள்ளவும் முடியாது.

ஆகையால் முதலில் இவன் கீழ்நோக்கி யடியெடுத்து வைப்பானாயின் பின் அப்பொழுது தொட்டே கீழேநழுவ ஆரம்பித்துவிடுவான். மீண்டு தன் முயற்சி இல்லாமலேயே நாளுக்குநாள் பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் கீழ்முகமான பாதையில் போய்க்கொண்டே துக்கங்களையும் அதற்கேதுவானவைகளையும் அனுபவித்துக்கொண்டு கீழுக்

குப்போய் முடிவில் நிரந்தர துக்கமாயுள்ள அடிப்பாகமான பெரும் சிரமத்தை ஒரு சிரமமுமில்லாமலேயே அடைந்து நீங் காத துக்கசாகரத்தில் அழுந்தவேண்டி நேருகிறது.

இங்ஙனமன்றி தனது பொறுப்பை யுணர்ந்து மனிதனுன வன் மேல்நோக்கி ஓரடி எடுத்துவைப்பானுயின் அன்று தொட்டு இயல்பாகவே நிஷ்காமகர்மம், பக்தி, ஜபம், பரோப காரம், இன்சொல் முதலியவாய மேற்றிசைப்பாதையில் வழுக் கிச்சென்று செல்லச்செல்லச் செல்லுவதற்கு துணைகளும் ஏற்பட்டு, இன்பங்களையும் இன்ப காரணங்களையும் கண்டு அனுபவித்துக்கொண்டே சென்று முடிவில் நிரந்தரமும் நிரதிசயமுமான இன்பசாகரத்தில் அழுந்தி நீங்காத பேரின்ப நிலையைப் பெறுகின்றுன்.

இதனுல் கீழுக்கோ அல்லது மேலுக்கோ ஒரு அடியெ டுத்து வைத்தால் போதுமானது. மறுபடி யாதொரு சிரமமு மில்லாமல் தானுகக் கொண்டுபோய் சேர்க்கவல்ல அத்தகைய உச்சி நிலையிலுள்ளது இம் மனித உடம்பு என்பதையும் சிருஷ்டியின் (படைப்பின்) லக்ஷியம் இதுதான் என்பதையும் படைப்பின் சிகரமும் இதுதான் என்பதையும் இதனியல்பை யும் இதன் பொறுப்பையும் நன்கு தெரிந்துகொள்ளவேண் டிய கடமை இதற்குத்தான் உண்டு என்பதையும் நன்கு தெரிந்து நடந்துகொள்ளத்தக்கது.

---

## பஞ்ச கோசங்கள்

### (அன்னமய கோசம்)

மேற்குறித்த இந்த தூலவுடம்பு அன்னமயகோசமாகும். இது அன்ன ரசத்தின் காரியங்களான சுக்கில சுரோணிதங் களால் உண்டாகி சோற்றுலெடுத்த சுவர்போன்று இருப்ப

தாலும், உள்ளிருக்கும் ஆன்மாவை சட்டைபோல மறைத்துக்கொண்டிருப்பதாலும், இதற்கு அன்னமய கோசம் என்று பெயர். இது தமத்தில் தமோவிசிட்டத்தின் காரியமாயிருக்கும்.

தூல சரீரத்தின் மேற்பாகத்திலுள்ள வெண்காய சருகு போன்றுள்ள ஒரு சிறு லேசான (பீத்) தோலுங்கூட இவ்வான்மாவை மறைத்துவிடுகிறதென்றால் மற்ற எலும்பு, தசை ரத்தம் முதலியவைகளைப்பற்றி பேசுவானேன். அஃதெப்படி மறைக்கின்றதென்றால் மக்களின் சிவப்புக், கருப்பு என்னும் நிறங்களெல்லாம் வெண்காயச் சருகை விட லேசாயுள்ள இந்தத் தோலில்தான். அதற்கப்புறம் ஊசிமுனையால் கீறிப் பார்த்தால் ரத்தம் மாமிசம் நரம்புகளைக் காண்கிறோம். இக்கருப்பு. சிவப்பு, வெள்ளை யெல்லாம் இந்த தோலில்மட்டில் தான். இதுவே நான் வெள்ளையன் இவன் கருப்பனென்றும் நான் சிவப்பி இவள் கருப்பி என்றும், ஆன்மாவை முழுதும் மறைத்திருக்கிறது. இன்னும் பலர் இந்த அற்பமானதும் லேசானதுமான வெள்ளை முதலிய தோலையே அஸ்திவாரமாகக்கொண்டு உலக வாழ்வு என்னும் மாளிகை கட்டி அதிலேயே இறங்காமல் வசிக்க ஆசைப்பட்டு நடத்திவருகிறார்களென்றால் இந்த மறைப்பின் சிகரம் எவ்வளவு உயர்ந்திருக்கின்றதோ தெரியவில்லை. மற்ற மறைப்புகளின் தன்மையும் இதுபோல கண்டுகொள்ளத்தக்கது.

இந்த அன்னமய கோசம் தனக்குள்ளாய் மன்னிய அந்த பிராணமயனாலே பூரணமாய் விளங்கும்.

---

(பிராணமய கோசம்)

பிராணமய கோசமாவது தமஸின் ரஜோவிசிட்டத்தின் காரியமாய் இருக்கும், பிராணுதி வாயுக்களும் கர்மேந்திரியங்களும் கூடிய கூட்டமே இக்கோசமாகும். இது அன்னமய கோசத்திற்கு உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கும். இது பூரித்திருப்பதிஞலேயேதான் அன்னமயகோசம் நல்ல நிலையில் பூரண ஸ்திதியை பெற்றிருப்பதாகும். உயிர் போயிற்று வந்தது என்பதாதி உலக வாக்காலும் நான் பலசாலி என்பதாதிய அனுபவத்தாலும் இது ஆன்மாவுக்குக் கோசமாயிருந்து மறைப்பது காணத்தக்கது. இது தனக்குள்ளாய் மன்னிய மஞேமய கோசத்தால் நல்ல நிலையில் இருக்கத்தக்கது.

---

மஞேமய கோசம்

மஞேமயமாவது மனமும் ஞானேந்திரியமும் கூடிய தமஸில் ரஜோகுணம் கலந்த சத்துவத்தின் விகாரமாகும். இதில் மனமானது வான்பொறியைந்தையும் ஸகாயிகளாகக் கொண்டு நான் இதைக் கண்டேன், நான் அதைக் கேட்டேன், நான் இதைத் தொட்டேன், அதை விட்டேன் என்று அடிக்கடி பிடிக்கவும் விடவுமாய் இருந்துகொண்டு ஆன்ம ஒளியை மறைக்கும். இது பிராணமயனுக்கு வேருய் பிராணமயனுக்கு உள்ளும் புறம்பும் வியாபித்து இருக்கும். தான் விக்ஞானமயஞலே நிறைவெய்தி விளங்கும்.

---

விக்ஞானமய கோசம்

விக்ஞானமய கோசமாவது ஞானேந்திரியங்களும் புத்தியும் மூலாகங்காரமும் கூடிய தமஸின், சத்துவத்தின் விகார

மாகும். அறிவுமயமாயுள்ள இந்த அகங்காரமானது இந்திரியங்களைச் சகாயமாகக்கொண்டு 'நான் கண்டுணர்ந்தேன், நான் கேட்டறிந்தேன், நான் தொட்டுப்பார்த்தேன்' என்னும் வடிவத்தால் ஆன்ம ஒளியை மறைக்கும்.

இது ஆன்ம ஒளியைத் தப்த அயப்பிண்டம் போலப் பெற்றுத் தேகேந்திரிய கரணங்களுக்கெல்லாம் கொடுத்து நான் மனிதன், நான் வேளாளன், நான் பிராமணன், நான் பருத்தவன், மூத்தவன், பணக்காரன், படித்தவன் என்றும், கண்டவன் கேட்டவன் என்றும், அகங்கரித்துக்கொண்டிருக்கும். இது மனோமய கோசத்திற்கு வேருய் அதற்கு உள்ளும் புறம்புமாய் வியாபித்து விளங்கியிருக்கும் ஆனந்தமயனாலே நிறைவெய்தி விளங்கும்.

---

## ஆனந்தமய கோசம்

ஆனந்தமய கோசமாவது நனவு கனவுகளில் இன்பத்துக் கேதுவான விஷயங்களைக் கண்ட இடத்தும், அவை ஸமீபிக்கப்பெற்ற இடத்தும் ஸமீபித்தஅவைகளை அடைந்து அனுபவிக்குமிடத்தும் முறையே உண்டாகும் (1) பிரியம் (2) மோதம் (3) பிரமோதம் என்னும் ஆனந்த வகைகளும், மூல அக்ஞானமாகிய அவித்தை என்னும் மூல சரீரத்தோடு இயல்பாகக்கூடித் தூக்க காலத்திலே அனுபவிக்கப்படும் சுகமும் ஆகிய இன்ப வகைகளின் சமுதாயம் ஆனந்தமய கோசம் என்று சொல்லப்படும்.

இது ஜாக்கிர சொப்பனங்களில் நான் கண்டின்புறுகிறேன், நான் கேட்டு இன்புறுகின்றேன், என்றும். இன்புற்றேன், இன்புறுவேன் என்றும் முக்கால சம்பந்தமாகவும்

சுழுத்தியவஸ்தை சம்பந்தமான இன்பத்தில் உறங்கி இன்புற்றேன் இன்புறுவேன் என இறப்பு எதிர்வு ஒட்டியும் நான் சுகமாயிருக்கின்றேன் சுகிக்கின்றேன் நான் இன்பி எனவும், இன்ப சொரூபமாயுள்ள ஆன்மாவை விடய இன்பமான கோசமாயிருந்து மறைக்கும். இது விஞ்ஞான மயனுக்கு வேருய் உள்ளும் புறம்புமாய் வியாபித்திருக்கும். சுத்தான்ம இன்பத்தின் நிறைவால் நிறைவுற்று மற்றவைகளுக்கும் நிறைவைக் கொடுக்கும். அவ்வான்மாவோ எனில் இன்பத்தாலும், விளக்கத்தாலும், இருப்பாலும், இயல்பாகவே நிறைவுற்று விளங்காநிற்கும்.

வாழைத்தண்டை மட்டைகள் மறைத்தன போலும், கத்தியை உரை மூடியது போலும், கோசாகார புழுவைத் தோல் மூடியது போலும் இவ்வைந்தும், ஆன்மாவை மூடி மறைத்திருப்பதால் கோசங்களாயின. நல்ல ஆசானிடத்தாவது, சாஸ்திரங்களை உள்ளவாறு அலசிப்படித்த சான்ருேர்களோடாவது, தனித்து ஏகாக்ரசித்தராகவாவது, இருந்து நேர்மையாகவும், நெறியாகவும் பஞ்ச கோச விசாரம் செய்தால் வாழைமட்டையை ஒவ்வொன்ருக நீக்கி தண்டைக் காண்பதுபோலச் சச்சிதானந்த வடிவமான ஆன்மாவைப் பரோக்ஷமாகவாவது நன்கு காணலாம்.

---

## உபாதி

இத்தத்துவங்களை எட்டு உபாதிகளாகவும் சொல்லுவார்கள். (1) வான் வளி தீ நீர் மண் ஆகிய ஐந்து தத்துவங்களான தூல சரீரம் (2) பத்து இந்திரியங்களின் கூட்டம். (3) பிராணுதி வாயுக்களின் கூட்டம் (4) மனம் (5) புத்தி (6) சித்தம் (7) அகங்காரம், (8) அவித்தை இவ்வெட்டும் ஆன்மாவை

பந்தியாயலே (கட்டாமலே) கட்டுப்படுத்தி மேற்கூறிய படி நாநாவிதமாக விவரிக்கப்படும்படி செய்வதால் தனித் தனியே உபாதிகளாயின. தேகம் முதற்கொண்ட ஏழும் ஜீவ காரிய உபாதி யென்றும், மூலாவித்தை ஒன்றும், ஜீவமூல உபாதி யென்றும் ஜீவகாரண உபாதி யென்றும் இவைகள் துவம் பதமுக்யார்த்தமாயுள்ளன என்றும் துவம் பதஅசுத்தப் பொருள் என்றும் சொல்லப்படும்.

---

## மூவுடம்பு

### (தூல சரீரம்)

சொல்லிவந்த தூல பஞ்ச பூதாத்மக:மாயுள்ள தூல உடம்பே தூல சரீரமென்று சொல்லப்படும். இது தமஸின் பரிணாமமாகும். இவ்வுடம்பு அபிமானியாயுள்ள ஜீவனுக்கு விசுவன், (உலகன்) என்று பெயர். இவன் கண்ணின் கருவிளி யின் நடுப்பாகத்தை சிங்காசனமாகக் கொண்டு கொலுவீற் றிருந்து எல்லாத் தத்துவங்களோடுகூடி நனவாம் (ஜாக்கிரத) காலத்தை நடத்துவான். இச்சரீரம் அன்னமய உடம்பு நவத் வாரபுரம், த்ரிதோஷபாண்டம், ஏழு சாலேக (சன்னல்) இருவாயில் மனை முதலிய பெயர் பெறும். இத்தூல முழுவ தும் சேர்ந்த கூட்டத்தை ஈசுவர விராட் உடம்பென்றும் அபிமானியை வைச்வானரனென்றும் சொல்லுவார்கள்.

---

## சூக்ஷ்ம உடம்பு

சூக்ஷ்ம பூதங்களின் காரியமான தமஸின் சத்துவ ரஜ ஸாம் இரண்டின் விகாரமும் சூக்ஷ்ம சரீரம், லிங்க சரீரம், நுண்ணுடம்பு என்று சொல்லப்படும். இது அந்தக்கரணம்

நான்கு, ஞானேந்திரியம் ஐந்து, வாயுக்கள் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து ஆகப் பத்தொன்பது தத்துவங்களின் கூட்டமாக இருக்கும். இதில் சித்தம் புத்தி ஒழிந்த பதினேழு தத்துவங்களோடு கூடி சொப்பனவத்தையை கழுத்தை இடமாகக் கொண்டு ஜீவான்மா அநுபவிக்கும். இந்த லிங்க சரீராபிமானியாயுள்ள உயிருக்கு தைஜசன் என்று பெயர். இந்தச் சூக்கும சமுதாயத்தை இறைவனுக்கு இரணிய கர்ப்ப உடம்பென்றும் அபிமானியை இரணிய கர்ப்பன் என்றும் சூத்திராத்மன் என்றும் கூறுவர். இத்தூல சூக்கும உடம்பு இரண்டையும் காரிய உடம்பு என்பர். இந்தச் சூக்கும உடம்பின் அவயவங்கள். தூலசரீர அவயவங்களில் இருப்பது அனுபவத்தில் காணத்தக்கது. கருப்பஞ்சாற்றைக் கையால் தொடுவோமாயின், குளிர்ந்த பரிசமொன்றை மாத்திரம் தெரிந்து கொள்ளுவோம். அதே சாற்றை நாக்கால் தொடுவோமாயின் குளிர்ந்த பரிசத்தோடு இனிப்பு என்ற இரஸத்தையும் தெரிந்துகொள்ளுகிறோம். இந்த வேற்றுமைக்குக் காரணம் தூலசரீராவயவமான கையில் சூக்ஷ்ம சரீராவயவமான பரிசேந்திரியம் ஒன்று மாத்திரமிருக்கிறது. நாக்கிலோ பரிசேந்திரியத்தோடு ரஸனேந்திரியமுமிருக்கிறது. அதனால் ஆன்மாவானது தூலசரீராவயவமான நாக்கிலுள்ள சூக்கும சரீராவயவங்களான மெய் வாய் என்னும் இரண்டிந்திரியங்களாலும் கருப்பஞ்சாற்றிலுள்ள குளிர்ச்சி இனிப்பு என்னும் இரண்டு குணங்களையும் ஒருங்கே அறிந்துகொள்ளுகின்றது.

இவ்விதமே மற்ற அறிகருவி, தொழிற் கருவிகள் தூல சரீரத்திலிருக்கும் விதம் கண்டு கொள்ளத்தக்கன.

---

### காரண உடம்பு

காரண சரீர மென்பது ஜீவனது நிலைக்குக் காரணமாயுள்ள அவித்தையே (மூலாஞ்ஞானமே) ஆகும். தூல சரீர அவயவங்களைத் தழைகளாகவும் சூக்ஷ்ம சரீராவயவங்களைக் கிளைகளாகவும் மூலாகங்காரத்தை அடிமரமாகவும் கொண்டுள்ள இந்த ஸம்ஸார மரத்திற்கு விதையாயுள்ளது இந்த அவித்தையேயாகும். இதனாலும் இதற்குக் காரண சரீரமென்று பெயராயிற்று. இஃதோடு கூடிய ஆன்மாவிற்குப் பிராக்ஞனென்று பெயர். இவன் இருதயஸ்தானத்தினின்றும் கருவி கரணங்களெல்லாமடங்கப் பெற்று தூக்க நிலையை யனுபவிப்பான். அவித்தை யொன்றால் மாத்திரம் மறைபட்டுத் தனது ஆன்மானந்தத்தை நீண்டகாலமனுபவிப்பான். இந்நிலை ஜீவர்களனைவருக்கும் எல்லாவிதமான களைப்பையும் மாற்றி இளைப்பாற்றி விடுவதாகும். இவ்வவித்தையின் சமுதாயத்தை அவ்வியத்தம் என்றும் ஈசுவரகாரண உடம்பென்றும் அவ்யாகிருதமென்றும் சொல்லுவார்கள். இதனபிமானியை அவ்வியத்தன் அவ்யாகிருதன் காரணோபாதிகன் முதலியவாகச் சொல்லுவார்கள்.

---

## ஐந்து அவத்தை

### நனவு

அறிவானது பொருளோடு பொருந்திப் பொருள் வடிவமாயிருக்கும் நிலை நனவு எனப்படும். அஃதாவது—எவ்வாறு அறிவு நிகழ்கின்றதோ அவ்வாறு பொருளும், அல்லது எவ்வாறு பொருளுளதோ அவ்வாறு அறிவும் ஆக இரண்டும் ஒன்றை யொன்று தழுவி நிற்கும் நிலையாகும்.

### கனவு

அறிவானது பொருளோடு பொருந்துதலின்றி அறிவு மாத்திரமாய்ப் பொருளோடு நிகழ்வது போல நிகழும் நிலையாகும்.

---

### சுழுத்தி (உறக்கம்)

பொருளோடு பொருந்திப் பொருள் வடிவாயுள்ளதும் பொருளோடு பொருந்தாது பொருள் வடிவாயுள்ளதுமாகிய நனவு கனவாமிரண்டு அறிவுமில்லாமல் இருண்டு அறிவாய்ச் சுகமாய் இருக்கும் நிலையாகும்.

---

### துரியம்

பொருள் வடிவாயமைந்த அறிவுமயமாயுள்ள இரண்டு விதமான சகல நிலையுமின்றி இருண்ட அறிவுமயமான கேவல நிலையுமின்றி இருதய மத்தியிலெழுந்த ஞான சூரியனைப் போன்று சுயம் பிரகாசமாய் உணர்வொளியே சொரூபமாய் உள்ள திரிபுடியற்ற இயற்கை நிலையாகும்.

துரியாதீத மென்பது தனிப்பட்ட ஓரவஸ்தை யல்ல. துரியத்தின் மேற்பாகத்தை அவ்வாறு கொள்வது.

---

## தத்துவக்கணக்கு

### ஐம்பூதம்

தூல பஞ்சபூதங்களின் பரிணாமமாய்ப் பௌதிகங்களாய் நாம் காணக் கேட்க அனுபவிக்கப்படுகின்ற பதார்த்தங்களின் தொகை வகைகள் இவ்வளவென்று எண்ணிலும் எழுத்திலும் அடங்காதவைகள் ஆகும்.

தத்துவம் என்றால் அந்தந்தப் பொருள்களின் இயல்பு. அதாவது ஒருபொருள் மற்றவற்றைக்காட்டிலும் தனதியல்பு மாறாது தானிருக்கும் நிலையில் இருக்கும் தன்மை. எங்ஙன மென்னில், நெல்லானது எவ்வித உயர்ந்த அல்லது தாழ்ந்த நிலத்திட்டாலும், சோளம், கம்பு, தென்னை இவைகளாக ஆகாது தன்னியல்பு கெடாமல் தான் நெல்லாகவே இருக்கும் தன்மையாகும். இம்முறையில் நாம் உலகப்பொருள்களை எடுத்துக்கொண்டாலும் தத்துவங்கள், கணக்கிலடங்காதவை களாகிவிடும். ஆகையால் நாம் அனுபவிக்கப்படும் பொருள் களெல்லாவற்றையும் காரண வகையைக்கொண்டும் ஜாதி வகையைக்கொண்டும் பகுத்து நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு என உணர்வியல்பாம் உயிர் ஒன்றும் ஒழிந்த உடல் முதற்கொண்ட எல்லாப் பொருள்களையும் ஐம்பூத விகாரங்களெனவே கண்டு ஐந்து தத்துவங்களாகவே கொள் ளத்தக்கன.

இப்படிப் பஞ்சபூத பௌதிகங்கள் முழுதும் தூலமா யுள்ள ஐந்து தத்துவங்களாகும். இந்திரிய கரணவாயுக்கள் பத்தொன்பதும் சூக்கும தத்துவங்களாகும், மாயை என்றும் அவித்தை என்றும் சொல்லப்படுன்ற காரண தத்துவம் இரண்டு ஆகும். ஜீவன் ஒன்று. பரமாத்துவிதமான ஈசு வரன் ஒன்று. சின்மாத்திரமாயுள்ள வெறும் இறைவன் ஒன்று. ஆக தத்துவங்கள் இருபத்தொன்பது ஆகும்.

"உலகங்கள் முழுவதையும் ஒரு காலால் அடக்கி உணர்வே முக்காலாகப் பந்தாடா நின்றேன். என்பதனும்

"पादोऽस्य विश्वा भूतानि" என்பதாதிகளானும், இறைவனைப் பரமாத்துவிதமான உலக முதல்வன் என்றும் சின்மாத்திரமாயுள்ள வெறும் இறைவன் என்றும் எளிதி லுணரப் பகுத்துணர்த்தப்பட்டது.

இவற்றையே சுருக்கியும் பெருக்கியும் பலவாருகச் சொல்லலாம். ஷட்கோச தத்துவங்கள், சப்த தாதுக்கள், பஞ்சாவத்தை, பதினைந்து வாயுக்கள், பூதங்களின் புறக்கூறுகள் இவற்றினையெல்லாம் கூட்டி 96 ஆகவும், இவற்றுட் சிலவற்றைச் சிலவற்றில் அடக்கி 64 என்றும், 51 என்றும் 36 என்றும் 30 என்றும் சொல்லுவார்கள். இன்னும் தத்துவங்களைச் சுருக்கி விளக்கவேண்டுமானுல், தூலமாயுள்ள தத்துவங்களை ஐந்திற்குங்கீழ்ச் சுருக்கிக் காட்டுவதற்கில்லை.

சூக்கும தத்துவங்கள்—வாயுக்கள் பதினைந்தையும் பிராணுதி ஐந்தாகவும், அதையும் மற்றவை பிராண பேதமானபடியினுல் பிராணன் ஒன்றே எனவும், அந்தக்கரணம் விருத்தி பேதத்தால் நான்காய் இருப்பதல்லது சொரூப வேற்றுமை இல்லாதபடியாலும் அதையும் ஒன்ருகவே அடக்கி ஒன்று எனவும், இந்திரியங்கள் பத்தும் தனித்தனிப் பொருள்களான படியால் அவைகளை ஒன்றில் ஒன்று அடக்குவதற்கில்லை. ஆதலால் சூக்கும தத்துவங்கள் 12, தூல தத்துவங்கள் 5. எனவும் சுருக்கலாம். ஜீவன் கடவுள் என இரண்டைச் சேர்த்து 19 தத்துவம் எனவும் கூறலாம்.

இன்னும் தூல பௌதிக தத்துவங்களெல்லாம் தூல பூதம் என ஐந்தாகக் கொண்டதுபோல, சூக்கும பௌதிகங்களெல்லாம் சூக்கும பூதங்களாகக்கொண்டு மாயா விசிட்ட ஈச்வரனுக்கும் பிரம்மத்துக்கும் வேற்றுமையின்றி இருப்பது கொண்டு கடவுள் ஒன்று ஜீவன் ஒன்று எனக்கொண்டு தத்துவம் 12 எனவும் கொள்ளலாம்.

இதிற் கூறிய பத்துக்கும் தூலம், சூக்குமம் என்பதைத் தவிரப் பொருட் பேதம் காணுமையால் அவற்றை 5 ஆகக் கொண்டு பூதம் ஐந்து, ஜீவன் ஈசன் இரண்டு ஆக 7 எனவும் கொள்ளலாம்.

இவற்றில் ஜீவனுக்கும் ஈசனுக்கும் உபாதிபேதம் அல்லது ஆன்மத்தன்மையில் பேதமின்மையின் ஒன்றெனக்கொண்டு பூதங்களுக்குத் தாயான பிரகிருதியை ஒரு பொருளெனக்கொண்டு தத்துவம் 7 எனவும் கொள்ளலாம்.

மூலப்பிரகிருதி இறைவனுக்கு அக்கினியிற் சூடுபோன்ற சத்தியாயிருத்தலினால், குயவனிடத்திலுள்ள குடோத்பாதக சக்திபோல வேருயின்மையினால், ஆண்டவனொருவனும் ஆகாசாதி ஐவருமாக எல்லாமாயுள்ள ஆறுமுகம் போன்று 6 தத்துவமாகவும் கொள்ளலாம்.

எவ்வாறு இறைவனிடத்தினின்றும் ஆறுமுகம் தோன்றி இறைவனையும், இறைவியையும், எல்லாப்பொருளையும் ஒழியாது ஆறுமுகமாயிருக்கின்றதோ, அவ்வாறே அவ்விறைவனிடத்தினின்றும் இவ்வைம்முகங்கள் (பிரதானங்கள்) தோன்றி இறைவனை நீக்காது ஆறுமுகங்களாய் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் உள்ளும் புறம்புமாய் எல்லாமாய் அல்லவுமாய் விளங்குகின்றன.

சகல காரணபூதமான பூதமைந்தோடு இரவி, மதி, புருடனையும் கூட்டி இறைவனுக்கு அட்டமூர்த்தம் எனக் கூறுவதுண்டு. இதை நாவால் மாணிக்கக் கோவையிட்ட பெருமானும் 'நில நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன் புலனாயமைந்தனோடு எண்வகையால் புணர்ந்து நின்றான்' என்றும்: இப்பொருளையே புல்செதுக்கும் தமிழ்வேதப்பழங்கிழவனாரும்

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எரியும்காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி

என்றும் திருவாய் மலர்ந்திருப்பது காணத்தக்கது. இவ்வெட்டும் தனித்தனியே அவனது வடிவம் அதாவது ஒவ்வொன்றும் தனித்தனியே அவனது சொரூபம் என்று சொல்லப்படும். இஃதன்றியும் உலகவடிவமாயுள்ள விராட்டென்றும், அவ

னது ஒன்றுன உடம்பிற்கு இவைகளை அவயவங்களாகவும் சொல்லுவது உண்டு. அஃது உபநிடதங்களில் வருமாறு—

"அங்கி தலை, வாய் விவிதமான மறை, பானு திங்கள் விழி, எண்டிசைகளும் செவிகள். வாயு தங்கும் உயிர் தன்னி தயமே சகலமும் கால் இங்கு அவனி சங்கரன் இருக்கும் வடிவு ஈதால் எனவும்

இவைபோல்வனவும் காண்க. இக்கவியில் "தன்னிதயமே ஸகலமும்" என்பது பின்னர் எடுத்தாளப்படும். பொருள் ஆழம் ஆண்டுக் காணலாம்.

ஐம்பெரும் பூதங்களோடு அகங்கார தத்துவம் மகத் தத்துவம் பிரகிருதி என்னும் மூன்றையும் கூட்டி அட்டப்பிரகிருதி எனவும் கூறுவார். இவ்வெட்டும் பரம்பெரும்பொருளினின்றும் தோன்றியவையாயினும் மற்ற எல்லாப் பொருள்களுக்கும் காரணமாயிருத்தலின் இவைகள் முதற் காரணவாசகமான பிரகிருதியென்றும் பெயரைப் பெற்றன.

இவற்றில் கடவுளாகிய முதற்பொருளினின்றும் நேரே முதற் காரியப்பொருளாய்த் தோன்றியது ஆகாயதத்துவமென்றே சொல்லலாம். இதற்கிடையிலுள்ளவைகள் விதை பயிராவதற்கு இடையிலுள்ள அவஸ்தைகளைப் போன்றவைகளேயாகும். நம்மாழ்வாரும்

'முதல்தனிவித்தேயோ முழுமுவுலகாதிக்கேல்லாம்'

எனக் கூறியிருப்பதனுல் இறைவனே முதல்தனி வித்தாகின்ருன்.

அந்த வித்து - காரியத்தை அடக்கிக்கொண்டு இருந்த பிரளயநிலை போக, இனிக் காரியத்தை ஆரம்பிக்கலாம் என விதைக்க எடுத்துக்கொண்ட சிருஷ்டி ஆரம்பநிலை பிரகிருதியாகும் (இது விதைக்க எடுத்த விதை போன்றது.)

விதைத்தபின் அது உப்பி முளைக்காமலும் முன்போலிராமலும் இருக்கும் நிலைபோன்றது மகத் தத்துவம் என்பதாகும். மீண்டு அதில் முளையுண்டானாற்போல்வது அகங்கார தத்துவமாகும். மீண்டு அது பயிராவது போன்றது ஆகாய தத்துவமாகும். எங்ஙனம் விதை காரண தத்துவமும், பயிர் காரிய தத்துவமாமோ, இதற்கிடையிலுண்டான தத்துவங்களெல்லாம் விதை பயிராவதற்கு முற்கணம் வரையும் அதற்கு யோக்கியமாயமைந்த அவத்தா பேதங்களேயாகுமோ ஆங்ஙனமே சிதம்பரம் (சித்தான அம்பரம்) பூத அம்பரமாவதற்கிடையிலுண்டான அவத்தைகளேயாகும் அகங்கார தத்துவம் மகத் தத்துவம் முதலியனவெல்லாம் என அறியத்தக்கது. ஆகாசாதிகள் நூல்களில் எவ்விடங்களிலும் பொருள்களாகவே கூறப்படுகின்றன. சுருதியில் பல விடங்களிலும் பிரகிருதி இறைவனுக்குச் சக்தி என்றே கூறப்படுகின்றது. ஆகையால் இங்ஙனம் கொள்ளுவதால் பொருட் சுருக்கமும் தத்துவ விளக்கமும் ஏற்படுதல் காண்க.

சூரியன், சந்திரன், மின்னல் முதலியனவெல்லாம் மண், நீர், நெருப்பின் காரியமெனச் சாந்தோக்கிய உபநிடதத்தில் விரித்து விளக்கிக் கூறப்பட்டிருத்தலினால், சந்திரன், சூரியன், மலை, முதற்கொண்ட தூல காரிய தத்துவங்களும், மனம், புத்தி முதற்கொண்ட சூக்கும காரிய தத்துவங்களும் சூக்கும தூலமாயுள்ள ஐம்பெரும் பூத தத்துவங்களேயாகும். ஆதலின் உலக மெங்கணுமுள்ள எல்லாப் பொருள்கட்கும் இவ்வைந்தும் நேராகவுங் கலந்தும் காரணப்பொருள்களாகும். முழுமுதற் பொருளாமிறைவனை நோக்கக் காரியப் பொருளுமாம். மற்றைப் பொருள்களெல்லாம் பொதுநோக்காகக் காரியப் பொருள்களேயாகும். இறைவன் ஒருவனே

இவ்வெல்லாக் காரியப் பொருள்கட்கும் முதல் தனி வித்தான முழுமுதற்காரணப் பொருளாகின்முன்.

"பதியினைப்போல் பசுபாசம் அநாதி"

எனத்திருமூல நாயனுரும்,

'प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।'

'ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யனுதீ உபாவபி'

என பகவத்கீதையிலும் பிருண்டும் 'பசுபாசங்கள் அநாதி நித்தியம்' எனக்கூறியிருப்பினும், "எதையறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகுமோ"

'यस्मिन् भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति ।'

'யஸ்மின் பகவோ விஞ்ஞாதே ஸர்வமிதம் விஞ்ஞாதம் பவதி' என்ற பிரதிஞ்ஞாவாக்கிய பலத்தினுல் இறைவனுக்கு அவைகள் அனன்னியக் காரியம் போன்றே இருக்கின்றன என்பது தெளிவாம்.

'मृदा कुम्भादिकं यथा'

'ம்ருதா கும்பாதிகம் யதா' — மண்ணுல் குடம் முதலானவைகள் நிரம்பி இருத்தல் போல என்றும்,

'ममैवांशः जीवलोके जीवभूतः सनातनः ।'

'மமைவாம்ச: ஜீவலோகே ஜீவபூத: ஸனுதன:'

என்றுமுள்ள எனது ஓரம்சம் உலகத்தில் ஜீவான்மாவானவன் என்றும்.

'ஆயே இவ்வுலகத்து நிற்பனவும், திரிவனவும், நீயே' என்றும்,

"ஒன்ருய் உலகனைத்தும் ஆனுய் நீயே" என்றும், ஸ்மிருதிகளும், புளிம்பொந்துக் குமாரனுரும் புற்செதுக்கும்

கிழவனாரும் கூறிய பிரமாண வாக்குகளும் உலகமாம் பொருள்களும் உயிர்களும் இறைவன் காரியமாயிருத்தலை வலியுறுத்துவன காண்க.

இவ்வாற்றால் இறைவனையன்றிக் காணப்படும் எல்லாப் பொருள்களும் காரியதத்துவம் என ஒன்றேயாகும். இறைவன் ஒருவனே முதல் தனிக்காரணமாவன். இறைவன் அறிவு சொரூபன் ஆனதால் குடத்துக்கு மண்போன்று உபாதான காரணமாவதோடு, குயவனாரைப் போன்று நிமித்தகாரணனுமாவன். இதனால் நூலுக்குச் சிலந்திப்பூச்சி போன்றும், மரம், செடி, கொடிகளுக்கு மண்போன்றும் இருகாரணனுமாவன்.

பறவை தனது கூடு கட்டுவதற்கு தான் நிமித்த காரணமாயினும், உபாதானமான குச்சி கோல்களை வேறிடத்திலிருந்து கொண்டுவருதல்போல, சிலந்திப்பூச்சி வேறிடத்திலிருந்து நூலைக் கொண்டுவந்து கூடு கட்டிக்கொள்வதில்லை. கூட்டுக்காக எந்தச் சேடனார் (சேணியன்) வீட்டிலிருந்தாவது நூலைத் திருடிவிட்டதென பிரஸ்தாபத்தையும் காணோம். தன்னையே முதலாகக் கொண்டு தன்னிடத்திலிருந்து நூல் உற்பத்திசெய்து, தானே நிமித்த காரணமாய் இருந்து தனது கூட்டைக் கட்டிக்கொள்ளுகின்றது. இவ்வாறே மண்ணிலுண்டான பயிர் பச்சை (பைங்கூழ்) களுக்கெல்லாம் மண்ணே உபயகாரணமாகவும் ஆகின்றது. அவ்வாறே உடம்பிலுண்டான கேசரோமங்களுக்கு அந்த உடம்பே முதலாகவும் நிமித்தமாகவும் ஆகின்றது. இவ்வாறே இறைவனையே இருகாரணமாகவும் பெற்று இவ்வெல்லா உலகப் பொருள்களும் உண்டாயின என அறியத்தக்கது. இது முண்டகோபநிஷத்தின் தாத்பரியம் எனச் சூதஸம்ஹிதையிலும்,

'சிலந்தி யுமிழ்து விழுங்குவதெப்படி— தேகத்தே
மலந்தரு கேச உரோமமது எப்படி— மண்ணிற்கே
பலந்தரும் ஓஷதி எப்படி— அப்படி ஈசன்பால்
அலர்ந்தது அடங்கலும்'

என விளக்கமாகவும் விரிவாகவும் கூறப்படுகின்றது. உபாதானகாரணம், முதற்காரணம், பிரகிருதி, சமவாயி காரணம் என்பவை ஒருபொருட் சொற்கள். காரியத்திற்கு இன்றியமையாததாய், ஆதாரமாய், காரியத்தோடு என்றும் உடனிகழ்வது முதற் காரணமாகும். காரிய உற்பத்திக் காலத்தில் இன்றியமையாது உதவியாயிருப்பது நிமித்த காரணமாகும். காரியமானது முதற்காரணத்துக்கு வேற்றுமையாகவும் இராது. ஒற்றுமையாகவும், வேற்றுமையாகவும் இராது. எப்பொழுதும் ஒற்றுமையாகவே இருக்கும். இதுதான் இங்கு மேலான ஒற்றுமை என்று சொல்லப்படும். மேலான ஒற்றுமை எனினும், பரமாத்வைதமெனினும், ஒருபொருள் பெறுவனவாம். இங்ஙனம் உலகத்துக்கும் இறைவனுக்கும் 'காரியம் காரணத்துக்கு அனன்னியம்' என்றும், மேலான ஒற்றுமை நிலை இருப்பதினாற்றான் இலௌகிக வைதிகமாயுள்ள எல்லா விவகாரங்களும் முறைபிறழாது கிரமமாகப் பெறப்படுகின்றன. இங்ஙனமின்றேல் சுருதி விரோதமும் * அநுபவ விரோதமும் வருமென்பது வெளிப்படை.

முதற்காரணமான மண்ணானது பெரிய பானை முதற்கொண்டு குடம், சட்டி, கலசம், கார்த்திகை விளக்கு, முதலியவாக எல்லாமாயுள்ளது என்பது உண்மையே. ஒரே இயல்பாயுள்ள மண் ஒன்றே உருவத்தாலும் தோற்றத்தாலும்

* இவ்விரு விரோதங்களும் 'முதற் குறளும் முதல்வனும்' என்ற நூலில் விளக்கமாய்க் காட்டப்பட்டிருக்கின்றன.

செய்கையாலும், பயனுறுவதாலும், பெயராலும், விவகரிப் பதனுலும் ஒன்றற்கொன்று வேற்றுமையாயுள்ள பல வேறு காரியங்களா யமைந்திருப்பதை யாவரும் யாண்டும் எப்பொழுதும் காண்கின்றோம். சட்டிவாங்கச் சென்றவள் அஃதில்லாமையால் மண்ணுக்கு அநந்ய மென்பதால் குடமோ கலயமோ வாங்கி வருகின்றுளில்லை. ஏனென்றுல் சட்டிதான் சோறு சமைக்க உதவும் மற்றவை இரண்டும் அதற்கு ஆகா. அவ்வாறே குடம் வாங்கச் சென்றவளும் தண்ணீர் கொண்டு வருதல் மற்றவைகளால் நேர்மையாக நடவாதபடியினுல் மற்றவைகளை விட்டு குடத்தையே நாடுகின்றுள். அவ்வாறே விளக்குவாங்கக் குயவனுர்வீட்டுக்குச்சென்றவள் மண்ணுக்கு அது அநந்ய மென்றதால் குடத்தை வாங்கிவந்து அதில் எண்ணையை நிரப்பித் திரியிட்டு விளக்கேற்றுவதையும் காணேம். இவ்வுலக விவகாரத்திலிருந்து ஒரே இயல்பாயுள்ள காரணத்தினின்றும் உண்டான காரியங்கள் பல்வேறு விதங்களாயிருந்து பலவாருக அனுபவிக்கப்படும் என்பது நன்கு பெறப்படுகின்றது. தாழி முதற்கொண்டு சிறுவிளக்கு வரையிலுமுள்ள வெவ்வேருன ஒவ்வொரு பொருள்களுக்கும் மண்ணென்றே உபய காரணமாமன்றிக் காரிய வேற்றுமைக்காக வேறென்றையும் தன்னோடு காரணமாகச் சேர்த்துக்கொள்வதில்லை என்பது கண்கண்ட விஷயமாகும். சட்டியானது குடத்துக்கு வேருக எல்லாவிதத்தாலும் விவகரிக்கப்படினும் திரிகை மேலேற்றி வைக்கப்பட்டதும் எல்லாப்பக்கத்தும் ஒரே தன்மையாயுள்ளதுமான அந்த மண்ணில் முதலில் சட்டியை செய்துவிட்டு மீண்டும் குடம் செய்வதற்காக அந்த மீதி மண்ணில் குடத்துக்கு என ஒரு சிறு அணுவுங்கூடச் சேர்ப்பதைக் காணேம். ஆயினும் குடம் உண்டாகின்றது. அவ்வாறே மீண்டும் அம்மண்ணில் கலசத்துக்கென ஒன்றையும் சேர்ப்பதைக்

காணோம். சேர்க்காவிடினும் கலசம் உண்டாகிவிடுகின்றது. இதிலிருந்து நமக்கு ஒன்று வெளியாகின்றது. உபாதானகாரணமான மண்ணிருந்தபின்னர் அதில் வெவ்வேறான காரியங்களுண்டாவதற்கு என்ன சேர்க்க வேண்டுமென்றால் குயவனுரது திருவுள்ளந்தான் சேரவேண்டும். அம்மண்ணோடு 'சட்டியாகச் செய்யலாம்' என்னும், அவரது திருவுள்ளம் சேர்ந்தாற் போதுமானது. அது வேறொன்றுகாமல் சட்டியாகவே ஆகிவிடும். மீண்டு அதில் சட்டியைக்காட்டிலும் வேறு உண்டாவதற்காக வேறொன்றும் சேர்க்கவேண்டுவதில்லை. குடம் ஆகட்டும் என்னும் அவர் திருவுள்ளம்பற்றினுல் போதுமானது. குடமாக ஆகிவிடும். அப்படியே விளக்கு ஆகட்டுமென்றாலும் அதற்கும் அது சம்மதமே. இதனுல் "உபாதானமான நான் என்னுலமையத்தகுந்த வெவ்வேறானவற்றுள் எதுவாக வேண்டுமானுலும் ஆகின்றேன். அதற்காக நான் வேறொன்றையும் கூட்டுக்கொள்ளவேண்டுமென்பதில்லை. ஆனுல் நிமித்த காரணனுரது 'நீ இதுவாக ஆவாயாக' என்று எண்ணும் திருவுள்ளத்தை மாத்திரம் எதிர்பார்க்கின்றேன்" என்று உபாதானகாரணமான மண் சொல்லுவது போன்றிருக்கின்றது. உபாதான காரணமும், நிமித்த காரணமும், வேறாயிருக்கும் இடங்களில்கூட இவ்வாறு ஒன்றையொன்று தழுவி நிற்கும் காரியானுகூலமான ஒற்றுமை காணப்படுமாயின் இனி உபாதானமும் நிமித்தமும் ஒருபொருளாய் இருந்து அப்பொருளும் ஞான ஒளியான முழுமுதற்கடவுளாக இருந்து, அவரும் தனது காரியமாகிய உலகத்தை எண்ணி இயற்றி அதுவதுவாக ஆகின்றாரென்றால்—இவைகளின் ஒற்றுமையைப்பற்றிப்பேச நாவெழவில்லை, நினைக்க மனமெழவில்லை. மற்றதும் உணரவற்றதாகின்றது.

ஜடமாயுள்ள மண்ணே வெவ்வேறான எதுவாக வேண்டுமாயினும் ஆகும் என்றால் சேதன சொரூபமான இறைவன், வேறு வேறாயுள்ள இவ்வெல்லாமாக ஆகின்றான் என்று சொன்னால் அதுவும் அடிமைநாக்குகள் சொல்வதுபோக, அரசுநாக்கு இங்ஙனம் சொல்லுகின்றது என்றால், மீண்டும் இதில் ஐயங்களும் சமாதானங்களும் இருத்தல் அவசியந்தானா என்பது தெரியவில்லை.

ஒரு காரணமான மண்ணிற்கே ஒன்றாக ஆனபின்னர் பிறிதொன்றாக ஆவதற்கு வேறொன்றான எதையும் சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் நேராதபொழுது உபய காரணனான இறைவன் வான் ஆனபின்னர் வளியாக ஆவதற்கும், மீண்டு தீயாக ஆவதற்கும், பின் நீர் மண் ஆவதற்கும், அவற்றால் பின்னர் எல்லாம் ஆவதற்கும் அவர்தனது ஞானானந்த மேனியோடு எதைச் சேர்த்துக் கொள்ளவேண்டி நேரிடும் என்பதை இங்ஙனம் யூகித்து உணர்ந்துகொள்ளத்தக்கதாம். சுருதியிலும் "சின்மாத்திரமாயுள்ள வெறும் இறையே திகழ்வான் யாதுக்குமுன்" என அவரது இயல்பான, தனித்த திருமேனியைக் கண்டிருக்கின்றது. மீண்டும் அச்சுருதியில் 'மாத்திரமும் வேறில்லை முற்றும் அவனே' என அவனைக்காட்டிலும் சிறிதும் அணுமாத்திரமும் வேறானது அவனிடத்து இல்லை எனவும், காணக் கேட்கப்படுகின்ற இவ்வெல்லாப் பொருள்களும் உற்பத்திக்கு முன் அவனது சின்மாத்திர சொரூபமாகவே இருந்தன என்றும் கூறியிருக்கின்றது.

உள்ளும் புறம்பும் ஒத்து, சித்து மாத்திர சொரூபமாயுள்ள ஒரு பொருளில், பல்வேறுவிதமாயும் ஜடமாயும் சித்தாயும் வேறு வேறுவிதமாய் அனுபவிக்கப்படுவதாயும் உள்ள இவ்வுலகப் பொருள்களெல்லாம் எவ்வாறு ஒற்றுமை

டாவதற்குமுன் அவைகள் சூக்குமமாய்க் காரணத்திலிருக்கின்றன என்றால், சூக்குமமென்பது இரண்டுவிதமாய் இருக்கும். அவை வருமாறு — காரியம் உற்பத்தியாகியும் யாதானுமொரு பொருளால் தடையுற்று வெளிப்படாதிருக்கும் நிலை ஒன்றாகும். காரியம் உற்பத்தியாகாமல் காரண சொரூபமாகவே இருத்தலினால் வெளிப்படாதிருக்கும் நிலை ஒன்றாகும். முன்னையது பிரசவத்திற்கு முன்னர் ஒன்பது பத்து மாதங்களில் குழந்தையாகிய காரியம் உற்பத்தியாகியும், கருப்பைத் தோலால் மறைக்கப்பட்டு தோன்றாதிருப்பது ஒரு சூக்கும நிலையாகும். மண்ணை தோண்டியபின் கிணற்றில் நீர் உண்டாயிற்று என்னும் உலகவழக்கில் அங்கு நீருக்கு யாதானுமொரு முதற் காரணத்தினின்றும் உற்பத்தி இல்லை. முன்னர் மறைவுபட்டிருந்தது. அம்மறைப்பு நீங்கி கட்புலனாவதையே அவ்வாறு உண்டாயிற்றென்று பகர்வது முன்னர்க் காணப்படாதது பின்னர்க்காணப்படுகின்றது, என்னும் இந்த அளவுதன்மைதான், காரியத்திற்கும் மறைவு நீங்கியபின்னர் தோன்றுவதற்கும், 'உண்டாயிற்று' என்னும் விவகாரத்திற்கு சமான தர்மமாகும். இங்ஙனமன்றி நீருக்கு அங்கு உபாதானத்தினின்றும் தோற்றுதலாகிய உண்டாகுந்தன்மை இல்லை.

பின்னையது— காரியம் உற்பத்திக்குமுன் காரணமாயிருத்தலையே சூக்கும மென்பதாகும். அது குடாதிகள் உண்டாவதற்குமுன் மண்ணாகவே இருக்கும் நிலையதாம். இங்கு குடம் உற்பத்திக்கு முன்னர் கருப்பையில் குழந்தை இருப்பது போன்று மண்ணுக்குள் குடமிருக்கின்றது. குழந்தை வெளிப்படுமாறு பிரசூத வாயு, தாய் முயற்சி முதலியவைகள் போலக் கருத்தா கரணம் முதலிய காரக முயற்சிகளால் இனி

யாய் அதுவாகவே இருக்கும்? பின்பு எவ்வாறு உண்டாகும் என்று கேட்டால் நல்லது. சொல்லுவாம்.

---

## அனன்ய சத்காரிய வாதம்

எள்ளைப்போன்று கருநிறமுடையதாயினும் செக்கிலிட்டு ஆட்டினாலும் கருமணலில் எண்ணெய் உண்டாகின்றதில்லை. இல்லாதது பிறவாதாகலானும் உள்ளதற்கே தோற்றமுண்டாகலானும், தோற்றமுடைய உள் பொருள்களாகிய இவ்வனைத்தும் உள்பொருளாகிய இறைவனுக்கு அனன்யமாகவே உண்டாயிருக்கின்றன. உபாதான காரணத்திற்கும் காரியத்திற்கும் அவஸ்தாவேற்றுமையே ஒழிய பொருள் வேற்றுமை இல்லை, ஒரேமண் காரணாவஸ்தையில் பிண்டவடிவமாயிருக்கின்றது, காரியாவஸ்தையில் வாய்குவிந்து வயிறு பெருத்து குடவடிவமாயிருக்கின்றது. குடத்தை உண்டாக்கியவர் உடனே அதை அழித்து அதேமண்ணை நாலு கலசமாகவும் செய்யலாம். மீண்டும் அவைகளை அழித்து அதே மண்ணைக் கொண்டு இருபது விளக்குகளாகவும் செய்யலாம். இதனால் அந்த ஒரு குட அளவு மண்ணே எவ்வளவு காரியங்களுக்கு அனன்ய ஒற்றுமையாயிருக்கின்றதென்பது தெளிவாகின்றது.

இந்தக் காரியங்களெல்லாம் உற்பத்திக்குமுன்னர் உபாதானகாரண சொரூபமாகவே இருந்து உண்டாகின்றன. இருக்கின்ற பதார்த்தங்களுக்கு உற்பத்தி கூறவேண்டியதின்மையாலும், இல்லாத பதார்த்தங்கள் உளவாகா ஆகலினாலும் காரண ரூபமாக இருந்தவைகளே காரிய ரூபமாகி உண்டாகின்றனவென்பதே சரிப்பொருந்தும். காரியங்களுண்

அது ஒன்ருகவே வெளிப்படும் என்பது அல்ல — கடகாரிய முதலியவற்றிலும் அங்ஙனம் கொள்வோமாயின் சூக்குமாவத்தையில் பெண் குழந்தையான சத் காரியம் தூலாவத்தையில் ஆண்குழந்தையாக வெளிவராது. ஆண்குழந்தையாகச் சூக்குமத்துள்ளது பெண்குழந்தையாகவும் வெளிப்படாது. 'ஒன்று மற்றென்ருக ஆவது யாண்டுமின்மையின்'' என்பதை காரிய காரணங்களுக்கும் கொள்ளுவது சரியன்று. அஃதெங்ஙனமென்னில்-ஒரு குடமாத்திரம் ஆவதற்குண்டான மண்ணைமாத்திரம் எடுத்துக்கொள்ளுவோம். குடமாக ஆகுமது சட்டியாக ஆவதையும் காண்கின்ருேம். சட்டியாக ஆகுமது கலசங்களாக ஆவதையும் காண்கின்ருேம். இதனுல் ஒன்ருக ஆகும் அது பிறிதொன்ருக ஆவதையும் மீண்டும் வேறு பலவாக அமைவதையும் காண்கின்ருேம். இது மான்கன்ருக வருவது பசுங்கன்ருக வருவது போன்று இல்லையா? பெண் குழந்தையாக வருவது ஆண்குழந்தையாக ஆவதுபோன்றும் இல்லையா? மேலும் அந்த மண்ணில் சட்டி இருக்கிறதா குடமிருக்கிறதா என்று கேட்டால் பின்ன சத்காரிய வாதத்தில் உடனே இதுதான் இருக்கிறது என்று சொல்லத்தடைபடும். எங்ஙனமெனில்— சட்டி இருக்கிறது என்ருல், குடத்தை உண்டாக்கிவிடலாம். குடம் இருக்கிறது என்ருல், சட்டியை உண்டாக்கி விடலாம். மேலும் இங்குச் சொல்லப்படாத கலசாதிகளையும் அம்மண்ணிலேயே உற்பத்தி செய்து காட்டிவிடலாம். அங்ஙனமாயின் கருவிற் சிசுப்போன்று இவையெல்லாமுமே சூக்குமமாயிருக்கின்றன என்ருல் படும் இழுக்கு என்னையோ எனின்? ஈண்டுச் சூக்குமத்தைக் காரணவஸ்தையென்று அங்கீகரிக்காது கருவிற் சிசுப்போல பின்ன சத்காரியவாதமங்கீகரிக்கின் ஒரு கருப்பத்தில் ஆண்குழந்தை, பெண் குழந்தை, மான்கன்று, பசுங்கன்று, ஆகிய இவ்வளவும் சூக்கு

மமாயிருக்குமாயின் அவசியம் அவ்வளவும் பிரசவமாய்விடும். அல்லது ஒன்றுதான் வெளிப்படும், மற்றவை வெளிப்படா என்பதற்குத் தகுதியான யாதோரேதுவையும் காணோம். அது ஒரு குடமாகுமளவு மண்ணில் அவையெல்லாம் இருக்கின்றன என்றால் அவ்வளவு காரியங்களுக்கும் ஒரே சமயத்தில் வெளிப்படுதல் வேண்டும். அங்ஙனமின்றி யாதானுமொன்றே வெளிப்படுதலினால் அதுதான் அங்குக் காரணத்தில் இருந்தது என்று சொல்லவேண்டிநேரும். அப்பொழுது ஒருகாரியத்திற்கு அளவாய் நியதியாயுள்ள காரணத்தில் எல்லாக் காரியங்களும் (அதாவது அதில் அப்போது உண்டாகும் காரியமொழிந்த மற்றக்காரியங்களும்) சூக்குமமாயிருக்கின்றன என்று சொன்னது பொருளில்லாத வெறுஞ்சொல்லாய் முடிந்தமை காண்க. அனன்ய சத்காரிய வாதத்திலோ காரண காரியங்களுக்கு ஒருபொருளாந் தன்மையிருத்தலின் காரியங்கள் உற்பத்திக்கு முன் காரணமாகவே இருத்தலினால் அந்தக் காரணம் நிமித்தத்தை அனுசரித்து எந்தக் காரியமாகவேண்டுமானாலும் ஆகின்றது. இதனாற்றான் ஒரு குடத்திற்காகும் மண்ணாகிய உபாதானத்தில் மற்ற சட்டி, கலசம், விளக்கு, முதலிய எல்லாக் காரியங்கட்கும் காரணமாகுந் தன்மை இருத்தலினால் நிமித்த காரணத்தின் எண்ணத்தை அனுசரித்து எது வேண்டுமாயினும் ஆகின்றது. அத்தனைக்கும், தான் அனன்ய காரணமாயிருத்தலினால் அவ்வளவு பாண்டங்களும் அனன்ய சத்காரியமாகவே இருந்து உண்டாகின்றன. இப்பொருளே—

सदेव सोम्य इदमग्र आसीत् । एकमेवाद्वयः सदा ।

(ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத். ஏகமேவாத்வய: ஸதா) என்று தலைநின்ற சுருதியிலும்,

'சின்மாத்திரமாயுள்ள வெறும் இறைபே திகழ்வான் யாதக்கும்
முன் மாத்திரமும் வேறில்லை முன்னும் அவனே'

என்று ஸ்மிருதியிலும் கூறப்படுகின்றது.

சுருதி, ஸ்மிருதி இவைகளில் கூறப்படுவது ஒருவாறு இருக்கட்டும். இதற்கு உலகானுபவமான நியாயமுண்டா? வழக்குண்டா என்றால் நல்லது, சொல்லுவாம்:- ஊருக்குச்செல்லுமிருவர் காலையில் குயவனார் வீட்டு வழியாகச் சென்றார்கள். அப்பொழுது அவ்வீட்டு முற்றத்தில் ஒரே பிண்டாகாரமாய் மண் குவித்து இருந்ததைக் கண்டு சென்றார்கள். மீண்டும் சாயங்காலம் திரும்பி அவ்வழியே வரும்போது அவ்வாயிலில் நிறைய குடம், சட்டி, கலசம், முதலியவைகள் வரிசையாய்ப் பரப்பி வைத்திருப்பதைக் கண்டு, ஒருவர் மற்றவரைப் பார்த்து, இவ்வெல்லாப் பாண்டங்களும் காலையில் மண்ணாகவிருந்தன என்று சொல்லுகின்றார். மற்றவரும் அதை 'ஆமாம்' என்று ஒத்துக்கொள்ளுகின்றாரேயன்றி 'மண்ணாக இருந்தன வென்று சொல்லவேண்டாம். இவையெல்லாம் மண்ணுக்குள் இருந்தன' வெனச் சொல்லும்'' என்று அனன்ய சத்காரியத்தை மறுத்துப் பின்ன சத்காரியத்தை சொல்லிக்கொடுக்கின்றார் இல்லை? ஏனென்றால், அனன்ய சத்காரியமாகப் பொருள் அமைந்திருப்பதினாற்றான் அவர் அதை மறுக்காது விடுத்து உண்மையை அங்கீகரித்துக்கொண்டார். இவ்வாறாக உலகப் பொதுமக்கள் அனுபவ வழக்காக நிகழும் விவகாரங்களுங்கூட சுருதி, ஸ்மிருதி, தேவாரம், திருவாய்மொழிகளோடொத்து அனன்ய சத்காரிய வாதமான பரமாத்துவிதத்துக்குச் சாக்ஷி கூற வருகின்றது என்றால் இதை அறிந்த மக்கள் யார்தான் இதைத் தலைமேற் கொள்ளாது விடுவர்? இவ்வாற்றால் இத்தகைய இடங்களிலெல்லாம் உற்பத்திக்குமுன் சூக்குமமாயிருந்தது என்பதை காரணமாயிருந்ததெனக் கொள்வதே சாலப்பொருந்தும். இக் கொள்கையையே சுருதி, யுக்தி, அனுபவங்களும் வற்புறுத்துகின்றது.

இப் பொருள்களெல்லாம் உற்பத்திக்கு முன் முதற் காரணமான இறைவனுயிருந்த படியினுற்ருன் உற்பத்திக்குப் பின்னுமவைகள் காரண சொரூபமாகவே நிகழ்கின்றன. ஆதலினுற்ருன் தத்துவ ஞானிகள் அவ்வாறு காண்பதாகச் சொல்லப்படுகிறது. அஃது யாண்டெனில்:—

"தத்துவஞானி காணினும் ஜகத்தைக் கண்டிலன் தத்துவமே கண்டான். வத்துவேயாக அல்லவேயாக மற்ருெரு பொருளில்லை ஆனல் இதில் வேருென்றை எங்ஙனம் காண்பான்" என சூத ஸம்கிதையிலும்,

"நல்லறிவுளோர் உலகை ஞானவடிவென்றே சொல்லுவார்கள்" எனக் கூர்மபுராணத்து ஈச்வர கீதையிலும்

**सर्वं खल्विदं ब्रह्म ।** (ஸர்வம் கல்விதம் ப்ரம்ம)
எனச் சுருதியிலும்,

"ஆயே இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும்
நீயே மற்ருெரு பொருளும் இன்றி நீ நின்றமையால்"

என, வாழ்பவர்க்கெல்லாம் வழிகாட்டிய நம்மாழ்வாரும், மற்றப் பெரியோர்களும் நிரம்ப இவ்வுண்மை கண்டு கூறியிருப்பது காணத்தக்கது.

ஆனல் 'மண் குடமாயிற்று' என்னும் வழக்குப்போல் உபாதான காரணமாய் இருந்தும், சிலந்திப் பூச்சி 'நூலை யுண்டாக்குகின்றது' என்னும் விவகாரம் காணப்படுகிறதே யொழிய 'சிலந்தி நூலாயிற்று' என்னும் வழக்கு ஏன் காணப்படவில்லை என்று கேட்டால்:— கார்யபாகமான வாய்ப்பிரதேசம் வயிற்றுப்பாகம், அடிப்பாகம் முதலிய எல்லாப்பாகங்களிலும் அணுமாத்திரங்கூட காரியபாகத்தை ஒழியாது, காரணமானது அவற்றில் ஊடுருவி அவைகளை

நிறைத்து அதுவதுவாக விளங்குகின்றமையின் 'மண் குடமாயிற்று' 'நூல் ஆடை ஆயிற்று' என்னும் வழக்குக் கூடுகின்றதேயொழிய சிலந்தி நூல் முதலிய இடங்களில் நூலுக்குப்பூச்சி முதற் காரணமாயினும் காரியமான நூல் இருக்குமிடத்தில் அதாவது உண்டாக்கிய பின்னர் நூல் முழுவதுக்கும் ஆதாரமாய் ஊடுருவி நிறைந்து அதுவாக நிகழ்கின்றதில்லை. காரிய முழுதினும் ஸம்பந்தம் வைத்துக் கொள்ளவும் அதனால் முடியவில்லை. அதனால் அங்கு அது அதுவாக ஆயிற்றென்ற விவகாரம் கூடுவதில்லை.

ஈண்டெடுத்துக் கொண்ட பொருளிலோ, காரியப்படினும் சிறிதும் மாற்றுக் குறையாததும், அதற்காகச் சிறிதும் செம்பைத் தன்னோடு கூட்டிக்கொள்ளாததுமான தங்கமானது கடக மோதிர மகுட முதலிய அணிகளுக்குப் போன்று, இறைவன் தனது காரியத்திற்கு முதல்வனாய் இவ்வெல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாய், அவற்றுள் மணிகளுள் நூல் போன்று பலவற்றுள் ஒன்றாய் ஊடுருவி குடத்தில், ஆடையில் மண்ணும் நூலும் போல நிறைந்து நீக்கமின்றி அதுவதுவாக விளங்குகின்றான். இதனாற்றான் இயல்பாயுள்ள இந்த இறை நிலையாம் மேலாம் ஒற்றுமையை மயக்க நீங்கி அங்ஙனமிருந்து அங்ஙனம் கண்டு அங்ஙனம் நம் முன்னோர்கள் கூறிய பல நூல்களில், 'முதல்வன் முழுதுமானான்' என்பது பெருவழக்காகப் பலபெருமுரசறைந்த சப்தம்போலும் பெருங் கடலொலி போலும் கேட்கப்படுகின்றது. அது எங்ஙனே யெனில்,

நம் அப்பரும்,

'ஒன்றாய் உலகனைத்தும் ஆனாய் நீயே' எனவும் 'எல்லா வுலகமும் ஆனாய் நீயே' எனவும் 'மாமறைகளாயவன்

காண் மண்ணும் விண்ணும் கூரார் வெந்தழலவனும்,
காற்றும் நீரும் குலவரையும் ஆயவன் காண்' எனவும்

*மாணிக்கவாசகப் பெருமானும்,*

'வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி யுயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென்றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை' எனவும்

'நிலநீர் நெருப்புயிர்............................மைந்தனோடு
எண்வகையாய்ப்புணர்ந்து நின்றான்' எனவும்

*தம்பிரான் தோழனாரும்,*

'ஊனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்
வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்' எனவும்

*காரைக்கால் அம்மையாரும்,*

'விரிபொழில்பார் ஆகாயம் அப்பொருளும் தானேயவன்' எனவும்

*நம்மாழ்வாரும்,*

'நாமவன் இவனுவன் அவளிவளுவளேவள்
தாமவரிவருவர் அது இது உதுவேது
வீமவை யிவையுவை அவைநலம் தீங்கவை
ஆமவையா யவையாய் நின்ற அவரே' எனவும்

'தானேயாகி நிறைந்து எல்லாவுலகும் உயிரும் தானேயாய்
தானேயானென்பானாகித் தன்னைத்தானே துதித்து எனக்குத்
தேனே பாலே கன்னலே அமுதே திருமாலிருஞ்சோலை
கோனேயாகி நின்றொழிந்தான் என்னைமுற்றுமுயிருண்டே'

எனவும்

செஞ்சொற் கவிகாள் உயிர்காத்தாட்செய்மின் திருமாலிருஞ்சோலை
வஞ்சக்கள்வன் மாமாயன் மாயக் கவியாய்வந்து—என்
நெஞ்சும் உயிரும் உள்கலந்து நின்றார் அறியாவண்ணம்—என்
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகி நிறைந்தானே எனவும்

முரசறைந்த பேரொலிகள் ஒன்றுபோலக் கேட்கப்படுகின்றன.

இங்குக் காட்டப்பட்ட ஆழ்வாரது கவிகளில் ஒரு திருட்டு வெளியாகின்றது. அது எம்பெருமானாகிய நாராயணனது திருட்டு. அதாவது—சூழ்ந்திருக்கும் எல்லோரும் அறியாவண்ணம் இறைவன் ஆழ்வாருள் புகுந்து நெஞ்சுமுயிருங்கலந்து அவைகளை விழுங்கி உண்டு தானேயாகின்றான் என்பது.

இஃதன்றியும் உலகும் உயிரும் தானேயாகி நின்ற அவன் நம்மாழ்வாரையும் தானேயாக்கிக்கொண்டு தன்னைத் தானே துதித்துக்கொள்கின்றான். சூழ்ந்து நின்றவரெல்லாம் இங்ஙனம் கள்ளம் நடந்த விதம் தெரியாது 'நம்மாழ்வார் நாரணனைப் பாடுகின்றார்' என்கின்றார்கள். இங்ஙனம் பரிகொடுத்துக் கள்ளங்கண்ட அவரோ 'தானேயானென்பானாகி தன்னைத்தானே துதித்து' என்று நடந்த கள்ளம் இதுவெனவாகியே உண்மை கூறுகின்றார். எவ்விடத்தும் திருடின பொருளைத் தனதாகக்கொள்வாருண்டு. தானாகக் கொள்வாரைக் காணோம். இந்தக் கள்வனோ ஆழ்வாரைக் களவாண்டு தானாகவே கொண்டான். ஆதலால் இவனை மாமாயன் வஞ்சக் கள்வன் என்றார். இங்கு இன்னமோர் கள்ளமும் நடந்திருக்கின்றது. அதுதான் எவ்வாறென்று ஆயத்தக்கது. எம்பெருமான் உலகு உயிர் எல்லாம் ஆனதோடன்றி ஆழ்வாராகவும் ஆகி தன்னைத்தான் துதித்துக் கொண்டதை நம்மாழ்வார் எவ்விடத்தில் எவ்வாறு ஒளிந்திருந்து அக்கள்ளத்தை

கண்டுகொண்டார் என்பதுதான் அங்கு நிகழ்ந்த ஆழ்வாரது மற்ருெரு கள்ளமாகும். திருட்டைக் கண்டுபிடித்தவர் தாஞெரு முதலாய் இருக்கவேண்டும். 'அப்பொழுது நான் துதித்தேன்' என்பதே பொருந்தும். அவன் அவனைத் துதித்தான் என்பதொவ்வாது. இதை உறுதிபடுத்தவேதான் 'தானே யானென்பாஞகி' என்பதோடொழியாது 'தன்னைத்தானே துதித்து' என்றுங் கூறிஞர். இங்ஙனமே பிறிதோரிடத்தும் 'பண்ணுர் மொழிகள் இன்கவிகள் யாஞய்த் தன்னை தான் பாடி' என்றும் வற்புறுத்திஞர். எவர் பாடுகின்ருரோ அவருக்கங்கு இருப்பு இல்லை. பாடுகின்றவரது இருப்பு முழுவதையும் இன்ஞெருவனே வந்து உள்புகுந்து கலந்து நிறைந்து திருடிக்கொண்டு தாஞய்த் தன்னைத்தான் பாடுகின்ருன். அங்ஙனமிருக்க இவரெங்கு ஒளிந்திருந்தார் என்பதே இவ்வாழ்வாரின் கள்ளத்தை வெளிப்படுத்தும் கேள்வியாகும்.

இங்ஙனமாயின் தனக்குள்புகுந்து தன்னைத்திருடியுண்டு தாஞய்ப் பாடுமவனுக்குள் ஒளிந்திருந்து இவ்வஞ்சக் கள்ளத்தைக் கண்டார் எனலாமே எனின், அப்பொழுது ஆண்டவன் ஆழ்வாராகிப் பாடுகின்ருர் என்னும் தனது வாக்குப் பொருளின்றி நிற்க, ஆழ்வாருக்குள் ஆண்டவன் இருந்து ஆழ்வாரைப் போலப்பாட, ஆழ்வார் அவருக்குள் இருந்து இந்நிகழ்ச்சியைக் கண்டார் என்று அங்கு சொல்லப்படாததும் அதஞலேயே நிகழப்படாததுமான ஒன்று, பொருள்படுவதாகும். அப்பொழுது நாராயணன் நம்மாழ்வாராய் இருந்து பாடிஞர் என்னும் சொல்லும் பொருளும் பொருந்தாது போகும். மேலும் ஆசிரியர் 'தானே யானென்பாஞகி' என்றும் 'யாஞய்த் தன்னைத் தான் பாடி' என்றும் வாய்மொழியாகச் (கண்டோக்தியாக) சொல்லுமிதை விடுத்து 'எனக்குள்ளாயிருந்து பாடுகிருன்' என்று சொல்லாததைக் கொண்டதாகவுமாகும்.

ஆனால் ஆழ்வாருக்குள் இறைவன் இல்லையா என்றால் — உண்டு. அது வேறு விஷயம். அதுவாயிருக்கின்றதை அதற்குள் இருப்பதாகவும் சொல்லலாம். அது அதுவாக இருக்கின்றது என்பதே அதன் பூரணநிலையாகும். அது அதற்குள் இருக்கின்றது என்பதெல்லாம அதன் ஏகதேச நிலையைச் சொல்வதாகும். மண், கட கலசமாக இருக்கின்றது. அதே மண்ணை அந்தக் காரியங்களுக்குள் இருக்கின்றதாகவும் கூறலாம். மண் குடமாயிற்று என்பதற்குப் பொருத்தமாக குடம் மண்சொரூபமாகவே இருக்கின்றது. இதில் யாதானும் ஓர் ஐயத்தையும் காணோம். இதுபோல நம்மாழ்வாராக நாராயணனே இருந்து தன்னைத்தான் பாடிக்கொள்ளுகின்றான் என்பதுவே நேரான நிறைந்த அர்த்தமாகும. மண் குடமாகி மீண்டுமந்த மண்ணைக் குளிரவைக்க அந்தக் குடமே ஜலம் கொண்டுவந்து ஊற்றுவதையும காண்கிறோமல்லவா? அதுவாக இருக்குமொன்றை அதற்குள் இருக்கின்றது என்று சொல்லுவதும் விரோதமுடையதன்று. ஆதலால் அவனே அவருக்குள் புகுந்து ஆட்டுகின்றான்......என்பது விரோதமில்லை ஆயினும் ஈண்டது விடயமன்று. இங்கு அவராகவே இருந்து பாடுகின்றார் என்றும், அதற்கு மேற்பட்டதும் இயல்பாய் உண்மையானதுமான விஷயம் பேசப்படுகின்றது. காரியப்பார்வையே முக்கியமாயுள்ள நம்போன்றவர்களுக்குக் காரியத்தில் காரணமிருக்கின்றதென்று சொல்லிக்காட்டி அந்த அளவில் காரண அறிவை காரியத்தில் உண்டு பண்ணிய பின்னர் காரியம் காரணமாகவே இருக்கின்றது என்று விளக்கிக் காட்டவேண்டும்.

---

## கடவுளைக் காண்பிக்கும் முறை.

கடவுளென்று ஒன்று உண்டெனத் தெரியாத மக்களுக்கு முதலில் சொல்லளவில் நம்பப்பட்டு வரும் பொருள்களைப்

போல ஆண்டவன் என்பதும் இப்படி ஒருபொருள் உண்டென உத்தேசமாக முதலில் அறிவித்து, பின்னர் அவன் எவ்வடிவினனென்ருல் — காற்றுப் போலும், ஆகாயம் போலும், கண்ணுக்குத் தெரியாது சூக்குமமாய், வியாபகமாய், அருவமாய் எங்கும் இருப்பானென்றும் சொல்லியபின் இங்ஙனம் ஒரு பொருளை ஏன் ஒத்துக்கொள்ளவேண்டும் என்ருல்:- ஒவ்வொருவனும் விரும்பி, நிறைந்த சாதனங்களோடு முயற்சித்தும் ஒன்றைப் பெருதொழிவதனுலும், ஒன்று, அதற்குத் தகுந்த சாதன முயற்சிகளில்லாதிருந்தும் அவனுக்கு அடையப்படுவதனுலும், விரும்பாத ஒன்று வலியவந்து அவன் தலைமேலேற்றப்படுவதனுலும், இங்ஙனமே சந்திர சூரியன் முதற்கொண்ட உலகப்பொருள்களின் எல்லா நிகழ்ச்சிகளும் ஒரு பெரும் பரம்பொருளின் ஒருகாலில் கட்டப்பட்ட வைக்கோல் புரியின் நிகழ்ச்சிபோலக் காணப்படுகின்றமையினுலும், இங்ஙனம் ஆட்டுவிக்கும் இச்செயலுக்கு இருப்பிடமானபொருள் இவ்விறைவனே எனச் சொல்லித் தேற்றியும் மீண்டும் அத்தகைய இறைவன் மணிக்குள் நூல் போலும் பாலுக்குள் நெய்போலும், உடலுக்குள் உயிர்போலும், ஆடையில் நூல் போலும் இச்சராசரமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் அந்தர்யாமியாய் வியாபித்திருக்கின்ருன் என்றும், மீண்டது இருக்கின்ருன், இவ்வனைத்திற்கும் ஆதாரமாய் கின்ருன் என நிமித்த காரணனென்னும் அளவுக்குக் கேட் பவனுடைய புத்திக்குத் தக்கவாறு வேண்டியது போதித்து இறுதியாகக் கடவுளுக்கும உலகத்துக்கும் பூரணமாய் முடிவாய் என்றும் (எப்பொழுதும்) ஒரே இயல்பாய் நிலைத்துள்ள 'எல்லாமாக ஆனுன் ஆகின்ருன்' என்னும் மேலான ஒற்றுமை போதிக்கப்படுகின்றது.

---

நூல் பிரமாணம்

இப்படிச் சொல்லிவந்த கடவுள் நிலைகளில் உண்மை நூல்களெல்லாம் ஒன்றற்கொன்று படித்தரங்களில் கேட்போர் பக்குவத்திற் கேற்ப தாரதம்மியமாகச் சொல்லுகின்றன. இவைகளில் எந்த உண்மை நூலும், முடிவான விடயங்களில் ஒன்றற்கொன்று வேருகவும், மாருகவும் கூருது. இக்கருத்தேபற்றியன்ரே நம் தமிழ்த் தனித்தேவதையாரான ஔவையாரும்,

'தேவர் குறளும் திருநான்மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்,—கோவை
திருவா சகமும் திருமூவர் சொல்லும்
ஒருவா சகமேன்றுணர்'.

என இருமொழியிலும் பிரமாண நூல்கள் இவை என்பதும், அவை பலவாயினும் ஒரு முடிபுடையனவாம் என்பதும் தெளிய ஓதியிருக்கின்ருர்கள். இக்கவியில் முனிமொழி என்பது இரட்டுற மொழிதலால் நம்மாழ்வாரது நூலுக்கும் வியாஸ மஹர்ஷியினது நூலுக்கும் கொள்க. இரண்டும் பிரமாணமாய்த் தலைசிறந்ததனுலும், இருவரும் முனிவரான தனுலும் என்க. கோதை திருவாசகம் எனப் பாடபேதங் கொண்டு ஆண்டாள் பாசுரம், பேயம்மையார் திருவாக்கு முதலியனவும் கொள்ளவேண்டும். அவைகள் இன்றியமையாதவைகளாயும், முக்கிய பிரமாணங்களாயும் இருத்தலினுலும், கண்கெட்ட நமக்கு இங்ஙனம் பிரமாண நூற்களைப் பொறுக்கி யெடுத்தும் வழிகாட்டிய அம்மையாரின் இனம் விலக்கப்படாமையினுனும்—என்க.

இறைநூலும் அவனடிகளார் நூற்களும் பிரமாணமாவதற்கு ஏது வென்னை எனின்:—

'எல்லாமறிவானாய் இல்லாதில்லானாகி யெல்லார்தான்
வல்லானாகித் தீங்கோன்றும் மறுவானாகி வடிவு அருள
இல்லாதிலனும் இறை உண்மையன்றிச் சொல்லான்'

எனவும்,

'போதவடிவாய் அகண்டபூரணனும் சிவனுக்கு
யாதும் உள்ளங்கைக் கனியாம் இவனருளின்படியொழிய
வேதமுடிவில் பொருள்தாம் வேண்டியவா விளம்பியிடும்
பாதகர் போய் ஏறவொண்ணாப் பாழ்கிணற்றில் வீழ்வர்களால்'

எனவும் விளக்கமாகக் கூறினர்.

இதில்—ஒன்றறியாதவன் அவ்விடயத்தில் உண்மைக்கு மாறுங் கூறுவானாதலால் எல்லாமறிவானாய் என்றும், எல்லாமறிந்திருந்தும் ஒன்றில்லாக்குறையினாலும் பொய் கூறுவானாதலால் இல்லாது இவனாகி என்றும், எல்லாமறிந்திருந்தும் எல்லாம பெற்றிருந்தும் சக்தியில்லாக் (வல்லமையில்லா) குறைவினாலும் பொய் கூறுவானாதலால் எல்லாந்தான் வல்லானாகி என்றும், எல்லாம் அறிந்திருந்தும், பெற்றிருந்தும், வல்லவனாயிருந்தும், யாதானுமொரு குற்றமிருப்பின் அதை மறைக்கப் பொய்யும் கூறுவானனதால் தீங்கொன்றும் மறுவானாகி என்றும், இவ்வெல்லாம பெற்றிருந்தும் இரக்கமில்லாக் குறையினாலும் உண்மைக்கு மாறுங் கூறுவானாதலால் 'வடிவு அருளே இல்லாது இலனும் இறை' (அருளே திருமேனியாக உடையவன்) எனவும் கூறினர். இங்ஙனம் மக்களுக்கு நூல்களில் உண்மை கூறுவதற்கு வேண்டிய காரணங்கள் நிரம்பியிருக்கும் இறைவனுக்குச் சொல்ல விரும்பிய எல்லாப்பொருள்களும உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெள்ளத்தெளிந்த விஷயமாகலினாலும், அவனருளே கண்ணாகக் கொண்ட நம் முன்னோர்களுக்கும், அப்பொருள்கள்

அங்ஙனமாதலினாலும், அவர்கள் கூறும் நூற்களெல்லாம் முழுதும உண்மை நூற்களாய் மக்கட்குத் தலைசிறந்த மெய்ப் பிரமாணமாகும்.

உலகமுழுதையும் இமைப்பது விழிப்பதால் ஒடுக்கிப் படைக்கும் ஐயனார் திருவாய்மலர்ந்தபடியாயுள்ள வேதோப நிடதங்களாகிய திருநான்மறைமுடிபோடொப்ப முன்னும் பின்னுமாகத் தேர்ந்தெடுத்துத் திருக்குறள் முதலாகத் திரு மந்திரமீறாக, நம்மாழ்வாரது மொழியும் பிரமசூத்திரமும் நடுநாயகமாக வைத்து நம்மம்மையார் தெளிவாய்க் காட்டி யிருக்கின்றார். இந்நூல்களே மக்களுக்குத் தலைநின்ற பிரமா ணமாகும். இவைகளெல்லாம் எத்துறையில் நேர்மையாய் ஒன்றுபடுகின்றனவோ அதுவே மக்களுக்கு முடிவிடமாகும். 'ஒருவாசகமென்றுணர்' என்றதனால் இந் நூல்களிலுள்ள எந்த விடயமும் தங்களுக்குள் ஒரு நூல் முடிந்த முடிபுக்கு இன்னொரு நூல் முடிபு மாறுபடாது ஒரு பொருளாகவே இருக்கும் என்பதாம்.

இந்நூலின் விடயமான பரமாத்துவிதமென்னுந் துறை யில் அவ்வெல்லா நூல்களும் நேர்மையாக ஒன்றுபோலக் கைகோத்துக்கொண்டு இடர்ப்பாடின்றி இறங்கிக் குளிப் பது இயல்பாயறிவு படைத்த கற்றறிந்த பெருமக்களுள்ளத் திற்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெள்ளத் தெளிந்த விஷயமாகும்.

இயங்கியலும் நிலையியலுமாயுள்ள இவ்வெல்லாப்பொரு ளுமாகித் தனது இயற்கை நிலையான சிதானந்த சொரூப மாகவே நிகழ்கின்றான் என்னும் பொருளை இடர்ப்படாது மேற்காட்டிய சுருதிவாக்கியங்கள் நேரே கொடுக்கின்றன. இன்னும், இதை உலகம் படைத்த ஐயன் சாந்தோக்கிய வுபநிடத தாத்பரியத்தில்,

'எப்பொருள்களும் தானாகி யிலங்கிடுமறிவாமீசன். அப்படி விளங்குகின்றது அறிதலே யவன்றனக்கு மெய்ப்பபூசை'

என்றும் கூறியிருக்கின்றார்.

'தானேயாகி நிறைந்து எல்லாவுலகுமுயிரும் தானேயாய் தானே யானேன்பானாகி'

என புளியம்பொங்குத் தமிழ்வேதப் புதுக்குமரனாரும்,

'உலகமும் உயிருமாகித் தற்பரனாய்ச் சதாசிவனாய்த் தானும் நானும் ஆகின்ற தன்மையானே'

என்பன முதலியவாக உழவாரப் படையுடைய தமிழ்வேதப் பழங்கிழவனாரும், திருநான்மறைமுடிவும், மற்ற அடிகளார் அவனருளே கண்ணாகக் கண்டு வாய்மலர்ந்த திருவாய்மொழி களும் திருவாசகங்களும் பரமாத்துவிதமாய் மேலான ஒற்று மையில் செஞ்சொல்லாய்ச் செம்பொருள் பயப்பன காண்க.

இங்ஙனம் இறைவன் உபாதான காரணனாய் உலகு, உயிராயிருக்கின்றான் என்னும் பொருள் செம்பொருளா கவே பொருத்தமுற்ற அர்த்தமாவதாலேயே, இறைவன் 'உலகத்துள்ளும் உயிருள்ளும் இருக்கின்றான்' என்பன முத லிய எல்லா வாக்கியங்களும் சிரமமின்றியும், மாறுபாடின்றி யும், நேர்மையான பொருளுள்ளவைகளாகவே ஆகின்றன.

சிற்பியாரது கைத்திறத்தின் செய்கைத் திறத்தால் ஈட்டிமரம் கருத்த யானையாயிருந்து தன்னோடு இழுபடுவது குழந்தைக்குத் தெரியாது. பெரியவர்கள் அவனுக்கு அதைக் காட்டவேண்டிக் கத்தியினால் அதன் வால் பாகத்தையோ தலைப் பாகத்தையோ அல்லது அதன் கழுத்தில் அணிந்திருக் கும் சங்கிலியில் ஒருவளையத்தையோ சிறிது சீவி உள்ளே பார்க்கச் செய்தால் அப்பொழுதுதான் அப் பிள்ளைக்கு

யானைக்குள் மரமிருக்கின்றது என்பது தெரியும் இங்ஙனம் யானைக்குள் மரம் இருப்பதினால் அந்த ஈட்டிமரம் யானையாக இல்லாதுபோயிற்று? அல்லதூஉம் யானையாகப் பிள்ளைகள் கையில் வீதி தோறும் இழுபடுவதற்கு ஒரு ஈட்டி மரமும் இங்ஙனம் வீதிவாயிலெல்லாம் இழுபடாமல் நிர்விகாரமாய், நிர்மலமாய், சாட்சி மாத்திரமாய் அந்த யானைக்குள் இருப்பதற்கு வேறொரு ஈட்டிமரமுமாக அந்த ஒரு யானைக்கே இரண்டுமரம் வேண்டுமா? வேண்டியதில்லை. அதுபோல உலகமா யிருக்கின்றவனே உலகத்திற்கு உள்ளுமிருக்கின்றான். நிர்விகாரியாய், நிர்மலமாய், சாட்சி மாத்திரமுமா யிருக்கின்றான் என்பது சாலப்பொருந்தும். இதனாற்றான் உலகுக்கு ஆதாரமாய் இருக்கின்றான், அதிஷ்டானமாய் இருக்கின்றான், உள்ளும் புறம்பும் இருக்கின்றான், விரவி இருக்கின்றான், ஊடுருவி இருக்கின்றான், நிமித்தகாரணமாய் இருக்கின்றான், நிர்விகாரியாய் இருக்கின்றான், உலகம் படைத்தும் படைக்காதவனாய் இருக்கின்றான் என்பன முதலிய எல்லாச் சுருதிகளும் விரோதமின்றியும் இடர்ப்பாடின்றியும் நேரே விளக்கமான பொருளுள்ளவைகளாகவே ஆகின்றன. ஏனென்றால்:- இதனடிப்பாகமான முதற் காரணமென்னும் அஸ்திவாரக் கட்டிடம் அவ்வளவு உறுதியாயிருக்கின்றது. அதனாற்றான் அதன் மேற்பாகமான இவ்விஷயங்களெல்லாம் அநாயாசமாகப் பொருள்படுவனவாக ஆகின்றன.

இவ்வாறாக உபாதானமாயிருக்கும் பொருளான மண்ணானது குடத்தில் விரவியிருக்கின்றது என்றுஞ் சொல்லலாம். நூல் ஆடையில் ஊடுருவி இருக்கின்றதென்றும் சொல்லலாம், இவ்விரண்டுமுபாதானமானதால் 'குடமாக ஆயிற்று' ஆடையாக ஆயிற்று' என்பதே ஒக்கும். 'கடத்தில் மண் வியாபகமாய் நிறைந்திருக்கின்றது' 'ஆடையில் நூல் எங்கும்

ஊடுருவி யிருக்கின்றது' என்று சொன்னால் ஒவ்வாதென்ப தில்லை. இங்ஙனமிருப்பதினாற்றான் உண்மை நூல்களிலெல் லாம் இறைவனுக்கு உலகத்தோடுண்டான தொடர்புக்குப் பலவிதமான உதாகரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை யெல்லாங்கண்டு அப்படி அப்படியே என்று அறி ஞர்கள் மயங்கமாட்டார்கள். திருநாராயணரால் சொல் லப்படும் கூர்ம புராணத்து ஈசுவர கீதையில் 'உடுக்கும் ஆடையினைப் போல உலகம் யாதொன்றில் குறுக்கும் நெடுக் கும் ஆகும்' எனவும் 'ஓங்காரப் பொருளாம் என உணர் வின் விரிவு உலகெல்லாம்' எனவும், பகவத்கீதையில்

'மண்ணினாய விகாரமும் அம்மண்ணேயந்த மண்ணேழித்துப்
பண்ணினாரும் பிறரில்லை பண்ணப்பட்ட பல பொருள்கள்
எண்ணினாகு வதன்முன்பு மிறந்தபொழுது நிகழ்விடத்தும்
கண்ணினாடி மண்ணேழியக் கண்டாருளரோ கட்டுரைப்பாய்'

எனவும்.

'मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ।'

[மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகண இவ]

'மணிகளுக்குள் நூல்போல இவ்வெல்லாப் பொருள்களும் என்னில் கோர்க்கப்பட்டிருக்கின்றன' எனவும், உபநிடதங் களில் ஸாரமான பிரமகீதையில்,

'एकेनैव तु पिण्डेन मृत्तिकाया यथा सुराः ।
विज्ञातं मृन्मयं सर्वं मृदभिन्नत्वतः सदा ॥'

[ஏகேநைவ து பிண்டேன ம்ருத்திகாயா யதா ஸுரா:
விக்ஞாதம் ம்ருந்மயம் ஸர்வம் ம்ருதபின்னத்வத: ஸதா]

ஒரு கடத்தை விசாரித்து முழுதுமாகக் காரணமே இருக்கின் றது என அறிந்தால் (அதனால்) எல்லாக்காரியங்களும்

தனது உபாதான காரணத்திற்கு வேருகாது அநந்யமாகவே இருக்கும் எனக் காரணசொரூபமாக அவைகள் அறியப்பட்டனவேயாகும் என்பது போல' எனவும் 'சிலந்தியுமிழ்ந்து விழுங்குவது எப்படி' எனவும், 'தேகத்தே மலந்தருகேசவுரோமமது எப்படி' எனவும், மண்ணிற்கே பலந்தரும் ஓஷதி எப்படியோ அப்படி ஈசன்பால் அலர்ந்தது அடங்கலும்' எனவும், 'வெறுங்கன வொக்குமது ஆயுங்கால்' எனவும், 'அனைத்தும் இறைவன்பால் பொய்மை யறவே நிகழினும் கனவுபோலாம்' எனவும், 'உண்டையும் பாவுமே போலச் சாருமால்' எனவும், 'பைஞ்ஞாகம் மாலை போலவே தோன்றப்படும்' எனவும், பதினோராந்திருமுறையில் பட்டினத்துப்பிள்ளையாரும் — 'நூரையும் திரையும் நொப்புறு கொட்பும் வரைவில் சீகரவாரியும் குரைகடல் பெருத்தும் சிறுத்தும் பிறங்குவதோன்றி எண்ணிலவாகி இருங்கடலடங்கும் தன்மைபோலச் சராசரமனைத்தும், நின்னிடைத் தோன்றி நின்னிடை ஒடுங்கும்' எனவும், உபநிஷத்துக்களில்

[ 'यस्य पृथिवी शरीरम्' 'யஸ்ய ப்ருதிவீ சரீரம்' ]

'எவனுக்கு இந்தப் பூமியானது உடம்பாய் இருக்கின்றதோ' எனவும், இப்படி ஒன்றற்கொன்று வேற்றுமையான உதாரணங்கள் காரிய காரண விடயத்தொடர்பிலேயும், மற்றத் தொடர்பிலேயும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வுதாரணங்களில் விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தகம் என்னும் நான்கு வகையான காரியப் பிறப்பும் (தோற்றமும்), காணப்படுகின்றன. இன்னும் ஆதார ஆதேயம் போன்றவைகளும் காணப்படுகின்றன.

இவ்வுவமானங்களெல்லாம் உபமேயப் பொருள்களோடு சமமாக ஒத்துக்கொள்ளும் ஒரு சமமான தருமத்தை எடுத்

துக்கொள்ளவேண்டும். எந்த ஒரு தர்மத்தை எடுத்துக் கொண்டால் அத்துறையில் எல்லாப் பக்ஷங்களும் விரோத மின்றி உடன்படுமோ அந்தத் தருமமே சிறந்ததாகும். ஒரு உபமேயத்திற்கு உவமானப் பொருள்கள் பலவாயினும் தாஷ்டாந்தத்திலுள்ள யாதானுமொரு சிறந்த தருமத்தோடு திருட்டாந்தம் ஒவ்வொன்றும் பொருத்த முடையனவாகி தாஷ்டாந்தத்தை விளக்குவனவாய்ச் சாந்தியடைகின்றன,

ஒரு திருட்டாந்தம் விளக்கின பாகத்தையே இன்னொன்றும் விளக்கவேண்டும் என்னும் அவசியம் இல்லை. இதனால் அது விளக்கின அம்சத்தை இது வந்து விளக்கக் கூடாது என்பதும் இல்லை. ஆகவே வில், வாள், விடம், கெண்டை மீன், மாவடு வகிர், ஆக ஐந்தையும் மகளிர் கண்ணுக்கு உவமானமாகக் கொடுத்தால் இவற்றில் கண்ணின் புற அவயவமான புருவத்தின் வளைவில் வில்பொருத்தமுடைய தாய் உபமேயத்தை விளக்கிச் சாந்தி பெறுகின்றது. கண்ணின் நீளத்திலேயும், கடைக் கண்ணின் கூர்மையிலேயும், வாள் பொருத்தமுடையதாய் அவைகளை விளக்கிச் சாந்தி பெறுகின்றது. கண்ணின் கருப்பிலேயும். மயக்குந் தன்மையிலேயும் விடம் உவமானமாய் அமைதி பெறுகின்றது. கண்ணின் முழு வடிவத்திலும் கெண்டைமீனும், மாவடு வகிரும், சமானவடிவ தருமமுடையதாய் ஒப்புமையடைகின்றன. இவைகளெல்லாம் ஒரு பொருளுக்கே உவமையாயினும் வில்லும், வாளும், விடமும், தனித்தனி ஒவ்வொன்றும் வெவ்வேறு தருமத்தையும், கெண்டையும், மாவடு வகிரும் தனித்தனி ஒரே வடிவத்தையும் (தருமத்தையும்) விளக்குவன காண்க. இவ்வாறுக மேற் கூறியவற்றில் எல்லாப்பக்ஷமான காரியப் பிறப்பு (தோற்றம்)களும், இறைவன் உலகத்துக்கு

உபாதானகாரணன் என்பதையும், காரியம் எப்பொழுதும் முதற் காரணத்துக்கு அனந்யமாகவே இருக்கும் என்பதையும் நன்கு விளக்குகின்றன. இவ்விருத்தி முதலியவைகள், தங்களுக்குள் எவ்வளவோ பேதமுடையனவா யிருப்பினும், கூறிய இந்த அளவு தருமத்தில் ஒப்புமை அடைகின்றன. இதை நன்கு விளக்குவதற்காகவே சுருதிகளில் பல திருட்டாந்தங்கள் கூறப்படுகின்றன.

இவற்றில் குடத்துக்கு மண்போன்று இறைவன் உலகத்திற்குக் காரணமாகின்றான் என்பதுவே தலை சிறந்ததாகும். இங்ஙனம் ஒத்துக்கொள்ளுமிடத்து விவர்த்தம் ஆதாரம் ஆதேயம், முதலியன யாவும் தந்தம் உவமையளவில் பொருத்தமுடையனவாகும். இங்ஙனமன்றி மற்றவற்றிற்குப் பொருந்தாததும் உபமேயத்திற்குப் பொருந்தாததுமான ஒரு தருமத்தை எடுத்துக்கொண்டு சிரமப்படுவது தகுதியன்று. அவற்றுள் ஒன்று வருமாறு:— நூல்களில் கூறிய மற்ற உவமானங்களையெல்லாம் எடுத்துக்கொள்ளாது பகவத்கீதையிலும் சிருஷ்டிக்கு உவமானமாகக் கூறும் மற்ற பாகங்களையும் விடுத்து 'सूत्रे मणिगणा इव'[ஸூத்ரே மணிகணா இவ] மணிக்குள் நூல்போல இறைவனுக்கும் உலகத்துக்கும் உள்ள ஆதார ஆதேயத்தன்மைக்கு உவமை கூறியிருப்பதை மாத்திரம் எடுத்துக்கொண்டால் மணியின் ஏகதேச பாகத்திலேயே நூல் இருக்கின்றது. தீயிற்சூடுபோலும் பாலிற்சுவை போலும் உடலில் உயிர்போலும் பொருள்முழுதும் கலந்து நிற்பதில்லை, மணியின் ஏகதேசத்திலுங்கூட மணிப்பாகமில்லாத இடமாகிய துவாரத்திலே நூல் ஊடுருவியிருக்கின்றது எனவே, நூலிருக்குமிடத்தில் மணியில்லை. மணியிருக்குமிடத்தில் நூல் இல்லை. ஆனால்,துவாரத்தின் வழியாக மணி

க்குள் நூல் நுழைந்து மணிகளைச் சிதருமல் தாங்கிக்கொண் டிருக்கின்றது. இதுவே இவ்வுவமானத்திலுள்ள பொருளா கும். இதுபோல இறைவன் உலகப் பொருள்கள் எல்லாவற் றிலும் ஊடுருவி அவைகளை நிலைகலங்காது காத்துத் தாங்கிக் கொண்டிருக்கின்றுன் என்று உவமான அளவுக்குப் பொருள் கொண்டு மற்றது கொள்ளாது ஒழியின் 'உலகப் பொருள் கள் முழுவதிலும் இறைவன் எள்ளுக்குள் எண்ணெய்போ லும், பாலுக்குள் நெய்போலும், வியாபித்திருக்கிருன்' என் றும், 'இவ்வுலகப் பொருள்கள் முழுவதிலேயும், கடத்தில் மண் போன்றும், அணியில் பொன் போன்றும், உடையில் நூல் போன்றும், யானையில் மரம்போன்றும் அதுவதுவாக இருக்கின்றுன்' என்றும் கூறிய மேற் சுருதிகளும், அவ்வா றிருந்தும் அவ்வாறு கண்டும், அவ்வாறு கூறிய நம் அப்பர் நம்மாழ்வார் முதலிய பெரியாருடைய வாக்குகளும் பொரு ளின்றி வெறுஞ் சொற்களாய் நிற்குமல்லவா?

இவ்வாறு உவமையிலுள்ள பேதம் போலவே உபமே யத்திலும் கொண்டால் மணிக்குள் நூல் இருக்கின்றது என்பதே ஒக்கும். மணிக்குள் நூல் வியாபகமா யிருக்கிறது என்பதும், மணியாக இருக்கின்றது என்பதும் ஒவ்வாததா கும். இம்மாதிரி கொண்டால், இறைவன் உலகப் பொருள் களுக்கு உள்ளிருக்கின்றுன் என்பதைத் தவிர, உலகப் பொருள்களுள் எள்ளுக்குள் எண்ணெய் போல வியாபித்தி ருக்கின்றுன் என்பதும், எல்லாமாய் இருக்கின்றுன் என்பதும் உபசாரமாய் முடியும். இங்ஙனமாக உபமேயத்துக்குப் பொருந்தாத வொன்றைப் பிரதானமாகக் கொண்டு அதே தன்மை உபமேயத்திலும் இருக்கவேண்டும் என்று வாதித் தால் செந்தாமரை போன்றது மகளிர் முகம் என்னுமிடத்து உவமான அளவில் நின்றுகொண்டு செந்தாமரையில் மூக்குக்

காணப்படாதபடியால் நல்லபெண்களுக்கும் மூக்கின்றி முகம் இருக்குமோ என எண்ணுவது போன்றதாகும்.

மேலும் திருநாவுக்கரசர் திருத்தாண்டகம் முதலியவற்றில் 'இவைகளெல்லாம இறைவனுகை விருக்கின்றன' என்றும் இறைவன் இவ்வெல்லாமா யிருக்கின்ருன்' என்றும் சுருதியின் தலைநின்ற பரமாத்து விதத்தைப் பல பதிகங்களிலும் பல படியாகவும் விளங்கக்கூறி மீண்டும் இறைவன் இங்ஙனம் உலகமாய் இருக்கும் மேலான ஒற்றுமையை 'கண்டேன்' எனவும் திருவாய் மலர்ந்து தனது செந்நாச் செங்கோலைச் செலுத்தியிருக்கின்ருர். இத்தகைய அரசு வீற்றிருக்கும் நாக்குப் பொய்த்துப் போகுமேயாளுல் மற்றை யாருடைய நாக்கு எங்ஙனம் பிரமாணமாகும். எல்லாம் செத்த நாக்குகளாகவே ஆகிவிடுமல்லவா? ஆதலினுற்ருன் முற்றுணர்வு பெற்ற அடியார்கள் யாவரும், 'வானுனன் வளியானுன் பூதங்களானுன் எல்லாப் பொருள்களுமானுன்' என்று கூருநிற்ப தாமும் அவ்வாறே—

'பெருநலமும் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவும் தம்முருவுந் தாமே யாகி'

எனக் கூறியதோடு நில்லாமல் உலகமக்களுக்கு நம்பிக்கை யுறுதியாம் பொருட்டு, சுருதி கூறியவாறே இறைவன் எல்லாமாயிருப்பதை நான் கண்டேன் எனவுங் கூறுகின்ருர். இங்ஙனமாயின் மற்றவர் கூறுவதெல்லாம் காணுது கூறுகின்ருரோ வென்ருல் – அங்ஙனமன்று:— நேரே கண்டும் அவ்வாறு கூறலாம். சுருதிகளையும், பெரியோர் வாக்குகளையும் நம்பியும் அவ்வாறு கூறலாம். நம் அப்பரோ காணமுடியாத கைலாயமாயினும் சரி, நடந்து சென்று நேரேகண்ட வீரதீரராதலாலும் எதையும் அவ்வாறிருந்தும், அவ்வாறு நடந்தும்,

அவ்வாறு கண்டும் கொண்டவராதலாலும், கண்டொன்று சொல்லும் நாக்குப் பெருதவராதலாலும், கண்ட காட்சிகளையே அவ்வாறு காட்டும் சொற்பொருள் வன்மையுடையாராதலாலும், முக்காலத்து நாக்களுக்கும் மத்தியிலிட்ட அரியாசனத்துக் கொலு விற்றிருக்கும் பேறு பெற்ற திருநாப் பெற்றவராதலாலும், நம் அப்பர் காணுததைை ஓர்போழ்தும் சிறிதும் கண்டதாகச் சொல்ல மாட்டார். உண்மை கூறுமிடங்களில் உபசாரமாகவும் கூறமாட்டார். 'மக்கட் பிறப்பிற்கு மயக்கம் இயல்பாதலால் நம் அப்பரும் நம் ஆழ்வாரும் மக்களாக்கை தாங்கியவர்களாதலால் ஓர்கால் ஓர்பொழுது மயங்கியோ அல்லது உபசாரமாகவோ உண்மை கூறவும் தவறியிருக்கலாமே' எனச் சந்தேகிக்கின்— சந்தேகமின்றி அந்த மனிதனைச் சந்தேகிக்கவேண்டியதுதான். வேலியே பயிரை மேய்ந்தால் மீண்டும் காப்பார் யார்? 'பன்னுளும் தன்னைத் தமிழ்மாலை பாடப் பணிவித்தானை' எனத் தனது இறை இயல்பைக் கண்டு, நீண்ட பலநாளும் தமிழை வளர்த்த பெருமானே உண்மைகளைத் தமிழில் கூறவில்லை என்ருல் இனித் தமிழுக்குத்தான் புகலிடமேது? ஔவையார் அவர்கள் தாமிட்ட நாற்கோவையில் மற்ற நூல்களையெல்லாம் அததற்குள்ள வெவ்வேறு பெயர்களாற் கூறி நம்முடைய அப்பர் தேவாரத்தைச் சேர்த்துக் கூறும்பொழுது 'தமிழ்' எனக் கூறியிருப்பதினுலும் உண்மை விடயங்களில் தமிழுக்குப் புகலிடமாயுள்ளது, இத்தகையார் வாக்கென்பது தெளிவாகின்றது. ஆனுல் ஒன்ருன பொருளின்கண், காண்பான், காட்சி, காணப்படுபொருள் ஆகிய மூன்றுமுளதாய் நிகழ்வது பொருந்தவில்லையே யென்ருல்— 'ஆம் உங்களுக்குப் பொருந்தாதது போலக் காணப்படும் இச்செயல்களெல்லாம் அங்கு பொலிவுற்று அழகுபட நிகழ்கின்றன என்றும்

அதையும் நான் கண்டேன்' என்றும் கூறுகிறார். 'பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்' என—இவ்வாறாக உண்மை கண்டு அவ்வாறு கண்டதாகச் சொல்லும் பெரியோர் வாக்குகளும் உயிர்களனைத்திற்கும் பிறப்பு, இருப்பு, இறப்புகளுக்குப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட மும்மூர்த்திகளுடைய கீதையின் வாக்குகளும், அனாதியாயும் முனி பரம்பரையாயும் வரும் திருநான்மறை முடிபுகளும், இறைவனுக்கும் உலகத்துக்கும் உண்டான தொடர்புக்கு எடுத்துக்காட்டும் உதாரணங்களெல்லாம் எந்த அளவில் ஒத்துக்கொண்டால் எல்லாம் விரோதமின்றி ஒன்றுபட்டவைகளாகுமோ! உபமேயத்தையும் பலவாற்றால் அழகுபட விளக்கினதாகுமோ! அத்தகைய ஒரு சமான தர்மத்தை பலவற்றிற்கும் பொதுவாக நாம் எடுத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது இறைவனே உலகத்துக்கு உபயகாரணனாகவுமாகின்றான் என்பதாகும்.

இங்ஙனம் கொண்டதால் மேற்காட்டிய நூல்களில் எடுத்துக்காட்டிய விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தகம் என்னும் நான்குவித பக்ஷமான பிறப்பும் மற்றதும் நேர்மையாய் ஒத்துக்கொள்ளும். எங்ஙனமெனில்—

1. விருத்தி பக்ஷம்— மடித்துவைத்திருந்த ஆடையை விரித்துக் கூடாரமாகச்செய்த பொழுது ஆடை கூடாரமாயிற்று என்னும் வழக்குக் காணப்படுகின்றது. இங்குக் காரியமாகிய கூடாரம் காரணமாகிய ஆடையினும் சிறிதும் வேறன்று. காரணமான ஆடை காரியமான கூடாரமாக விருக்கின்றது. ஆதலின் காரியம் காரணத்தின் வேறன்று இதுபோற் இறைவன் உலகமாகி இருக்கின்றான். உலகம் இறைவனின் வேறன்று. இது விருத்தி பக்ஷத்துள்ள மற்றவற்றிற்கு விரோதமில்லாத உபமேயத்துக்குப் பொதுவான தர்மம் ஆகும்.

2. பரிணாம பக்ஷம்:- இது மண் குடமாக ஆவது. இது பிரதான சுருதிகளில் முக்கியமாய் விளக்கத்துக்காகப் பலவிடங்களிலும் எடுத்தாண்டிருத்தலினால் இதையே நாமும் நெடுக விசாரித்து வந்துள்ளோம். இன்னும் இதைக் கொண்டே விசாரிப்போம். இதுவும் 'காரியம் காரண அநந்நியம்' என்னுமளவில் மற்றவற்றோடும் உபமேயத்தோடும் தலை சிறந்த பொருத்தமுடையதேயாகும்.

3. ஆரம்ப பக்ஷம்:— இது நூற்கள் பல ஒன்றோடொன்று குறுக்கு நெடுக்குமாகக் கூடி ஆடையை ஆரம்பிப்பதாகும். இங்கும் நூற்கள் ஆடையாயின. ஆடை கிழித்துக்கிழித்துப் பார்த்தவிடத்தும் கிழிக்காது பார்த்தவிடத்தும் நூலாகவே இருக்கின்றது என்று, 'காரியம் காரணாநந்நியம்' என்றும் ஒற்றுமை மற்றவைகளோடு சமானமாகவும் தாஷ்டாந்தத்தில் பொருத்தமுடையதாகவுமாகும்.

4. விவர்த்தகம்:— விபரீத (மயக்க) வுணர்வால் தோன்றுவது. அதாவது - சாத்தன் வருவதைக்கண்டு நடை முதலிய ஒற்றுமையினால் போத்தன் வருவதாகத் தோன்றுவது, கயிறு வளைந்து நீண்டு கிடத்தல் முதலிய ஒற்றுமையால் பாம்பாகத் தோன்றுவது, கிளிஞ்சல் சில ஏதுக்களால் வெள்ளியாகத் தோன்றுவது முதலியன. இப்படி, காரணத்துக்கு பொருள் வேறாகத்தோன்றினாலும் அங்கு கிளிஞ்சலையும் கயிற்றையும் தவிரப்பொருளாக வெள்ளியும் பாம்பும் இல்லை. வெள்ளியும் பாம்பும் உண்மை காணுமிடத்தில் கிளிஞ்சலும் கயிறுமாகவே யிருக்கின்றன. அதுபோல 'கடவுளிடத்தினின்றும் தோன்றின இந்தப் பேதப்பிரபஞ்சமானது கடவுளுக்கு வேறாக இல்லை. உண்மை காணுமிடத்து கடவுளாகவே இருக்கின்றது' என்னும் இந்த அளவு தருமம் இந்த விவர்த்த

திருட்டாந்தத்திற்கு மற்ற பரிணாம முதலான திருட்டாந்தங்களோடு மாறுபடுதலின்றி உபமேயமாகிய உலகத்தோடுள்ள சமான தருமமாகும். இந்தப் பக்ஷத்தில் காரியத்திற்கு இருப்பில்லா விட்டாலும் (அதாவது காரியமானது காரணத்தின் இருப்பு முதலியவற்றைக் கொண்டு அதற்கு அனன்யமாய் உண்மையான வெள்ளியும் பாம்புமாயிருந்து, பொற் கொல்லரால் நகை செய்து அணியப் படுதலும், பாம்பாட்டியால் விஷப்பல்லைப் பிடுங்கி ஆட்டப்படுதலும் முதலிய உண்மை விவகாரங்களுக்குச் சிறிதும் பயன்படுதலில்லையாயினும்) காரணத்திற்கு வேறாக நாமரூபத்தோடு பேதமாய்த் தோன்றும். இது காரணத்தைக் காட்டிலும். சிறிதும் வேறானதன்று. காரணமேயாகும் என்னும் அளவிற்கு இந்த விவர்த்த பக்ஷம் சிறந்த எடுத்துக் காட்டாகவுமாகும். காரிய காரணங்களுக்குள்ள மேலான ஒற்றுமையை ஏகாக்கிரசித்தங் கொண்டு கிரகிக்க முடியாதவர்களாய், காரியங்கள் அவ்வவற்கேற்பத் தனித்தனிபேத இருப்புடையன என உறுதியாய்க் கருதிக் கொண்டிருக்கும் மந்தாதிகாரிகளைத் தேற்றிப் பேதபுத்தியை நீக்குவதற்கும், இது சிறந்த உவமானமுமாகும். இந்த விவர்த்த உவமையளவில் நின்றுகொண்டு காரியமாகிய உலகத்திற்குப் பரமகாரணத்தின் இருப்பை, குடத்திற்கு மண்போல அனன்னியமாக அங்கீகரிக்காது கிளிஞ்சல் - வெள்ளி; பழுதை - பாம்பு முதலியன போன்று பொருளில்லாத வெறும் தோற்றமாத்திரமாயுள்ள சதசத் விலக்ஷண அநிர்வசனீய பாவப்பொருளான மித்யா பதார்த்தம் (பொய்ப்பொருள்) என்று கொள்ளுவதையே **கேவலாத்துவிதம்** என்று சொல்லுவார்கள்.

ஆனல், பரம முதற்காரணத்தின் இருப்பு (சத்தை) குடத்தில் மண்ணினது இருப்புப் போன்று எல்லாப்பொருள்

களிலும் இருத்தலினுல் எல்லாப்பொருள்களும் ஸத்தியமே யாகும். ஆகவே ஆண்டவனது (காரணத்தின்) இருப்புத் தனது காரிய முழுவதினும் அனன்யமாய் இருப்பதனுல், 'காரியமிருக்கின்றது', 'விளங்குகின்றது', 'விவகரிக்கப்படு கின்றது' எனக் காரியமளவில் கூறப்படும் விவகாரங்களெல் லாம் பொய்யின்றி உண்மையான விவகாரங்களாகவே யாகின்றன.

இப்படியாக ஒன்றற்கொன்று இயல்பாய்த் தனித்தனி எல்லாப்பொருள்களும், அதனதன் இருப்பால் இருக்கின் றன, விளங்குகின்றன என்பதுவே பேதவடிமான அத்து விதம் என்று சொல்லப்படும். ஆயினும், கடவுள் இவ் வெல்லாப்பொருள்களிலும், மணியில் நூல் போலும், தீயிற் சூடுபோலும், உடலில் உயிர்போலும், ஊடுருவித் தனது வல்லமையினுற் ருங்கி இருக்கின்ருன் என்றுங் கொள்ளுவது அப் பேத அத்துவிதத்தின் தன்மையாகும்.

இதில் எந்தவிதமான பேதக்கொள்கையும் ஏதாவது ஓர் எல்லையைக் குறிப்பிட்டு, அதாவது ஆர்டிக் மஹா சமுத்திரத் திற்கு வடக்கு கடவுளும், பஸிபிக் மஹா சமுத்திரத்திற்கு கிழக்கு உலகப் பொருள்களும், இந்தியப்பெருங்கடலுக்குத் தெற்கு உயிர்களும், எனத் தங்களுடையது வாதம் பேத வாதம் என்கின்றதினுல் பொருள்களை இவ்வாறு பேதமாகக் கொள்ளுவதில்லை.

பொருளியல்பு அங்ஙனமின்மையால் சிலர் இப்பேத வாத த்தின் உண்மை தெரியாது, இவ்வாறு ஒன்றற்கொன்று சிறி தும் சம்பந்தமில்லாத பொருள்கள் என்று கருதிக்கொண்டு இவ்வாதத்தை அலட்சியமாகக் கருதுகின்ருர்கள். பேதவாத மாயினும்சரி, மித்யாவாதமாயினுஞ்சரி, அபேதவாதமாயினும் சரி, எல்லா வாதத்திலும், பதி, பசு பாசங்கள், ஓர் இடத்தில்

நிகழ்கின்றன வென்றே கொள்ளப்படுகின்றன. அங்ஙனம் கொள்ளுவதே நியாயமுமாகும். அபேத வாதத்தில்தான் ஜீவேசுர ஜகத்தெல்லாம் இறைவனுக்கு உள்ளும் புறம் புமும் அனன்யமாய் விளங்குகின்றன என்றும், மித்யாவாதத் திலோ அவை கிளிஞ்சலில் வெள்ளிபோன்று, அதன் மேற் புறத்தில் விளங்குகின்றன என்றும், பேத வாதத்திலோ, அவை மரமும் மற்ற கல்லும்போல, ஒன்றிருக்குமிடத்தில் மற் றொன்று இல்லாமல் வேருயிருக்கின்றன என்றும் கொள்ளு வதற்கில்லை. இறைவடிவான சச்சிதானந்த சொரூபத்தில் எவ்வளவோடு உட்பாகம் என்றுகொண்டு மேற்பாகத்தில்இவ் வுலகப் பொருள்களை, கிளிஞ்சலின் மேற்பாகத்தில் வெள்ளி தோன்றுவது போலக் கொள்ளுவது? அல்லது எந்த இடத் தில் இறைவன் நீங்கி இருக்கின்ருன் எனக்கொண்டு அந்த இடத்தில் மரத்துக்குக் கற்போல வேறு பொருளைக் கொள் ளுவது? இப்படியாக, கடவுள் என்று ஒன்று உண்டு என்று ஒத்துக்கொண்ட எவரும் எந்தக்கொள்கை யுடையாராகிலும் கடவுள் சில இடங்களில் இல்லாது நீங்கி இருக்கின்ருர் என்ருே அல்லது ஒரு எல்லையைக் குறிப்பிட்டு இந்த எல்லை யோடு அவர் வடிவம், அதற்கு மேற்பாகம் மற்றவைகள் என்ருே கொள்ளுவதில்லை.

எத்தகைய பேத வாதியராயினும் அவருக்கு உடலுக் குள் ஜீவான்மாயிருப்பது வேமெருருவர் சொல்லிக் கொடுக்க வேண்டுமா? கடவுள் ஒருவர் உண்டென்ற பின்னர் அவர் உடலுயிருக்குள் இருக்கின்ருர் என்னும் விஷயத்தைத் தெரி யாதிருப்பாரா? இவ்வளவு கூடத்தெரியாதவர்கள் மதாசாரி யர்களாக வரமுடியுமா? ஆகவே பொருளியல்பு இப்படியாக இருக்கும்பொழுது இவைகளை ஒன்றுக்கொன்று சம்பந்தமில் லாத எங்கெங்கேயோ விருக்கும் பொருள்கள்போலக் கூறு

வாரா ? மறந்துங்கூட அவ்வாறு கூறவே மாட்டார்கள்.

ஆக முப்பொருள்கள் காணப்படுகின்றன. எல்லாவிதத்தாலும் விவகரிக்கப்படுகின்றன. அதனுல் மூன்றும் இருக்கின்றன என்கின்ருர்கள், எனவே மூன்றுபொருள்களும் அறியப்படுகின்றன, அனுபவிக்கப்படுகின்றன, அனுபவித்து முன்னோர்களால் சொல்லப்படுகின்றன. ஆதலால் இம்மூன்றும் பொருள்களாயிருக்கின்றன என்பதுமட்டிலும் அவர்களின் பேதக்கொள்கையாகும். இங்ஙனமன்றி இவைகள் ஒன்றற்கொன்று உள்ளும் புறம்புமாய்க் கலந்து இல்லையென்ருே அல்லது ஒன்று மற்ருென்றின் எல்லை கடந்து சம்பந்தமின்றி இருக்கின்றதென்ருே அவர்கள் கொள்ளும் பேதவாதத்திற்குச் சிறிதும் அர்த்தமே அன்று. இது உள்ளங்கைப் புண்ணுக்குக் கண்ணுடி வேண்டுவதில்லை என்பது போன்ற தெளிவான விடயமாகும்.

இங்ஙனமிருந்தும், சிலர் பகற்பொருளாயுள்ள இதை எந்தக் கண்கொண்டு பார்த்தார்களோ தெரியவில்லை. தாங்களும் இங்ஙனம் பொருட்பேதவாதியர்களாயும், முப்பொருள் கூறுகின்றவர்களாயும் இருந்துங்கூட முன்னுள்ள சில பெரியோர்களைப் பேதவாதியர்களென்றும் சுருதி விரோதமாகப் பேதங் கூறுகின்றவர்களென்றும், கிள்ளுக்கீரையைப் போல அலட்சியமாகப் பேசுகிருர்கள். "பிறரைச் சொல்லுகின்ருேமே, இந்த விடயத்தில் நம் கொள்கை என்ன ? விவகரிக்கப்படுகின்ற இந்த உலகப்பொருள்கள் நமக்கு வேறு அவர்களுக்கு வேருகவா பிரிந்துங் கூடியுமிருக்கின்றன?" எனச் சிறிதும் அவர்கள் யோசிக்கவில்லை எனத் தெரிகின்றது. மத்வாச்சாரியார்கள் போன்ற பெரியார்கள் பேதம் கொள்ளுகின்ருர்கள் என்ருல், காலத்தினுல் பொருளுக்குப் பேதங் கொள்ளுகின்ருரா ? அல்லது தேசத்தால் அவ்வாறு கொள்ளுகின்ருரா ? அல்லது பொருளால் பொருளுக்குப் பேதங்கொள்ளு

கின்றாரா? என்பதைச் சிறிதும் விசாரிக்க வேண்டாமா? இவர்களுக்கெல்லாம், மரம், செடி, கொடிகள் பூமிக்குள் வேரூன்றி வளர்கின்றன போலும். இவர்கள் கருதும் பேத வாதிகள் மாத்திரம் வேர் பூமியைத்தொடாது வானத்திலேயே நின்று வளர்கின்றதென சொல்லுகின்றார்கள் போலும் இவர்களுக்கு மாத்திரம் பாலில் நீரை வார்த்தால் பொருள் வேறாயிருப்பினும் ஒன்றாய் ஊடுருவிக் கலக்கும் போலும், பேதவாதிகள் ஊற்றினால் மாத்திரம், பாலில் நீர் கலக்காது மேல் பாகத்திலேயே நின்றுவிடும் போலும், மத்வாச்சாரியார் படத்திலுள்ள இரண்டு விரல்களை பார்த்து ஒருவிரலுக்குள் இன்னொன்று எவ்விதத்தும் புகாது ஒன்றற்கொன்று புறம்பாகவே இருக்கின்றதென்பதுபோலவே கடவுள் விஷயத்திலும் வேறாகத்தானிருக்கும் என்று மத்வாச்சாரியார் கருதுவதுபோலும் எண்ணுகிறார்கள் போலிருக்கின்றது. அதே பொருட் பேதத்தைத் தங்களுக்கென்றாலோ பாலுக்குள் நீர் போலும் உடலுக்குள் உயிர் போலும் ஒன்றோடொன்று கலந்திருக்கும், பொருட்பேதமாகக் கொள்ளுகின்றார்கள். இப்படித் தங்களை அத்துவிதவாதிகளாக நினைத்துக் கொள்ளும் பொருட்பேத வாதிகள் தாங்கொண்ட பேதப் பொருள்களின் ஒற்றுமைக்கு எப்பொருள்களை உபமானமாகக் காட்டுகின்றார்களோ அவைகளெல்லாம் பேதமதத்தில் லட்சியமாய் உபமேயப் பொருள்களாகவே இருப்பதைச் சிறிதும் அறியார் போலும்.

பிறர்மேல் துவேஷபுத்தி ஏற்பட்டுச் சொல்லும் பொழுது நேர்மையான விடயங்கள் நினைவிற்கு வரவேண்டுமென்பதில் என்ன அவசியம் இருக்கின்றது? சகுன சாஸ்திரத்தில் 'இது சகுனத்தடை' என்று விதித்திருப்பதைப் பார்த்து விட்டு அதன் (மூக்கின்) அருமையையும் பின்நேரிடக்கூடிய கெடுதலை

யும் கூட எண்ணிப்பாராமலே தனது மூக்கை அரிந்து கொண்டு எதிரியின்முன் செல்வர்போலும்.

பேதவாதியர்களெனத் தங்களால் கண்டிக்கப்படுகின்ற மத்வாச்சாரியார் முதலான பெரியோர்களுக்கு உபமேயமாகச் சித்தித்துள்ள உடலுமுயிரும் பாலும் நீரும் முதலியவைகளையே உபமானமாக எடுத்துக்கொண்டு தாங்கள் கூறும் முப்பொருளின் பேதத்துக்கு அத்துவிதம் கூறுகின்றார்கள் என்றால், மேலும் பேதமில்லாத அத்துவிதம் கூறுகின்றார்கள் என்றால், இன்னும் பேதவாதியைக் கண்டித்துப் பேதமில்லாத அத்துவிதம் கூறுகின்றார்கள் என்றால் இது எவ்வளவு விசித்திரமாகவும், ரசிகரமாகவும் இருக்கின்றது!

எல்லா வாதிகளுக்கும், உலகு, உயிர், பரமென்னும் மூன்றும், லக்ஷ்யமும், தாஷ்டாந்தமும், உபமேயமும் ஆகும். இதில் யாதாயினும் இருபொருள்களிருக்கும் நிலையை உபமானமாகக் கொடுத்து மற்ற மூன்றாவது பொருள் இருக்கும் நிலையை விளக்க வேண்டும். அப்படியே விளக்குகின்றார்கள். இவற்றில் கடவுள் இருக்கும் நிலை ஊகத்துக்கும் நூலுக்கும் விடயமேயன்றி காட்சிக்கு விடயமாகாதெனினும் மற்றிரண்டும் ஓரளவுக்குக் காட்சிப் பிரமாணத்திற்கு விடயமேயாகும். இது யாவருக்கும் சம்மதமான விடயம். உடல் வேறு, உயிர் வேறு என்பதை, செத்தபின்னராவது மக்கள் உணர்ந்து கொள்ளுகிறார்கள். அதனால் உடல் உயிரோடு உலாவும்போதும், அதன் சொரூபத்திற்கு இது வேறாகத்தானிருக்க வேண்டுமென்று கொள்ளப்படுகிறது. இங்ஙனம் உடல் வேறு, உயிர் வேறாயினும், செத்த பின்னர், உடலுக்குப் புறம்பாய் உயிர் வேறாய் இருப்பதுபோலவா, சாவதற்கு முன்னும் உடம்புக்கு வேறாய்ப் புறம்பாய் இருக்கு

மென்று கொள்ளுவது? இவ்விரண்டும் வேறென்றதனுல் ஒன்றுக்கொன்றே ஒன்றேடொன்றே கலந்திருப்பதில்லை என்று யார்தான் கொள்ளுவார்கள்? ஏனென்றுல் இப்பொருள்களெல்லாம் எல்லா வாதிகளுக்கும் லக்ஷியமாயிருக்கின்றனவல்லவோ!

உயிரென்றென்று உடம்புக்கு வேருய் இல்லையென்ற வாதியைத்தவிர உண்டென்ற வாதியருள் யார்தான் அது உடலுக்குள் இல்லை என்று தைரியமாகச் சொல்லிப் பைத்தியக்காரப் பட்டத்தை ஏற்றுக்கொள்ளுவார்கள்? இங்ஙனமிருக்க இவைகளுக்கு மேலும், கடவுள் ஒருவர் அவசியம இருக்கவேண்டும் என்று நூலாலும் ஊகத்தாலும் கண்டவர்கள் அக்கடவுள் இவைகளுக்கு வேருய் மூன்ருவது பொருளாய் இருக்கின்ருர் என்றதனுல் இவைகளுக்குள்ளாக இருக்கின்ருர் என்று கொள்ளாதொழிவாரா?

எனவே, முப்பொருளும் உண்டென்பது யாவருக்கும் சம்மதமாயினும், இறைவனைப் போன்று தமக்கென இருப்புடையவைகளாய் மற்றவைகளும் இருக்கின்றன. ஆயினும், மனைவிக்குத் தனக்கென இருப்பிருந்தாலும் கருப்பந்தாங்குதல். பிரசவித்தல், வளர்த்தல் முதலிய செயல்களுக்கு கணவனது ஆதரவையும் உதவியையும் பெறுதல், அச்செயல் வளம் பெற நிகழ்வதற்கு ஏதுவாதல் போல, இறைவனைத் தாரகமாய் ஆச்ரயித்து அவனது ஆணையில் பசு, பாசங்கள் நிகழ்கின்றன என்பதுவே பொதுவாகப் பேதவாதிகள் அனைவரும் கொள்ளத்தகுந்ததும், கொள்ளுவதுமாகும்.

இந்தப் பேதவாதமானது ஒவ்வொரு பொருளும், (தத்துவங்களும்) இருக்கும் நிலையை நன்கு விளக்கி அவைகளின் நித்திய அநித்தியத் தன்மைகளையும், அவைகளால் உண்டா

கும், பிரயோஜனங்களையும், மக்கள் எவ்வகையில் அவைகளைப் பயன் படுத்திக்கொள்ளலாம் என்பதையும் எடுத்துக் காட்டி ஒவ்வொரு பொருள்களும் தத்தம் மரியாதையைக் கடவாது நன்மை, தீமை, மேல், கீழ், வாய்மை, பொய்மை, முதலிய ஒழுங்கு தவருது நடத்துவதற்கும், தகுதியுற்றதா இருக்கும். இதில் மூன்று பிரதான மதங்கள் உண்டு. அவைகள், **பேத அத்துவிதம்** என்றும், **சுத்த அத்துவிதம்** என்றும், **விசிஷ்ட அத்துவிதம்** என்றும் சொல்லப்படும்.

இதில் பேதாத்துவிதம் என்பது இது வரையும் கூறிவந்ததேயாகும். ஒவ்வொரு வாதிகளுக்கும், அவரவர்கள் சொல்லும் முறையில் வேறு வேருக முப்பொருள்களும் அமைந்திருக்கும் என்ற நியமம் இல்லை. ஒரு இடத்தில் இம் மூன்று பொருள்களும் இருக்கின்றன. இவை ஒரே இடத்திருப்பினும் ஒன்றற்கொன்று பொருட்டன்மையில் பேதமாகத்தான் இருக்கின்றன என்கின்ருர்கள் சிலர். இது தான் பேதாத்துவிதம் என்பது.

சுத்தாத்துவிதம் என்பது முப்பொருளும் ஓரிடத்திருப்பினும், கடவுள் வியாபகமாயும் பசு, பாசங்கள் வியாப்யமாயும் இருக்குமென்றும் அவைகள் வியாபக வியாப்யமாயினும், ஒன்ருெடொன்று கண்ணொளியும், கதிரொளியும் போலவும் விரவிக்கலந்து மிடைந்திருக்குமென்றும் கொள்ளப்படும். ஒருபொருளே குண குணிபாக வும், அவயவ அவயவிபாகவும் இரண்டுபட்டு நிற்பதுபோல இருபொருள்கள் அதுவதுவாய் தாதாத்மியப்பட்டு பொருட்பேதங்கெடாது ஒருபொருளெனத்தோன்றும் முறையில் பசு, பாசங்கள் பதிக்கடங்கி நிற்குமெனவும் கொள்ளப்படும். இங்ஙனமாக பொருளால் வேற்றுமையும், கலப்பால் ஒற்றுமையும், காணப்படுவது சுத்தாத்விதம் என்று சொல்லப்படும்.

இனி விசிஷ்டாத்துவிதத்திலும் பிரதான நூலான பிரம்ம சூத்திரத்திற்குப் பாஷியத்தோடு கூடிய மதங்கள் இரண்டுண்டு. ஒன்று வைணவ சம்பந்தமானதும், மற்றொன்று சைவ சம்பந்தமானதுமாகும். முதலது விசிஷ்டாத்துவிதம் என்னும் பெயராலேயே வழங்கப்படுகின்றது. இரண்டாவது விசிஷ்டாத்துவிதமேயாயினும் சிவாத்துவிதம் என்னும் பெயரால் வழங்கப்படுகிறது.

இவைகளில் ஒழுக்க வழக்கங்களிற் சிற்சில பேதங்களும், வாய்ப்பாடுகளில் சிற்சில பேதங்களுங் காணப்படும். இவைகளேயன்றி அடிப்படையான தத்துவ விஷயங்களிற் பெரும்பாலும் வேற்றுமை காணப்படமாட்டாது. இறைவன், பசு பாசங்கட்கு ஆகாரமாய் ஊடுருவி விசிஷ்டனுய் என்றும் ஒரே இயல்பாய் இருப்பானென்றும், பசுபாசங்கள் இரண்டும், உடலும் உயிரும், குணமும் குணியும்போல, இறைவனேடு விசேஷண விசிஷ்டமாய் என்றும் இருக்குமென்றும் கொள்ளப்படும். விசேஷண அம்சமான உலகும் உயிரும் பிரளய காலத்திற் சூக்குமமாய் இருக்குமென்றும், விசேஷ்யமான இறைவன் அப்பொழுதும் அவைகளோடு விசிஷ்டமாய் இருப்பான் என்றும், சூக்கும சித் சக்தி, ஜட சக்தி விசிஷ்டமாயுள்ள அவ்விறைவனே சிருஷ்டி காலத்தில் தூலமானசித் ஜட (அசித்) விசிஷ்டமாயுள்ள உலகமாகப் பரிணமிக்கின்முன் என்றும் கொள்ளப்படும், இவ்வாருகத் தூல சித் ஜடமாயுள்ள இந்தவுலகத்திற்குச் சூக்கும சித் ஜட விசிஷ்டமாயுள்ள இறைவனே முதற்காரணமாகின்முன் என்பது, அதன் சித்தாந்தமாகும். இது அனுபவத்திற்கும் யுக்திக்கும் ஒத்துக்கொள்ளும். ஏகதேச சுருதிகளுக்கும் ஒத்துக்கொள்ளும். அங்ஙனமாயினும் பிரதான சுருதிகளின் முடிந்த முடிபுக்குச் சிறிதளவு போதாததாயிருக்கும். மற்றப்படி சாதன சாத்தியங்கள்

முதலியனவாகச் சொல்லும் எல்லாச் சுருதிகளுக்கும் மிகவும் பொருத்த முடையதாயிருக்கும். என்றாலும், இருமொழி வேத முரசறைந்த பேரொலியாய்த் தலைநின்ற

'நின்னாவார் பிறரன்றி நீயேயானாய் நினைப்பவர்கள்
மனத்துக்கோர் வித்துமானாய்
மன்னானாய் மன்னவர்க்கோர முதமானாய் மறைநான்கு
மானாய் ஆறங்கமானாய்
பொன்னானாய் மணியானாய்ப் போகமானாய் பூமிமேல்
புகழ்தக்கபொருளே உன்னை
என்னானாய் எண்ணினல்லால் ஏழையேன் என்சொல்லி
ஏத்துகேனே'

என்பன போன்ற வாக்கியங்களில் உள்ள 'ஆனாய்' என்பதைத் திருத்தி 'ஆக்கினாய்' என்று தலை திருப்பவேண்டிய ஒருகாரியம் செய்யவேண்டி நேரிடும். இங்ஙனம் தலைநின்ற வடமொழி தென்மொழிச் சுருதிகளைத் தலைதிருப்பி விட்டால் பின்ன சத்காரியவாதத்திற்கு மற்ற சுருதி, யுக்தி, அனுபவங்கள் ஒன்றும் தலைமாறாமல் நேர்மையாகவே ஒத்துக்கொள்வன வாகும். சுருதிகளில் பெருவழக்காயுள்ள இதற்குப் பாதகமில் லாமல் பொருள் கொள்ளவேண்டுமென்றால் உலகுயிரிரண் டும், இறைவன் காரியங்கள். காரியம் காரணத்துக்கு வேறு அன்று எனக்கொண்டால், அதுவாக ஆதல் பொருத்தமுடை யதாய்த் தலைநின்ற சுருதியோடு எல்லாச் சுருதிகளும், யுக்தி, அனுபவங்களும், ஒரே முறையில் நேர்மையாக ஒத்துக்கொள் வனவாகும். இங்ஙனம், அனன்ய சத்காரிய வாதங்கொள்ளு மிடத்தும், முப்பொருள்களும் உண்டு. மேலும் பேதப் பொருள்கள் போல ஒன்றிற்கொன்று வேறாகவும் அனுபவிக் கப்படும். அப்படியே சகல பதார்த்தங்களும் அதத‌ற்குண்

டான மரியாதை கடவாமல் நேர்மையாக எல்லாவிதத்தாலும் விவகரிக்கப்படும். காரியத்தில் இவ்வெல்லாப் பேதங்களுரைப்பினும் காரணத்தில் சிறிதும் பொருட் பேதமில்லை, காரியகாரணங்களுக்கு ஒருபொருளாந்தன்மை இருத்தலினுல் என்க. தற்கால உலகானுபவத்திலும் பானைக்குள் கலசம் புகக் காண்கிருேமே ஒழிய, ஒரே காரணத்தின் காரியங்கள் என்று பானையைத்தூக்கிக் கலசத்துக்குள் புகவிடும் ஒரு மனிதனைக் காண்கிருேமில்லை யல்லவா? இங்ஙனம் காரியத்தில் மரியாதை கடவாது, வேறு வேருய் அனுபவிக்கப்படினும், காரணத்தில் ஒரே பொருளாயிருப்பது பொதுமக்கள் அனுபவமான விஷயம் அல்லவா? இங்ஙனம் கண் கூடான அனுபவம் முதல் தலைநின்ற சுருதி வரையும், நேர்மையாய் ஒத்துக்கொள்ளும், இம் முப்பொருளுக்கும் உண்டான ஒற்றுமையே இந்தக் காரிய காரண ஒற்றுமையான மேலான ஒற்றுமையாகும். இவ்வொன்ருலேதான் இறைவன் இவ்வெல்லாப்பொருளுமானுன் என்றும்

'ऐतदात्म्यमिदं सर्वम् । इत्याह हि परा श्रुतिः ।'

(ஐததாத்மியமிதம் ஸர்வம். இத்யாஹ ஹி பரா ச்ருதிஹி)

என்பனவெல்லாம் நேர்மையாகப் பொருள்படும். இதனுற்ருன் விசிஷ்டாத்துவித வாதங்களிரண்டும். உலகுயிர்களை விசேஷணமாக வைத்து இறைவனை விசேஷ்யமாகக் கொண்டு பிரளயத்தில் சூக்கும சித் சக்தி, ஜடசக்தி விசிஷ்டமாயுள்ள பரமாத்துமா சிருஷ்டி காலத்தில் தூல சித் சக்தி, ஜட சக்தி விசிஷ்டமாயுள்ள உலகமாக ஆகின்ருன் எனக் கூறுகின்றன. இங்ஙனம் விசேஷண விசிஷ்டமாகவாவது தலை நின்ற சுருதிகளுக்கு விரோத மில்லாமலும், மற்ற சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு மாறு கொள்ளாமலும் விவகார சித்திக்குப் பொருத்தமாகவும் கூறும் இது சாலச் சிறந்ததாகும். ஆயினும், குண குணியும், உடலுயிரும் போன்று விசிட்டமென்ற

மையால் உவமானத்திலுள்ள விசேஷணும் சமான உபமேயப் பொருள்களாயுள்ள உலகுயிர்களுக்கு எந்த அளவுதர்மத்தில் சமானத்தன்மைகொண்டு விசேஷணமாகக் கருதப்படுகின்றதோ அந்தக் கருத்திலுள்ள விசேஷ்ய விசேஷணங்களுக்குண்டான அவ்வளவு பேதங்கூட பரமாத்துவிதத்தில் இல்லை என்பதுதான் இங்கு (வெளிப்படையாகச்) சொல்லவிரும்புவது. ஏனென்றால் முப்பொருளொற்றுமைக்கு விசிட்டாத்துவிதம் இரண்டிலும் பழுதைப் பாம்புபோன்ற திருட்டாந்தங்கள் கொடுக்கப்படவில்லை. இதிலிருந்தே அத்தியாச வாதம் தங்களுக்கு இஷ்டமில்லையென்பது தெளிவாகின்றது. சொல்லியே தீரவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் இல்லாத இடங்களிலெல்லாம் உடலுயிர் குண குணி முதலிய இவைகளே எடுத்துக்காட்டாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இங்ஙனமன்றி

'மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்துள் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்துள் மறைந்தது பார்முதல் பூதம்
பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னுள் மறைந்தது பொன்னணி பூடணம்'

என்பன போன்ற உதாரணங்கள் உதாகரிக்கப் படவில்லை. இதிலிருந்து கண்ணொளியும், கதிரொளியும்போலவும் பாலும் நீரும் போலவும், உடலும் உயிரும் போலவும் நீக்கமற நிறைந்து மிடைந்து இருந்தாலும் விசேஷண அம்சமான உலகுயிர்களுக்குத் தனக்கென இருப்பிருக்கும் என்று கொள்ளப்படும் எனத் தெரிகின்றது. இறைவன் இவ்வெல்லாமாக ஆனான் என்ற சுருதியால் விசேஷணும் சத்துக்குண்டான அந்த இருப்பும் சொரூபமும், காரணமான இறைவனுடையதேயாகும். இதுதான் விசிட்டாத்துவிதத்திற்கும் பரமாத்துவிதத்திற்கும்

உள்ள பேதமாகும். உபய காரணன் இறைவன் என்னுமள வில் இரண்டும் ஒன்றேயாகும்.

**கேவலாத்துவிதம்—**

இக்கொள்கையிலும் முப்பொருள்களும் உண்டு. ஆனால் இவற்றில் இறைவன் ஒருவனே என்றும் ஒரே இயல்பாயுள்ள சச்சிதானந்த சொரூபமான பொருளாகும். இப்பொருள் [1]சுஜாதி, [2]விஜாதி, [3]சுவஹத பேதமில்லாதது. மற்றவிரண்டும் இதுபோல உள்பொருள்களல்ல, வெறும்தோற்ற மாத்திரமா யுள்ள அநிர்வசனீயப் பொருள்களாகும். இவைபோலவே, இறைவனாகிய பிரமப்பொருளைத்தவிர அதற்குப் பிரதிநிதி யாக ஈசுவரன் என்பதும் ஒன்று உலக உயிர்களோடு உண்டு. இம்மூன்றுமே உள்பொருளென்றும், இல்பொருளென்றும், சொல்வதற்கில்லாமல், இவ்விரண்டுக்கும் வேறாக இப்படித் தான் என்று சொல்வதற்கில்லாத தோற்றமாத்திரமாயுள்ள பொருள்கள் என்று கொள்ளப்படும். இவைகளின் தோற்றம்

---

1. சுஜாதி பேதம் என்பது தனது சாதியால் பொருள்க ளுக்கு வரும் பேதமாகும். அதாவது ஒரே ஜாதியில் உள்ள பொருள்களில் ஒன்றற்கொன்றுள்ள பேதமாகும். இது தென்னைமரத்திற்கு பிறிதோர் தென்னைமரத்தோடும், தர்ம னுக்கும் பீமனுக்கும் உண்டான பேதம் போன்றது.

2. விஜாதி பேதமாவது வெவ்வேறு ஜாதிப் பொருள்க ளுக்கு ஒன்றோடொன்றுள்ள பேதமாகும். மனிதனுக்கும் மாட்டிற்கும் மாட்டிற்கும், எருமைக்கும் உண்டான பேதம் போல்வதாம்.

3. சுவஹத பேதமாவது ஒரே பொருளில் உள்ள உட்பேத மாகும். இது மரத்திற்குப் பட்டை, வேர், கிளை, தழை, முதலியனவும், உடம்புக்குத் தோல், எலும்பு, விரல், நகம், முதலியனவும் பேதம் போல்வதாம்.

கயிற்றரவு, கிளிஞ்சல் வெள்ளி முதலியவைகளின் தோற்றம் போன்றதென்று உதாகரிக்கப்படும். இவற்றுள்ளும் அவாந்தரயான அநேக மதங்கள் உண்டு. அவைகள் ஆபாசவாதம், அவச்சேதவாதம், பிம்பப் பிரதிபிம்பவாதம், திருஷ்டி சிருஷ்டி வாதம் முதலியனவாகச் சொல்லப்படும்.

இவற்றுளெல்லாம் திருஷ்டி சிருஷ்டிவாதம்தான் முடிந்த சித்தாந்தக்கொள்கையாகும்.

மற்றதும் இதை அடிப்படையாகக்கொண்டதுபோலவே இருக்கும். இக்கொள்கையானது எப்பொழுது எது விஷயமாகப் பார்வையுண்டாகின்றதோ, அப்பொழுதுதான் அந்த விஷயம் உற்பத்தியாகித் தோன்றுகின்றது. அதற்குமுன் அப்பொருள் இல்லை. ஞானத்தோடு சமகாலமாக விஷயம் தோன்றுகின்றது. அதற்கு முன்னும், அப்படியே பின்னும், பொருள் இருக்கின்றதில்லை. இது கயிற்றில் பாம்பென்று அறிவதற்கு முன்னும், அந்த அறிவு நீங்கியபின்னும், பாம்பு இல்லாதது போல, என்று கொள்ளப்படும். இதையே இன்னும் கொஞ்சம் ஊன்றிப் பேசுவோமேயானால் விஷயங்களெல்லாம் ஞானதீனங்களாயின எனவாகும். ஆனால் ஞானமும், ஞாதுருவும் எப்படி சிருஷ்டிக்கப்படுகின்றன? என்று கேட்டால் அப்பொழுது திருஷ்டியினால் பொருள்கள் சிருஷ்டிக்கப் படவில்லை; காண்பான், காட்சி, காணப்படும் பொருள் மூன்றுமே ஒரே காலத்தில் அவித்தையின் கலக்கத்தால் அதன் பரிணாமமாகத் தோன்றுகின்றன. அங்கு அவைகளைப் பரிணமித்த அவித்தைக்கு ஆதாரமாயிருந்த கடவுள் சொரூபம் அப்பொருள்களை விளக்குகின்றது. அதாவது அங்கு, திரிபுடிகள் சாக்ஷி பாஷ்யங்கள் என்று சொல்லப்படும். ஆதலால் பிரமாணத்தால் பிரமேயம் உண்டாகவுமில்லை. விளங்கவுமில்லை. மேலும் பொருள்களை விஷயஞ் செய்வதாய் ஒன்றும்

பிரமாணமாவதுமில்லை. அதாவது— கண்பார்வை, குடம் கர்த்தா, மூன்றும் ஒரேகாலத்துண்டான பொருள்கள். ஞானத்துக்குமுன் ஞாதாவும் விடயமும் இல்லை. ஆதலால் விஷயானுசாரமாக ஞாதாவினிடத்தில் ஞான முண்டாகின்றதென்பதில்லை. ஏனென்றால் எப்பொழுது குடம் தோன்றுகின்றதோ அதே சமயத்தில் அதனறிவும் அதையறிந்தவனும் தோன்றுகிறார்கள். ஆதலால் முன் பின் கால வித்தியாசமின்மையால் ஒன்றற்கொன்று காரண காரியமாகின்றதில்லை. குடப்பிரத்தியக்ஷத்திற்குக் குடமும் கண்ணும் காரணமென்பதில்லை.

இது அநுபவ விரோதமில்லையா என்றால் அல்ல:— ஒரு மாயாவி பூ, பிஞ்சு, தழைகளோடுகூடிய ஒரு மாமரத்தினைக் காண்பிப்பானேயானால், அதில் மரம், கிளை, தழை, பூ, பிஞ்சு, முதலியவைகளுக்கு காரிய காரணத்தன்மை இருப்பது போலக் காணப்படினும் அங்கு அவைகளுக்கு அவைகள் (காரிய காரணங்கள்) எவ்வாறு இல்லையோ அதுபோலவும், சொப்பன பதார்த்தங்களில் பாட்டன், தகப்பன், மகன், பேரன் முதலிய பாகுபாடுகளும், கன்று, கறவை முதலிய பாகுபாடுகளும் தோன்றினும் அவைகள் எல்லாம் ஒரே சமயத்தில் தோன்றுகின்றவைகளாகவே இருக்கின்றன. அல்பகால சொப்பனப் பொருள்களாயினும், ஒன்றற்கொன்று இருபது, முப்பது, வருட வித்தியாசங்களும் காரிய காரண முறைமைகளும் தோன்றுகின்றன. அதுபோலவே நீண்ட கனவான இந்த நனவிலுள்ள பதார்த்தங்களும் தோன்றலாம் எனவும் அநுபவம் பொருந்துமாறு ஊகங்களும் சொல்லப் படுகின்றன. ஆதலால் கனவுபோல இவ்வெல்லாப் பிரபஞ்சப் பொருள்களும் காரிய காரணக் கிரமமில்லாத மாயக் கூத்தும், சாக்ஷிபாஷ்யமுமேயாகும் என்று கொள்ளப் படும். இம் மதமும் சுருதியுக்திகளுக்கும் ஓரளவுக்கு அநுப

வத்திற்கும் ஒத்துக்கொள்ளும் என்றாலும் தலைநின்ற சுருதிகளின் பிரதான வாக்கியங்களுக்கு ஓரளவுக்குப் போதாததாயிருக்கும். அது எங்ஙனமெனில், பின் வருமாறு:—

**ப்ரம்ம சூத்திர விசாரம்—**

சுருதி விரோதந்தீர்த்து சித்தாந்தஞ் சொல்ல வந்த பகவானாகிய வேதவியாச முனியானவர் ப்ரம்ம சூத்திர ஆரம்பத்தில் கடவுளை நிச்சயஞ் செய்யவந்த இரண்டாவது சூத்திரமாவது— "ஜன்மாத்யஸ்ய யத:" (**जन्माद्यस्य यतः**) [காணப்படுகின்ற இந்த உலகத்திற்குப் பிறப்பு முதலியவைகள் எதினின்றுமோ அது கடவுளாகும்] என்பதாம்.

ஜன்மம், பிறப்பு, உண்டாதல், பரிணமித்தல், தோன்றல் முதலியன ஒரு பொருட் சொற்களாகும். இந்தத் தொழிலை ஆச்ரயமாகக்கொண்ட எழுவாய்ப்பொருள் எந்தப் பொருளை முதற்காரணமாகக்கொண்டு உண்டாகின்றதோ அந்தப் பொருளினின்றும் அது பிறந்தது, உண்டாயிற்று, ஜனித்தது, பரிணமித்தது, தோன்றிற்று என்று விவரிக்கப்படும். இத்தகைய உபாதானமான இடங்களில்தான் காரணம் காரியமாகவாயிற்று என்ற விவகாரம் நேர்மையாகப் பொருந்தும். அது மண் குடமாயிற்று, பொன் பணியாயிற்று என்பது போலவாம். அங்ஙனமின்றி நிமித்த மாத்திரமாயுள்ள காரணம் காரியமாகவாயிற்றென்பது கூடாது. அது குயவன் குடமானான், தச்சன் வீடானான் என்னும் விவகாரம் கூடாதது போலவாம்.

ஈண்டு "எப்பொருளினின்றும் உலகத்துக்குப் பிறப்பு முதலியவைகள்" என்றதனால் பிறப்பு, இருப்பு, இறப்பு மூன்றும் கொள்ளப்படுகின்றன. இம்மூன்றும், நிமித்த காரணத்தினால் ஒரு பொருளுக்கு நிகழக் காண்பதாலும்,—

(அதாவது— குடத்தை உண்டாக்கியவன் தன் வீட்டிலேயே சிலநாட்பாதுகாத்து வைத்திருந்து ஒருநாள் எடுத்து உடைத்து விடுவானுனல் அதன் உற்பத்தி,ஸ்திதி, நாசங்கள் அந்தநிமித்த காரணனுலேயே நிகழ்கின்றன) 'எதினின்றும்' என்னும் ஐந்தாம் வேற்றுமை, நிமித்த காரணப்பொருளில்வரும் என்று இலக்கண விதி இருப்பதினுலும், எப்பொருளினின்றும் என்று வேதவியாசர் கூறியது நிமித்தகாரணனுன இறைவனைத்தான் குறிக்கும் என்பது சாலப்பொருந்துமே எனின்? அற்றன்று. பாணிநி முனிவர் ஐந்தாம் வேற்றுமைக்கு, நீக்கப்பொருள், நிமித்தப்பொருள் முதலியனவாகப் பல சொல்லி மீண்டும் முதற்காரணப் பொருளினின்றும் ஐந்தாம்வேற்றுமை வருமென்று இதற்கெனத் தனித்தும் ஒரு சூத்திரம் செய்திருக்கின்ருர். அது 'ஜநிகர்த்து: ப்ரக்ருதி:' (**जनिकर्तुः प्रकृतिः**) என்பது. பிறக்கும் பொருளுக்கு முதற்காரணமாய் இருப்பதினின்றும் ஐந்தாம் வேற்றுமை வரும் என்பது அதன் பொருளாகும். வியாச சூத்திரத்தில் உலகத்திற்குப் பிறப்பு முதலியவைகளுக்கு கடவுள் காரணம் என்ருர். பாணிநி முநிவர் பிறக்கும் பொருளுக்கு உபாதான காரணத்தினின்றும் ஐந்தாம் வேற்றுமை வரும் என்ருர். இவ்வேற்றுமையினுலும், நிமித்த காரணத்தினிடத்தில் பிறத்தலும் திதியும், ஒடுக்கமும், பொருந்தாமையினுலும் நிமித்தகாரணன், காரியத்தின் உற்பத்திக்குப்போல அதன் நாசத்துக்கும் நிமித்தமாவானேயன்றி உபாதானமாகமாட்டான். தவிரவும், உற்பத்தியான பொருளில்தான் ஒடுக்கமும் காணப்படுவதாலும் இறைவன் உலகத்திற்கு உபாதான காரணனேயாவான். இது தைத்திரீய உபநிஷத்திலும்— 'யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே. ஏன ஜாதாநி ஜீவந்தி. யத் பிரயந்தி அபிசம் விசந்தி. தத் விஜிக்ஞாஸஸ்வ. தத்ப்ரம்ம' (**यतो वा इमानि भूतानि जायन्ते । येन**

जातानि जीवन्ति। यत्प्रयन्त्यभिसं विशन्ति। तद्विजिज्ञासस्व। तद्ब्रह्म)
[எப்பொருளினின்றும் இந்த உலக உயிர்கள் உண்டாகின்றனவோ, எதனுல் இவைகள் நிலை பெறுகின்றனவோ, எதில் ஒடுங்குகின்றனவோ, அதை அறிவாயாக. அதுதான் பெரும் பொருள்] எனப் பிறப்பாதி மூன்றும் இறைவனிடத்தினின்றே என கூறப்பட்டிருப்பதினுலும் 'யத்பூதயோநிம் பரிபச்யந்தி தீரா:' (यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः। ) என பூதங்களுக்கு யோனி என்று உபாதான காரண வாசகம் காணப்படுகின்றமையினுலும், உலகத்துக்குக்காரணன் உபயகாரணனேயாம் என்பது தெளியப் பெற்ரும்.

இனி 'ஸோ அகாமயத பகுஸ்யாம் ப்ரஜாயேய'
(सोऽकामयत बहुस्यां प्रजायेय )
[அவன் எல்லாமாக ஆவேன் என விரும்பினுன்] என்றதாலும் 'தத் ஐக்ஷத பகுஸ்யாம் ப்ரஜாயேய' (तदैक्षत बहुस्यां प्रजायेय।)
[அது எல்லாமாவோமென பார்த்தது] என்றதாலும் இறைவன் ஜகத்தாக ஆகுந்தன்மை கேட்கப்படுகின்றது. எங்கு காரணமாக எது ஆகின்றதோ அதனது இருப்பு முழுவதும் அதற்கு உண்டு என்பது நியமமாகும். மேலும் பரிணும காரியத்தில் காரணத்தின் இருப்பு முழுவதும் காரியத்திற்கு உண்டு. மண்ணினது இருப்பு முழுவதும் குடத்திலிருப்பதைக் காண்கின்ருேமல்லவா! அதுபோல ஆண்டவனது இருப்புமுழுவதும் உலகத்துக்குண்டு. ஆகவே, காரணத்தின் இருப்புச் சிறிதளவாவது காரியத்திற்குண்டு, ஆனுலும் அது பூரணமாய் காரியத்திற்கு இல்லை என்பதற்கும் இல்லை. மண்ணுக்கும், பொன்னுக்கும் உண்டான நிறம், உறை, கனம் முதலியன யாவும், குடத்திற்கும், விக்கிரஹத்திற்கும் உண்டு. இதனுல்தான் மக்கள் அந்த காரணத்தைக்காட்டிலும் காரியங்களுக்கு அதிக

விலை கொடுத்து வாங்கி அனுபவிக்கிருர்கள். இங்ஙனமின்றி வெறும் ஆபாஸமாய் தோற்றமாத்திரம் இருக்குமாயின் இது கூடாததாகும்.

சிருட்டி காலத்துண்டான இந்த மண்ணுதி பூதங்கள் இந்த நாமரூபத்தோடு காரணமான பரமேசுவர ஸ்வரூபமாகவே பிரளய பரியந்தமிருக்கும். பிரளயகாலத்தில்தான் நாம ரூபமொழிந்து கடவுள் வடிவமாயிருக்கும். தெறியாத சிறுபிள்ளைக்குமாத்திரம் இல்லை. தெறிந்து செய்தவனுக்குந் தான் உடையும் வரையும் குடமாகவிருக்கும்.

இறைவன் இவ்வெல்லாமாக ஆவோம் என்று ஆனபின்னர், மீண்டும் யார் அதை அல்லவென்று சொல்லுவது? 'நீர் இவ்வெல்லாப் பொருளுமாவதானல் விகாரப்பட்டுக் கெட்டுப்போவீர். வேறென்றே இவ் எல்லாமாக ஆகட்டும். நீர் இருந்தபடியே சும்மா இரும்' என்று அவருக்கு சொல்லுவது யார்? அங்ஙனம் சொல்லுவதற்காக எல்லாமாக ஆவதற்கு அவரைத்தவிற வேறு பொருள் ஏது? அங்ஙனம் வேறு பொருளிருக்குமாணல் அப்பொழுது அதுவே மக்கட்கு கடவுளாகட்டுமே! எது எல்லாவாகவாயிற்றே அதையன்றே கடவுள் என்று முரசறைந்தார்கள் நாவரசு முனிவனும் நான்மறை முனிவனும். நான்மறை முனிவன், இறைவன் எவ்வாறு இவ்விகார வடிவங்களாக ஆனுன் என்று சங்கித்துக் கொண்டு பிரகிருதி அதிகரணத்தில் (முதற்காரண அதிகரணத்தில்) 'ஆத்மகிருதே: பரிணுமாத்' (आत्मकृतेः परिणामात्) [தன்னைச் செய்வதினுல் பரிணமிப்பதனுல்] என்னும் சூத்திரத்தால் சமாதானம் கூறுகின்ருர். அதாவது—

'ததாத்மானம் ஸ்வயமகுருத' (तदात्मानं स्वयमकुरुत ।)

['அது தன்னைத்தானே உலகமாகச் செய்தது'] என்ற தலை

நின்ற சுருதியால் இறைவன் இவ்வெல்லாப் பொருளுமாக பரிணமிக்கின்றான் என்று கொள்ளவேண்டும், என அருளிச் செய்கின்றார்.

நாவரசு முனிவனும் 'நின்னுவார் பிறர் அன்றி நீயே யானாய்' என்று தலைநின்ற சித்தாந்தத்தைச் சொல்லி, அது **பரமாத்துவிதம்** ஆகுமாறு மீண்டும், 'மன்னனாய் மன்னவர்க்கோரமுதமானாய்; பொன்னானாய் மணியானாய்ப் போகமானாய்' எனத் திருவாய் மலர்ந்து, மேலும், அவனது காரிய அனன்யமாயுள்ள பரமாத்துவா நிலையைக்கண்டு ஆச்சரிய முற்று அவன் இவ்வாறு இயல்பாயிருப்பதைத் தவிற இனி வேறு எதைச்சொல்வது என்று 'என்னானாய் என்னானாய் என்னினல்லால் ஏழையேன் என்சொல்லி ஏத்துவேனே' என்றும் தமது செங்கோலை செலுத்தியருளினார். இதனாலும் 'அவன் நிர்விகாரியாயிருந்தும் எல்லாமாகப் பரிணமித்திருக்கின்றான்' என்பது நன்கு விளங்குகின்றது. இது உலகானுபவத்தாலும் கண்கூடான விஷயமாகும். தங்கம் தனது இயல்புமாறிச் செம்பானாலும் அல்லது இரும்பு மண்ணானாலும் அல்லது மாற்றுக் குறைந்தாலும் விகாரமடைந்தது என்னலாம். பத்தரை மாற்றுத் தங்கம் காரியப்படினும் சிறிதும் மாற்றுக் குறையாது இன்னும் அதிகமாக சுடர்விட்டு ஒளிருமாகின் அது கடகமானால் தான் என்ன? அல்லது மோதிர மகுடமானால் தான் என்ன ? இதனால் அதை விகாரி என்று எவ்வாறு கூறுவது ? இப்பொருளை நமது தமிழ்த் தனித்தாய் ஒளவையார் அம்மையும் "பொன்னின் குடமழிந்தால் பொன்னாகும், என்னாகும் மண்ணின் குடமுடைந்தக்கால்'' எனக் காரிய முடைந்த விடத்தும் காரணத்திற்குக் குற்றமில்லை. அது முன்போலப் பொன்னாகவே யிருக்கின்றது என்று கூறுகின்றார்.

**நிர்விகாரத்வ நிரூபணம்:—**

ஈண்டு, குடமென்பது மட்குடம், பொற்குடமிரண்டிற்கும் சமானமாயினும் உடைந்தும் காரண சொரூபமாக இருக்கின்றது என்பதும் அப்படியேயாயினும் மீண்டும் அது அங்ஙனம் காரியப்படுவதிலுள்ள வேற்றுமையே இங்கு ஔவைப்பிராட்டியாரால் காட்டப்பட்டுள்ளது. இவ்வாறு ஜடபதார்த்தங்கட்குள்ளேயே இவ்வளவு ஒற்றுமை காணப்படுகின்றன. மேலும் தங்கம் காரியமாக விகாரப்படும்பொழுதும் தனது மாற்றும், மதிப்பும், இயல்பும், கெடாத நிர்விகாரியாகவே இருக்கின்றது. மண்ணுகவோ செம்பாகவோ மாற்றும் மதிப்பும் குறையும்படியான விகாரரூபத்தை யடைகின்றதில்லை. இது மட்குடமுதலியவற்றிற்கும பொருந்தும்.

இப்படி இந்தக் கீழான ஜடப்பொருளுக்குண்டான விகாரப்பட்டும் இயல்பு மாருத நிர்விகாரியாயிருக்கும் தன்மையானது இதன் பரம முதற்காரணமான பரப்ரம்மத்திற்குண்டான உலகமாக விகாரப்பட்டும் நிர்விகாரியாயிருக்குந் தன்மைக்கு அடையாளமாக ஆகின்றதல்லவா?

இதனுல் மண்ணும் பொன்னும் காரியப்படினும் தனது இயல்பு கெடாதிருக்கும்பொழுது, அதை விகாரியென்று சொல்வதற்கில்லை. இயல்புகெட்ட பொருள்களை அவ்வாறு சொல்லலாம் என்பது ஆகின்றது. ஆகையால் இத்தகைய காரியங்களில் காரணத்தினியல்பு கெடாமையினுலே காரணத்தை விகாரி என்று சொல்லுவதற்கில்லை என்பது நிச்சயமாகின்றது.

ஆகவே இறைவன் உலகமாக ஆவதற்கு இத்தகைய உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதனையே நல்ல பொருளாகக்கொண்டு ப்ரம்ம சூத்திரக்காரரும் முதல் அத்தி

யாயத்தின் தலைப்பில் உலகத்திற்கு பிறப்பு முதலியவைகள் எப்பொருளிலின்றும் என்று எடுத்து அதற்குப் பொருத்த மாக அத்தியாயத்தின் இறுதியில் இந்த எடுத்துக்காட்டுக்களை யெல்லாம் ஞாபகப்படுத்தி யிருக்கின்றார். இதை அம்மை யாரும் "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்றார். இங்கு மேன்மையாவது பரமாத்துமாவின் பலகோடி கூறுபாடு களில் ஒன்று. அதைப் பெற்றவர்களே மேன்மக்கள் என்பது வெளிப்படை. இதை பகவத்கிதை 10வது அத்தியாயம் 41 வது ச்லோகமும் கூறுகின்றது. இத்தகைய மக்கள் கெட்டா லும் தங்களது இயல்பான மேன்மக்கட் தன்மை கெடுகின்ற தில்லையாம். இங்ஙனம் அம்சமான மேன்மக்கள் கெட்டா லும் கெடுகின்றதில்லை யென்று தமது வாக்கால் சொல்லி, அம்சியான பரமாத்மா காரியப்பட்டுக் கெட்டாலும் ஒரு பொழுதும் விகாரியாய்க் கெடமாட்டான் என்பதைச் சொல் லாமல் சொல்லுகின்றார் அல்லவா! மூவாது மூத்த பெரியார்.

பாதராயணரான வியாச மஹரிஷியானவர் முதலாவது அத்தியாயம் நாலாவது பாதம் இயற்றயல் அதிகரணத்தில்

"பிரகிருதி: பிரதிக்ஞா திருஷ்டாந்தாநுபரோதாத்"

(प्रकृतिः प्रतिज्ञा दृष्टान्तानुपरोधात्)

[சுருதியில் பிரதிக்ஞை செய்திருப்பதனாலும் உதாரணம் கொடுக்கப்பட்டிருப்பதனாலும்] எனச் சொல்லுவதிலுள்ள திருஷ்டாந்தங்கள் என்னவென்றால்:— மண் - குடமும், இரு ம்பு - கத்தியும், பொன் - பணியுமாகும். இவை இறை வனுக்கும் உலகத்திற்கும் பொருத்தமான எடுத்துக்காட்டுக் களாம். இவைகள் மேன்மக்களால் புகழப்பட்ட சாமவேதத் தின் சாந்தோக்ய உபநிஷத்தில் கொடுக்கப்பட்டவைகளாகும்.

இங்கு கொடுக்கப்பட்ட உதாரணங்களெல்லாம் 'பால் தயிராகுவதுபோன்ற காரணத்தின் இயல்பு மாறிப்போகின்ற பரிணமப்பொருள்களும் அல்ல, பழுதை—பாம்பு, கிளிஞ்சல்-வெள்ளி, போன்ற காரியத்திற்கு இருப்பு இல்லாத பொய்ப் பொருள்களுமல்ல. இதிலிருந்து காரணத்தைக் கெடுக்கின்ற பரிணமமுமன்று, காரியத்தைக் கெடுக்கின்ற (நிரூபிக்காத) விவர்த்தமுமன்று என்பதும், இதனுல் காரியப்படினும் விகாரமடையாதது ப்ரம்மம் என்பதும், காரியங்கட்கு இருப்பிருக்கினும் அவைகள் பின்ன இருப்புடையன அல்லவென்பதும், காரணத்தைத்தவிர வேருகாமையினுலே அவைகள் பொய்ப் பொருள்கள் அல்லவென்பதும் நன்கு விளங்குகின்றது. இது அப்பொருளினது இயல்பாகும். அஞ்ஞானியானவன் கருமத்தை மெதுவாகச் செய்யினும் பற்றிக்கொள்ளுகிறது. அறிஞன் அஞ்ஞானியைவிட அதை அழுத்தம் திருத்தமாகச் செய்யினும சிறிதும் பற்றுகின்றதில்லை. அறியாதவன் மெய் பேசியும் பொய்யனுகின்ருன். அறிந்தவனே பொய் பேசியும் மெய்யனுகின்ருன் என்பதையும், உதாரணப் பொருள்களும் அவ்வாறிருக்கின்றன என்பதையும் 'பொன்னின் குடமுடைந்தால் பொன்னுகும்' 'பொய்மையும் வாய்மையிடத்த' என்பதையும், 'இறைவன் தன்னை உலகமாகச் செய்தான்' என்பதையும் தமிழ்மறைக் குமரனும் கிழவனும் இதை உள்ளவாறு கண்டு தமது நாவாம் எழுத்தாணியால் வானவெளிப் பொன்மேருவில் உலகமுள்ளவும் அதற்கப்பாலும் அழியாதவாறு இவ்வெல்லாமாக இறைவனுனன் என்று எழுதியுள்ளதை இமையாப்புலனுல் கண்டபின்னராவது, சர்வக்ஞனும் சர்வசக்திமானுமான, இறைவன், உலகுயிராய்க் காரியப்பட்டும், நிர்விகாரியாயிருக்கின்ருன் என்பது வெட்டவெளியான விஷயமல்லவா? இதைக் கேட்டும் சொல்லியும் தெரிந்து கொள்ளவேண்டும் என்பது இல்லை.

இப்படியிருக்க உலகத்திற்கு இறைவன் நிமித்த காரணன், என்று கூறும் பொருட்பேத வாதியரும், உலகம் மித்யாபதார்த்தம் என்று கூறும் கேவலாத்துவித வாதியரும், நிர்விகாரி என்னும் சுருதிக்கு விகாரம் வரக்கூடாது என்று பயந்து பிரதிக்ஞா திருஷ்டாந்த சுருதிகளைக்கூட கவனிக்காமலும், 'பரிணமிப்பதினுல்' என்னும் வியாசசூத்திரத்தைக் கூட சிந்தித்துப்பாராமலும், 'பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம், பொன்னுள் மறைந்தது பொன்னணி பூடணம்' என்பன முதலிய சுருதிகளையும் அங்ஙனம் விடுத்தும், பொருள்பேத வாதத்திலேயும், பொருள் மித்யா வாதத்திலேயுமே, நிலைத்து நின்ருர்கள் எனத் தெரிகின்றது. இதை அவர்கள் வாக்காலும் சொல்லுகிருர்கள் — 'உலக காரியத்திற்கு இறைவனை முதற் காரணமாகக் கொண்டால் இறைவன் விகாரப்பட்டு நிர்விகாரி என்னும் சுருதிக்கு முரணுகும்' என்று.

இதனுற்ருன் ஒருவர் சத்தியமான மாயை உலகத்திற்கு பரிணும உபாதான காரணமென்றும், மற்ற ஒருவர் மித்யையான மாயை ஜகத்திற்கு பரிணும உபாதானகாரணமென்றும் கொள்ளுகிருர்கள். மாயை சத்திய பதார்த்தம் மித்யா பதார்த்தம் என்னுமளவில் இருவருக்கும் பேதமிருந்தாலும், உலகத்திற்கு மாயை முதற்காரணமென்பதில், இருவருக்கும் பேதமில்லை. இனித் தங்கள் கொள்கைக்குத் தக்கபடி உலகப் பொருள்களையும் உபாதானகாரண அனுசாரமாக சத்தியப் பொருள்கள் என்றும் பொய்ப்பொருள்கள் என்றும் கொள்ளுகிருர்கள். இதனுல் இவர்கள் பரமாத்துமாவினிடத்தில், விகாரம் வந்துவிடுமோ என பயந்தவர்கள் என்று தெரிகின்றதல்லவா?

மேலும் இங்ஙனம் பயப்பட்டதுபோல 'நின்னுவார் பிற ரன்றி நீயேயானுய்' என்று அப்பர் சுவாமிகள் கூறினர். இது தங்கமானது தங்கமன்றி வேருென்ருகாதது போலவாம். ஆயினும் இரும்போ, செம்போ, தங்கமாகாவிடினும் தங்க மானது காப்பு, மோதிரம், கடகங்களாக ஆகின்றதல்லவா? இதனுல் சில மேலான நல்ல பொருள்கள், தான் ஒன்ருல் அமையாவிடினும் தான் ஒன்ருக அமையும் என்பது பெறப் படுகின்றது. இதை ஜீவாதாரமான மூலப்பொருள்களைப் பிறரிடத்துச் சிறிதும் ஏற்காது பூமிதேவியினிடத்து வருந்தி எடுத்து'வேண்டுவார்க்கு வேண்டுவன அளிக்கும் ஆண்டவன்' போன்று உண்பார்க்கு உண்ணுமளவளிக்கும் விவசாயிகளி டத்துங் காண்கின்ருேமல்லவா? அதுவும் தனதியல்பைக் கெடுக்காது தன்னை வளப்படுத்தும் ஒன்ருக அமையும் என பதூஉம் துணியப்படுகின்றது. இதனுலேதான் மீண்டும் பயம் நீங்கியதுபோல 'வேருென்று இறைவனுவது இல்லாவி டினும் இறைவன் இவ்வெல்லாமாக ஆகலாம். இதற்கோர் ஐயமுமில்லை' என்று 'பொன்னுனைய் மணியானுய் போகமா னுய்' என்றும் மீண்டும் சிறிதும் பயமின்றி 'மறிகடலும், குல வரையும், மண்ணும் விண்ணும், திருந்தொளிய தாரகைகள் திசைகள் எட்டும் திரிசுடர்கள் ஓரிரண்டும்' என்றும் இப்ப டியே இறைவன் ஆன பொருள்கள் ஒவ்வொன்றையும் சொல் லித்தொலையாது; ஆயினும் ஒருவாறு சொல்லுகின்றேன் என்று 'பிறவும் ஆய பெருந்தகையை' என்றும் 'என்னுனைய் என்னுனைய் என்னினல்லால் ஏழையேன் என்சொல்லி ஏத்து கேனே' என்றும் தைரியமாகக் கூறியிருக்கின்ருர்.

இங்ஙனம் அந்த புனிதமான இறைவன் (நாராயணன்) எல்லாமாக ஆகின்ருன் என்ருல் மகாபாவிகளைத் தள்ளும் அசுத்தமான கொடிய நரகம் என்கிருர்களே! அதுவும்

கூடவா? என்னும் ஐயமுண்டாக இந்த ஐயத்தை நீக்கும் பொருட்டு நம் ஆழ்வார்கள் சிறிதும் அச்சமின்றி, அந்த நரக மாக ஆனவனும் அவன் தான் என்ற பதில் சொல்லுவார்போல் இறைவனை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்கள்—

'யானும் நீதானே யாவையும் மெய்யே அருநரகவையும் நீயானல்'

என்று பொருளுள்ளவாறு கண்டு சொல்லுகின்றவர்கட்கு பொருளுள்ளவாறு சொல்வதில் யாது பயமுள்ளது? மேலும் கரும்புக்கட்டியால் (பாகால்) ஒரு விக்கிரஹம் செய்யப்படுமா யின் அதன் முகப்பாகம் இனிக்கும், அதன் குதப்பாகம் கச க்கும், அல்லது புளிக்கும் என்பதுண்டோ? தங்க விக்ர ஹத்தில் தலைப்பாகத்துக்கு உண்டான மாற்றில் கால் பாகத் திற்கு குறைந்திருக்குமோ? காரணகாரிய ஞானியானவன் இதற்கெல்லாம் மயங்குவானு? அங்கும் அது கரும்புக்கட் டியின் சொரூபமாகவும், பொன்னின் சொரூபமாகவுந்தான் இருக்கின்றது. அப்படியே நரகமாயினும் சுவர்க்கமாயினும் பரம முதற்காரணமான சிதானந்த நாராயண சொரூபமா கவே இருக்கின்றது. பனங்காட்டு நரி சலசலப்புக்கு, அஞ் சாததுபோல நம்மாழ்வார் இதற்கெல்லாம் பயப்பட்டுச் சுவர்க்கமென்ருல் இறைவனுவார், நரகமென்ருல் அசுத்தப் பட்டு விகாரமாய்ப் போவார்; ஆதலால் நரகம் ஆகமாட்டார் என்று சொல்லுவாரா? இதனுற்ருன் எட்டாம்பத்து ஒண் ணும் திருவாய்மொழியில் ஆருவது கவியில் 'ஏழுலகும் அங்கு ற்ற தெய்வங்களும் அவற்றமைந்த கருமமும் நீயே' என்று கூறி, 'இதற்கப்பாலும் பொருள்களுளவேல் அவையும் நீ' என்றருளினர். அதற்கடுத்த கவியில் 'முக்காலப் பொருள்

களும் நீயே' என்று அறுதியிட்டுக் கூறி, அதற்கடுத்த பாசுரத்திலும் 'மனம், வாக்குச் செய்கையும் யானும் நீதானே' எனத் திருவாய்மலர்ந்து, மீண்டும் அடுத்த பாசுரத்தில் சொன்னவற்றை யெல்லாம் கூட்டி முடித்துச் சித்தாந்தம் செய்ய ஆரம்பித்து, இவ்வாறு எல்லாமாக ஆனால் நரகமோ என ஆசங்கித்துச் சமாதானங் கூறுவார்போல்

"யானும் நீதானே யாவையும் மெய்யே அருநரகவையும்
நீயானால்
வானுயர் இன்பம் எய்திலென் மற்றை நரகமே எய்திலென்"

என இன்னுமோர் தடவை இப்பொருளில் சங்கையும் சமாதானமுமில்லாதவாறு, உள்ள பொருளைப் பொருளுள்ளவாறு அழுத்தந் திருத்தமாகச் செயபொருள்படக் கூறியருளிச் சித்தாந்தஞ் செய்கின்றார்

'இவ்வாறு விகாரப்பட்டும் விகாரமில்லாதிருக்கின்றான்' என்னும் பொருளையன்றோ 'பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்' என்று நம் அப்பர் கூறியது. 'நமக்கு இங்கு பொருந்தாதது போலக் காணப்படுவதைத்தானே அந்த பொலிவுற்று அழகுபட மிக்கழக் கண்டேன்' என்றார். இப்பொருளை மாணிக்கவாசப் பெருமானும்—

"பூதங்க ளாந்தாகிப் புலனுகிப் பொருளாகிப்
பேதங் ளனைத்துமாய்ப் பேதமில்லாப் பெற்றியனை
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்கு தில்லை கண்டேனே"

என இதில் பேதங்களெல்லாமாக ஆயினும், பேதமில்லாதிருக்கும் நிர்விகாரத் தன்மையைக் கூறுகின்றார். இவ்வளவு நிலைகளையும், 'தில்லையிலிருந்தே நான் கண்டேன்' எனவும்

கூறுகின்றார். இதனாலன்றோ சாந்தோக்கியத்தில் தத்துவராய சுவாமிகள்—

"மன்னிய பேதாகாரம் அபேதா காரமுமாய் மாதேவனி
ரானேல்
இன்னதேன் நாமத்தான் எனுமாறேன் யாவையும் ஈசானன்
பிறிதன்றே"

எனத் திருவாய் மலர்ந்ததும் நன்கு கவனிக்கத்தக்கது.

இவ்வாற்றால் இறைவன் காரியப்பட்டும் நிர்விகாரியாய் இருக்கும் இதைச் சுருதியும் சூத்திரமும் பிரதிக்ஞா திருஷ்டாந்தங்களும் ஆழ்வாரும் அப்பரும் எவ்வாறெல்லாம் விளக்கிக் கூறியிருக்கின்றார்கள் என ஆராயும் இதனையும், இது கொண்டுபின்னும் கேட்டும், சிந்தித்தும் தெளியத்தக்கதாகும்.

**நாமரூபங்களும் அவைகளின் இருப்பும்—**

இறைவன் தன்னிடத்திலேயே நாமரூபங்களைக் கற்பித்து தானே அவைகளுள்ளிருந்து அவைகளுக்கு இருப்பைக் கொடுத்து அந்தந்தக் காரியப்பொருள்களுக்கு அந்தந்தத் தன்மையையும் கொடுக்கின்றார் என்று 'கேன' (केन) முதலிய வேதத்தலைகளில் கூறப்பட்டிருக்கின்றது. இது உலகானுபவத்தாலும் கண்கண்ட விடயமாகும். மண்ணும், இரும்பும், பொன்னும் தன்னிடத்திலேயே, முறையே குடம், கத்தி, கடகம் முதலிய நாமரூபங்களைக் கற்பித்து ஒவ்வொன்றிலும் அதனுள்ளிருந்து அததற்கு அதனதன் இருப்பைக்கொடுத்து அதனதன் தன்மையுடன் விளங்குவதைக் காண்கின்றோம். இதனால் ஒரு பொருளின் நாமரூபமானது அதன் காரணத்தின் முழு இருப்பையும் ஆதாரமாகக்கொண்டே விளங்குகின்றது.

மண்ணானது தனது அனன்யகாரியமாகிய குடத்திற்கு தனது இருப்பு முதலியவகைகளை 'எனது இருப்பே உனது இருப்பாக ஆகட்டும் என்றும், எனது விளக்கமே உனது விளக்கமாக ஆகட்டும் என்றும், நான் கொண்டுவரும் நீர் நீ கொண்டுவரும் நீராக ஆகட்டும் என்றும், என்னைத்தொடுவது உன்னைத்தொடுவதாக ஆகட்டும்' எனறும், (குடம் உண்டாகும் பொழுதே) அனுக்கிரகம் செய்துவிட்டது. ஆதலினாற்றான் குடம் இருக்கின்றது. குடம் விளங்குகின்றது. குடம் நீர் கொண்டுவருகின்றது. குடத்தைத் தொட்டேன் என்னும் விவகாரங்களெல்லாம் பொய்யான விவகாரங்களன்றி, உண்மையான விவகாரங்களாகவே ஆகின்றன.

இப்படியே இறைவன் மண்ணை மலையைக் கடலைக் கற்பித்து முழுதுமாய் அதனுள்ளிருந்து மண்தன்மை, மலைத்தன்மை, கடற்றன்மை முதலியவைகளைக் கொடுத்து 'எனது இருப்பே உமது இருப்பாக ஆகட்டும் என்றும், எனது விளக்கமே உமது விளக்கமாக ஆகட்டும் என்றும், ஆதியிலேயே அருள் செய்துவிட்டார். ஆதலினாற்றான் மண்ணிருக்கிறது. மலையிருக்கின்றது, கடலிருக்கின்றது என்னும் விவகாரங்களெல்லாம் உண்மை விவகாரங்களாகின்றன. கடவுளைப் பார்த்தே, மின்னலைப் பார்த்தேன், மண்ணைப் பார்த்தேன், மலையைப் பார்த்தேன் என்கின்றான். இது ஒன்றின் இருப்பை ஒன்றிற்கண்டு பொய் கூறினான் என்பதில்லை. உபாதான காரணமே தன்னிடத்துப் பல நாமரூபங்களைக் கற்பித்துக் கொண்டு அதுவதுவாக விளங்கும்போது இதில் எது பொய்யென்பதும், எதற்குள்ளதை எதற்கு மாற்றி மயங்கிச் சொல்லிவிட்டான் என்பதும் தெரியவில்லை. மயக்கமென்பது பொருள்களை முதற்காரணமான இறைவனுக்கு அனன்யமென்றறியாத பொழுதல்லவோ அல்லது ஒன்றை வேறொன்

ருக அறிந்த பொழுதல்லவோ ஏற்படுவது. ஈண்டு குடத்தை மண்ணென்றறிந்தது ஒன்றை வேறென்ருக அறிந்ததாகுமா? அல்லது உபாதானகாரண சொரூபமாக அறியப்படாததாகுமா? எனவே காரியத்தைத் தனித்து இருப்புடையதென்று அறியாது காரண அனன்யமாக அறிவதே அதனது உண்மை அறிவாகும். பொருள் அங்ஙனமிருத்தலினுல் என்ப.

**நான்கு பக்ஷங்களின் இரண்டு பிறிவு —**

காரியம் நால்வகைப்படும் என்று முன்பே சொன்னேம். அவற்றுள் முன் மூன்றும் ஒருதன்மையாகவும், பின்ஒன்றும், வேறுமோர் தன்மையாகவும் இருக்கும். விருத்தி, பரிணமம் ஆரம்பம் என்றும் மூன்று காரியத்திற்கும் இருப்புண்டு எல்லாராலும் (பண்டித பாமர சாதாரணமாக) ஒன்றுபோல விவகரிக்கப்படும் பண்டிதனுக்கு, குடம் எவ்வளவு ஐமை் கொள்ளுமோ, பாமரனுக்கும் அவ்வளவே. மற்றதும் அப்படியே. ஒருவனுக்கு மாத்திரமன்று, பலகோடிப்பேருக்கும் அது உடையும் வரையும் குடமாகவே இருக்கும். ஆடையாகவோ, சட்டியாகவே ஒருவருக்கும் அது ஆகாது. காரியமானது தனது இருப்பு முதற்கொண்டு சகல விவகாரங்களையும் காரணத்தைக்கொண்டே நடத்திக்கொள்ளும். இவை முதலிய தன்மைகள், மூன்று காரியங்களுக்கும் உண்டு. இவற்றுள் காரணம் காரியமாதல் சமானமாயினும், ஆகும் விதம் சிறிது வேறுபட்டிருக்கும். நூல்கள் குறுக்கு நெடுக்குமாக ஒவ்வொன்ருய் கிரமமாகச் சென்று சிறிது சிறிதாக ஆடையை ஆரம்பிப்பதனுல் அதை ஆரம்பு பக்ஷமென்கிறேம். இப்படி கிரமமாக அவயவங்கள் சேர்ந்து உண்டாகாமல் முதலிலேயே அவயவங்களெல்லாம் ஒன்றுகூடியிருந்து நிமித்தகாரணு

ர்து முயற்சியினாலும் காரியவித்தியாசத்தினாலும் கிரமம் தெரியாத முறையில் ஒரே சமயத்தில் உண்டாகின்றபடியினால் குடமாதலைப் பரிணாம பக்ஷமென்கின்றோம். இவ்வாறு அவயவ அவயவி என்ற வேறுபாடுகூடத் தோன்றாமல் ஒரே பொருள் அவஸ்தா மாறுதலினாலே ஒன்று பிறிதொன்றாக ஆவதை விருத்தி பக்ஷமென்கிறோம்.

இம் மூன்று பக்ஷங்களிலேயும் காரணம் காரியமாகி எல்லா விதத்தாலும் விவரிக்கப்படும் என்பது சமானமே யாகும். விளையாட்டு மன்றத்திற்குச் சென்ற பிள்ளைகள் மேலாடையை முறுக்கித் திரித்து திரிவிளையாட்டென்று விளையாடுகிறார்கள். தோல்வியுற்றவனை அத்திரியாலும் அடிக்கின்றார்கள். இங்கு ஆடையைக்காட்டிலும் திரி சிறிதும் வேறன்றாயினும் ஆடையால் அடித்ததாகச் சொல்லுகின்றதில்லை. அது காரியப்படாது ஆடையாகவே இருக்குமாயின் இவ்விவகாரத்திற்குதவாது. அங்ஙனமே மண்ணும் பொன்னும் இரும்பும் காரியப்படாதவிடத்து விவகார சித்தி கூடுகின்றதில்லை. காரிய காரணங்களுக்குப் பொருள்வேற்றுமை சிறிதும் இன்றாயினும் அவஸ்தா வேற்றுமையுண்டு. அதனாற்றான் வைதிக லௌகிகமாயுள்ள எல்லா நிகழ்ச்சிகளும் மாறுபாடின்றிக் கூடுகின்றன. காரியத்திற்கு (திரிக்கு) என அணுமாத்திரமும் வேறொன்றை பிள்ளைகள் ஆடையோடு சேர்த்துகின்றார்கள் இல்லை. ஆனால் ஆடை ஜடமானபடியினால் பிள்ளைகளின் காரியானுகூலமான உணர்ச்சி முயற்சிகளையே வேண்டிற்று. இது போலவே பரம முதற்காரணமான பரமேச்வரன் உலகமாக ஆவதற்கு வேறொரு பொருளையும் தன்னோடு சேர்த்துக்கொள்ளாது தனது பேராற்றலினால் தானே உலகமாக ஆனான். ஆதலினால் காரணமான கடவுளுக்கும் காரியமான உலகத்திற்கும் சிறிதும் பொருள் வேற்றுமை

இல்லை என்பது சிறிதும் மிகையாகாது. இவைகளுக்கு காரிய காரணத்தன்மை உண்டு என்பது ஒத்துக்கொள்ளப் படுகின்றது. காரணத்தின் இருப்பு காரியத்திலிருப்பதனுல் பொய்யெனப்படுவதில்லை. நாமரூபத்தை காரணத்தினின்றும் பிரித்து விவரிக்கும்பொழுதுதான் அவைகள் பொய்யெனப்படுகின்றன.

இனி நான்காவதான விவர்த்தபக்ஷ காரியமாவது காரியமென்னும் அளவுக்குண்டான அவ்வளவு தன்மையும் இராது. காரியப்போலியாய் இருக்கும். இதனுற்றான் இது மித்தியா வாதத்தில் பூரண உவமானமாக எடுத்துக்கொள்ளப்பட்டது. இங்கு காரிய காரணங்களுக்கு உண்டான தாதாத்மியத் தொடர்பு இராது. இங்கு தோன்றிய பாம்பு தன் காரணமாகிய கயிற்றை ஒருநாளும் கண்டறியாமலும் இருக்கலாம். பாம்புக்குப் பிறப்பு பாம்பு முட்டையினின்றுமே யொழிய கயிற்றினின்றும் இல்லை. இது கயிற்றினின்றும் தோன்றியிருக்குமானுல், மட்குடம்போல, பலருக்கும் ஒரே சமயத்தில் பார்த்தாலும் அரவமாகவே தோன்றவேண்டும். அங்ஙனமின்றி கயிறு மாலைக்காலத்தில் (மங்கலான இருட்டில்) ஒருவனுக்கு மாலையாகவும், மற்ருெருவனுக்கு (மாடு நடக்கும் போது பெய்த) நீர்த்தாரையாகவும், அயலொருவனுக்குப் பூமி வெடிப்பாகவும், இன்னெருவனுக்கு வளைந்த தடியாகவும், மற்ருெருவனுக்கு பாம்பாகவும், வேருெருவனுக்கு அது எதுவோ என்றும், ஒரே சமயத்தில் பலருக்கும் இங்ஙனம் வேறு வேருகக் காணப்படுகின்றது. இதில் எது உண்மையாயினும், பொற்பணி, மட்குடம் போன்று யாவருக்கும் ஒன்ருகவே தோன்றும். அங்ஙனமின்றி மயக்கத் தலத்தில் ஒன்று பலருக்கும் பலவாகக் காண்கின்றபடியினுல் அங்கு எப்பொருள்களுக்கும் உற்பத்தியில்லை. ஆதலால் இத் தோற்

றத்தை விபரீத உணர்வு (பிராந்தி ஞானம்) என்று சொல்லு வார்கள். இதை 'அஃதல்லாத பொருளின்கண் அதுவென் னும் உணர்வு என்று' பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆதலால் புத்தி மயக்கத்திற்குக் கயிறு நிமித்தமே யொழிய பாம்புக்கு உபாதானமன்று. அங்கும் இங்கும் நாமரூபம் தோற்றுதல் சமானமாயினும், குடம் என்னும் நாமரூபம் காரணத்தின் இருப்பைப்பெற்று நீர் முகந்து வருதல் எடுத் துத் தலையில்வைத்தல் முதலிய விவகாரங்கட்குப்பயன்பட்டுக் குடம் என்பதற்கு எவ்வளவு பயன்படுதலுண்டோ அவ்வள வுக்கும் உபயோகப்படுகின்றது இதுபோல இங்கு உண்மைப் பாம்பாயின், முட்டையிடல், அமாவாசைதோறும் சட்டை யுரித்தல், புற்றில்புகுதல், முதலிய விவகாரங்களுக்குப் பயன் படுதல் வேண்டும். அங்ஙனமின்மையால் விவர்த்த பக்ஷத்தில் நாமரூபத்திற்கு இருப்பு இல்லையென்பது நன்கு தெற்றெனு விளங்குகின்றது. எங்கு நாமரூபத்திற்கு இருப்பு இல்லையோ அங்கு பிறந்தது, ஜனித்தது, பரிணமித்தது என்ற விவகாரம் கூடாததாகும். ஆதலால் இதைப் பூரண உவமானமாகக் கொண்டால் ப்ரம்மசூத்திர ஜன்மாதியதிகரணமும், முதற் காரண அதிகரணமும், அதைச்சார்ந்த தலைசிறந்த சுருதிகளும் மேற்காட்டிய நம் ஆழ்வார், நாவுக்கரசர் முதலியோருடைய வாக்கியங்களும் நேர்மையாகப் பொருந்தாததாய் முடியும்.

காரிய காரண வாதம் வேதாந்தங்களுக்குப் புறம்பானது என்று சொல்லப்படுமேயானால் அப்பொழுது அதை முகமா கக்கொண்ட இந்நூற்களெல்லாம் வேதாந்தங்கள் அன்று என முடியும். அப்பொழுது எது வேதாந்தம் என்னுஞ் சந்தேக முண்டாகி, உண்மை வேதாந்தம எது என்பதும், அதில் சொல்லும் உண்மை விடயம் எது என்பதும், மிகத் தெளிவாய் விளங்கிவிடும்.

**காரிய விளக்கம்—**

காரியம் என்பது வெறும் நாமரூபத் தோற்றத்தை மாத்திரமன்று, காரணத்தின் முழு இருப்பையும் நாமரூபத்திற்கு ஆதாரமாகப்பெற்று விளங்குவதைத்தான் காரியமென்பது. எனவே மேற்காட்டிய குடமுதற்கொண்டு திரிவரையிலுள்ள திருட்டாந்தங்களிலிருந்து காரண சொரூபமானது வேறோர் வடிவத்தையும் பெயரையும்பெற்று விளங்குவது காரியமெனப்படும் எனத் துணியப்படுகின்றது.

மயக்க உணர்வில் தோன்றுகின்ற பொருள்களுக்கு நாமரூபத்திற்கு இருப்பும் அவ்விருப்பால் அப்பொருள்களுக்கு ஏற்படும் விவகாரங்களும் ஏற்படாதொழிகின்றன. இதனுனே மயக்கத்தலப் பொருள்களில் காரியம் என்னும் விவகாரம் உலகானுபவத்திலும் காணேம்.

மாலைக்காலத்தில் கயிறு பாம்பாயிற்று. அதை அடித்துவிட்டேன். வெய்யிற்காலத்தில் கிளிஞ்சில் வெள்ளியாயிற்று, அதை எடுத்துக்கொண்டேன் என்னும் விவகாரம் எங்கும் காணேம். இதற்கு மாருகக் கயிற்றைக்கண்டு பாம்பென, பயந்தேன் என்பதாதி விவகாரங்களே காணப்படுகின்றன. ஆதலால் ஆதல், பரிணமித்தல், பிறத்தல் என்னும் தன்மை இம்மயக்கத் தோற்றத்திலில்லை. இதனுல் இது சுருதி சூத்திரம் கூறிய திருட்டாந்தங்ளோடு ஒவ்வாது.

'ஒன்ருய் உலகனைத்தும் ஆனுய் நீயே' என்ருர் நம் அப்பர். 'யான் எல்லாமாக ஆவேனுக' என்ருர்நம் அம்மையப்பர். இதற்குதாரணம் மண் குடமாதல் முதலியன. இவற்றில் உபமேயம் இவ்வாறென நன்கு விளங்காவிடினும் உபமானமாவது நன்கு விளங்குகின்றதல்லவா? அப்படி யாவருக்கும் விளங்காத உபமானங்களா கொடுக்கப்பட்டிருக்கின்றன?

குடமும், கத்தியும், காப்பும் எந்தப் பிள்ளைகளுக்கும் பெண்களுக்குந்தான் தெரியாது? இவற்றில் மண் குடமாயிற்று, பொன் பணியாயிற்று என்றால் 'இல்லை' மண்ணும் பொன்னுமப்படியே இருக்க வேறொன்றுதான் குடமும் பணியும் ஆயிற்றென்று எவராவது சொல்லுவார்களா? அப்படியே வைத்துக்கொண்டாலும் அவ்விரண்டிற்கும் வேறாய் எதுதான் உலகமக்கள் கண்ணை மறைத்துவிட்டுக் குடமாகவும், பணியாகவும் பரிணமித்தது? இவ்வெடுத்துக்காட்டிலுள்ள இரகசியம் உலகமக்களொருவருக்குந் தெரியாதா? இப்படியாக அனைவரும் கண்ட பொருளையல்லவோ அறிஞர்கள் எடுத்துக்காட்டாகக் கொடுத்து எடுத்துக்கொண்ட பொருள்களை விளக்குகின்றார்கள்.

**கடைதலும், தியானமும்—**

மேற்குறித்த நம் அப்பர்—

'விறகிற் றீயினன் பாலிற்படும் நெய்போல்
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே'.

என்று இறைவன் இருக்கும் நிலையையும் வெளிப்படுந்தன்மையையும் நம் அப்பர் அதிசுலபமாய் நன்கு விளக்கியிருக்கின்றார். ஈண்டு எடுத்துக்கொண்ட பொருள் விளக்க முற்றதாயிருந்தாலோ அல்லது விளக்கமற்றதாயிருந்தாலோ அதைப்பற்றிக் கவலையில்லை. அது அதன் இயல்பாகும். அதை ஒன்றும் நாம் குறை சொல்வதிற்கில்லை. ஆனால் அதை விளக்க எடுத்துக் காட்டும் திருட்டாந்தமாவது விளக்கமுற்றதாயிருக்கவேண்டாமா? இங்கு நம் அப்பர் எடுத்துக்காட்டும் உதாரணங்கள் 'விறகிற்றீயினன் பாலிற்படும் நெய்

போல்' என்று இடைச்சிமார் வீட்டுத் திண்ணை வரையும் வெளிப்படையாயுள்ள பொருள்களல்லவா? இந்தப் பாலும் வெண்ணெயும், நெய்யும் உலகத்தில் எந்த மக்களுக்குத்தான் தெரியாது? 'இல்லை, காசுக்கு வாங்கித் தனித்தனியே கண்ட துண்டேயொழிய கறந்து காய்ச்சிக் கடைந்து உருக்கிக் கண்ட தில்லையே?' என்றால் 'நல்லது அதனால் ஒன்றுங்குற்றமில்லை, கண்ணன் வளர்ந்த இடத்திற்குப்போ. அவர்கள் உன்னை வெறுக்கார்கள். ஆதரிப்பார்கள். அவர்கள் பாலில் வெண்ணெய் எடுத்துப் பாருக்களித்த பழங்குடி மக்களாகும். அங்கு உனக்கு கண்வெளிச்சம் உண்டாகும். அவர்கள்தான் பழக்க மிகுதியினால் முறுகவாங்கிக் கடைவார்கள்' என்பார்போல் சொல்லுகின்றார் 'முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே' என. முறுகவாங்கிக் கடைதலாவது—கை செல்லும்வரை முன்வீசி பின்னிழுத்தல். இதில் முறுகுதல் மற்றைக் கையின் பலத்தை அனுசரித்துப் போகப்போக நீளவிரைதல். விரையினும் நிலை தளராதிருத்தல். நிலை தளராதிருத்தலாவது — கயிற்றைப் பிடித்து வீசி இழுத்துக்கொண்டே மத்தை நடு நிலையில் வைத்திருத்தல். நடு நிலையாவது—மேல்வந்தால் தயிர் கடையாது. அள்ளைப்புறமும் கீழ்ப்புறமும் போகுமானால் சட்டி உடைந்து விடும். ஆனால் நடு நிலையில் வைத்து அசையாது கையால் பிடித்துக்கொள்ளுகிறேன் என்றால் பயனில்லை. இதற்காக இடமோ வலமோ ஒரே முறையில் சுற்ற வழி கண்டுபிடிக்கலாமே யென்றால் இருபுறமும் மாறி மாறி அடிக்காமல் ஒரே போக்கில் விட்டால் சீக்கிரமாய் நன்றாய்த் தயிர் உடைந்து நுரை உண்டாகாது. ஆதலால், இத்தனை தோடங்களும் பற்றாத முறையில் நடுநிலை கலங்காது இடசாரி வலசாரியாக விரைந்து சுழன்று வரவேண்டும். விரைவு மிகுதியும் வேண்டுமாயின் கயிற்றைத் தளர்த்தி உடம்பைக் கடைதலுக்கு அநு

கூலமாக அசைத்தும் சாய்த்தும் கைகளை மாறிமாறி உயர்த்தி நீள வீசிவிடவேண்டும். இங்ஙனம் செய்யின் பாலில் கையை விட்டுப் பார்த்தும் தட்டுப் படாததும், உற்றுப் பார்த்தும் சற்றும் தோன்றாததுமான வெண்ணெயானது பின்னர், அத னுள்ளிருந்து இவள் முயற்சியைக் கண்டு ஆற்றாததாகி இன் னும் சிறிது தாழ்ந்தால் கை ஓய்ந்து மத்தை நிலைதளர விட்டால் சட்டி உடைந்து அதனால் இவ்வளவு முயற்சியும் வீணாய் விடுமென்றோ அல்லது கை சலித்துக் கீழே விழுந்து மூர்ச்சையாய் மரணம் அடைந்துவிடுவாளென்றோ அதனுள் இருந்து எப்படியோ உருண்டு திரண்டு உருவாகி அவள் கை மேலேறிக் கண்பார்க்க நிற்கின்றது. இதைக் கண்டு இழுத்து, ஓய்ந்து அலுத்த கைகள் ஆறுதலடைந்தனவாகவும் பார்த்துப் பார்த்துக் காணேமே என்று மயங்கிய கண்களும் மீண்டும் மயங்காதவாறு தெளிவெய்தினவாகவும், எப்பொழுதோ என்று ஏங்கிய மனமும் கவலையற்றதாகவும் ஆகின்றன. 'இவ்வளவு தூரம் சிரமப்பட்டு என்னைக் கண்டாயல்லவா? நீ உன்னைக்கண்டாயா? ஆமாம்; என்னைக்கண்டன்றி உன்னைக் காணமுடியாது. நீ என்னுள் உன்னைக் காண்பாயாக' என்று தன்னுருவத்தை அருவமாக்கி (வெண்ணெய்யை நெய்யாக்கி) தனக்குள் அவளை அவளுக்குக் காட்டுகின்றது. காணச்சென்ற அவளும் கண்ட அதனுள் தானும் இருக்கக் காண்கின்றாள்.

உபமேயம் இங்ஙனம் நன்கு விளங்கா விட்டாலும் பாலில் நெய்போல என்றும், உறவுகோல் உணர்வு கயிறு என்றும், உவமப்பொருள்களையும் உடன்கூறி, முறுகவாங்கிக் கடைய என்றும், முன்னிற்கும் என்றும், இரண்டிற்கும் பொதுவாய் வெளிப்படையான தருமங்களும் கூறப்பட்டிருக் கின்றன. இதிலிருந்தாலாவது உவமேயத்தையும் ஒருவாறு நன்கு பரோக்ஷமாக ஊகித்துக்கொள்ளலாமல்லவா? மேலும்

சுருதி ஊகங்களையும் இதற்குத் துணையாகக்கொண்டால் இவ்வுவமானங்களால் விளக்கப்படும் அம்சங்களில் உள்ள ஐயங்களைக்கூட நீக்கிக் கொள்ளலாமல்லவா? 'கண்முதற் புலனால் காட்சியுமில்லோன்' என்றவரே 'கண்ணால் யானும் கண்டேன் காண்க' என்றார். இங்கே இடையில் கடைதல் (மனனம்) இல்லாவிட்டால் இது (காணாதது காணப்படுவது) எங்ஙனங்கூடும்? ஈதெல்லாம் இவ்வுவமேயப் பொருளை விளக்கவில்லையா? எங்ஙனமெனில்— உலகப் பொருள்களில் எவ்வாறு உற்றுப்பார்க்கினும் ஓடித்தேடினும் கடவுளைக் காணமுடியாவிடின், பொருத்தமாயுள்ள இவ்வுவமானத்தைக் கொண்டாவது தியானத்தால் ஒருநாள் நிச்சயமாக இது காணமுடியும் என்பதாகின்றது. அங்கு நெய்காணக் கடைதல் அவசியம்போல இங்கும் மனன தியானம் அவசியம் என்கின்றார். அதற்கு வைராக்கியம், (நேர்மையான பிடிவாதம்) என்னுங் கம்பம் நட்டு உணர்வு கயிற்றால் சுற்றிப் பிடித்துக் கொள்ளவேண்டும். இங்கு உணர்வு என்றது அன்பு பக்தி ஆதரவோடும், சுருதி யுக்தி அனுபவங்களோடும்கூடிய மனனமாகும். இம்மனனத்தைச் செய்யுங்காலை நேர்மையான பிடிவாதமில்லாதவன் இடையிலும் ஆரம்பத்திலும் அல்லது முடியுந்தருணத்திலும் கை நழுவவிட்டு முயற்சியை வீணாக்கி விடுவானாகையால் முதலில் வைராக்கியத்தைப் பலப்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதாகின்றது.

இங்ஙனம் வைராக்கியத்தைப் பலப்படுத்திக்கொண்டு மனனம் செய்யவேண்டும். அதாவது—இருவேறு பொருள்கள் ஓரிடத்திரா. ஓர் அணு இருக்குமிடம் பிறிதோர் அணுவின் இருப்பிற்குப் பாதகமாகும். இரு பொருள்கள் ஓரிடத்து இருக்குமாயின் அவைகள் காரியகாரணங்களேயாகும். பரம முதற்காரணமானபரமேசுரனே இவ்வனைத்திற்கும்உபாதான

காரணமாயிருக்கின்றான். ஆதலால் இந்தத் தூலஉடம்பாகிய கடைசி அவயவம் வரையும் பிரகிருதி, மகத்தத்துவம், அகங்கார தத்துவம், சூக்கும தத்துவங்கள், தூல தத்துவங்கள் இறுதியாக இறைவனே இவ்வாறு தன்னைப் பரிணமித்துக் கொண்டிருக்கின்றான் என்று வலசாரியாகவும், உடம்பு முதலாகக் காணப்படும் இயங்கியல் நிலையியலாய் உள்ள இரண்டும் நானுவிதபேதமாகத் தோற்றப்படினும், கடக மோதிர மகுடங்களெல்லாம் பல்வேறு விதமாகத் தோற்றப்படினும் பொன்னுக்குச் சிறிதும் வேறாகாதது போலச், சச்சிதானந்த சொரூபமான கடவுளுக்குச் சிறிதும் வேறாகாது, அனன்யமாய் அவனாகவே இருக்குமென்று இடசாரியாகவும் நீள நினைந்து மனனம் செய்யவேண்டும். சுருதி, யுக்தி, அனுபவமென்னும் மூன்றையும் மூன்று புரியாகக்கொண்ட இந்த மனனக் கயிற்றைக் குறுக்கிக்கொள்ளாமல் நீள விடுத்து மனனம் செய்யவும். அதாவது—சுருதியாதிகளில் ஆசிரியன் காட்டிய அளவிற்கும், தன்னளவிற்கும் எவ்வளவு தூரம் போய்வரமுடியுமோ அவ்வளவு தூரம் இடசாரி வலசாரியாகச் சென்றுவரவேண்டும். அப்பொழுதுதான் இந்த விசார முதிர்ச்சியினால் ஏற்படும் 'சிவோஹம்' பாவனை (பிரம்மோஹம் பாவனை, நாராயணோஹம் பாவனை) யில் ஐய எழுச்சியால் கலக்கமேற்படாமல் தைலதாரைபோலவும் காற்றில்லாவிடத்து விளக்குப்போலவும் அசையாத் தியானம் கூடும். இறைவன் தனது சச்சிதானந்தமேனி கெடாது இவ்வுலகமாகியிருக்கிறான். ஆதலின் இதுவும் சந்தேகமின்றி முதற்காரணமான அவன் வடிவமே யென்று சுருதியாதி மூன்றையும் அனுகூலமாகக்கொண்டு வலமிடமாகச் சுற்றிச்சுற்றி எல்லாப்பொருள்களையும் முதற்காரணத்திற்கு அனன்யம் என்னும் மனனத்தில் அடிபடும்படியாகச் சுந்தரர் சொன்னதுபோல நீள

நினைந்து நித்தலும் மனனம் செய்யவேண்டும். இவ்வாருக இறை முதற்காரணமென்னும் ஓமகுண்டத்தில் உதியாது, ஒடுங்காது, இயல்பாய்ப் பிரகாசித்திக்கொண்டிருக்கும் சிவாக்னியில் காரியப்பொருள்களெனத் தோன்றுமனைத்தையும் காரியம் காரணத்திற்கனன்யமென ஓமம்செய்து தீயிலிட்டது தீமயமானுற்போல அனைத்தையும் உபாதானகாரண சொரூபமான சிவமாகவே கண்டு இங்ஙனம் கண்ட தன்னையும் சிவாக்னியில் ஓமம் செய்யத் தொடங்குகின்ருன். இதுதான் சிவோஹம் பாவனை, நாராயணேஹம் பாவனை யென்பது.

இவ்வாறு செய்யும் மனமானது இடம் வலமாக விரையினும் பதி பசு பாசங்களின் நடுநிலை கடவாதிருக்கவேண்டும். நடுநிலை சிறிது தளர்ந்து அடிப்பாகம் சென்ருல் அனுபவத்திற்குப் பொருந்தாது. இந்தப்பக்கம் சாய்ந்தால் சுருதியைக் கடந்துவிடும். அந்தப்பக்கம் சாய்ந்தால் ஊகத்தை உடைத்துவிடும். இவ்வாறு இம்மூன்றையும் கடவாத முறையில் அவைகளில் அன்பும், அடக்கமும், ஆர்வமும், நேர்மையும் கொண்டு தளராது, சாயாது, ஓயாது, ஒழியாது மனன தியானங்களைச் செய்துவருவானுயின் நிச்சயமாக தியானத்தின் பூரணநாளில் நெய்கண்டவன் கடைந்த தானும் நெய்யிற்குள் இருக்கக் கண்டதுபோல பரமாத்துவித ஞானமுண்டாகி அந்நிலையில் தானுமங்கு இறைவனுக்கு அனன்யமாயிருக்கக் காண்கின்ருன். இவ்வாறு மனனத்தின் பெருமையினுல் முன் காணப்படாதது காணப்படுகின்றது. இங்ஙனம் காரண சொரூபத்தைக் கண்டபின்னர் அதில் தானும் ஓர் அம்சமாய் இருக்கும் உண்மை நிலையையும் காண்கின்ருன். இதைப் பதிஞேராந் திருமுறையிலும் 'நின்னைக் கண்டேன் என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்—என்னே! நின்னைக் காணுமாந்தர் தன்னையும் காணுத் தகைமையோரே' எனத் தெளிவாய்க் கூறியிருப்பது காணத்தக்கது.

இவ்வாறு உணர்வு கயிற்றினல் வெளிப்படுமென்பதை 'ஆயுமுனிஞானியாகுவான்' என்றும், 'அந்த மாமறையால் நாடிய பொருளை அழகுற அறுதியிட்டு அல்லல் பந்தமாம் மயல் பற்றறுத்தமாதவர்' என்றும், 'அயற்சி மிக்கிருப்பாைலும் அரும்பிணியாளனைலும் முயற்சியில் தமோகுணத்தால், மூடிடப்பட்டானைலும் செய்யப்படாதுண்மை ஞானம் தெள்ளுமாமதியால் காலவயத்தினல் சத்துவத்தின் வலியினலன்றி வாரா' என்றும், 'ஆதலால் பிறவி அறுக்க ஆதரிப்போன் அருமறைப் பிரமாணத்தாலும் தீதிலாத்தர்க்க நெறியதனலும் சிவனுடையுணர்வுபெற்று அதுவே கீதமே செய்வான். உபநிடமதனில் கிளத்தியபொருளிது. இப்பொருளைத் தீதிலாச் சிவ நல்ல பக்தருக்குரைக்க அல்லவர் தமக்குரைசெய்யா' என்றும் உலகப்பாட்டன் (பிரம்மா) கூறியிருக்கின்ருர்.

ஈண்டு உலகப் பொருள்களில் கடவுள் வெளிப்படாதிருந்து மனன தியானங்களால் வெளிப்படுவதற்கு மட்டிலும் பாலில் நெய் உபமானமாகுமே தவிர இவ்வுபமானத்தில் வெண்ணெய் உண்டாய்க் கண்ட பின்னர் வெண்ணெய்க்கு வேருகக் காணப்படும் மோர்த்துதியும், தீ கண்டபின்னர் காணப்படும் சாம்பலும்போல கடவுளைக் கண்டபின்னரும் சிவத்திற்கு வேருகப் பொருள்களிருக்கு மென்பதற்கும் இது உபமானமன்று.

**உபமானம்—**

உபமானமாவது மற்றவைகளாலும் முடிந்த முடிபை எதிர்மறுக்காமலும், உபமேயத்தை ஆபாசப்படுத்தாமலும், எடுத்துக்கொண்டதை விளக்குவதாகவும் இருக்கவேண்டும். ஒரு அணியானது மற்ற அணிகளால் கிடைத்த அழகைக் கெடுக்காமலும் அணிந்தவளுக்கும் உபத்திரவமில்லாமலும்

தானுமணிந்தவளுக்கு ஒரு அழகைக் கொடுப்பதாகவுமிருக்க வேண்டாமா? இம்மூன்று தன்மைகளும் கூடியிருந்தாலல்லவோ அது அணியாகும். இவற்றில் எந்த ஒரு தன்மையின்றி இருப்பினும் அது அணிவேடம் போட்டுக்கொண்ட பிணியேயாகும். இதே நிலையிற்றான் இந்த அணிகளும் (உபமாதியலங்காரங்களும்) இருக்கின்றன. இதனாற்றான் இவ்விரண்டும் அணியென்னும் ஒரு பெயர் பெற்றன. மற்ற அலங்காரங்களுக்கெல்லாம் தலையும் தாயுமல்லவோ உவமை அணி.

இவ்வுவமையானது அறியாச் சிறுபிள்ளைகள் விளையாட்டு விவகாரங்களிலிருந்து ஆண் பெண் பண்டித பாமர சாதாரணமாக அறம், பொருளின்பம் வீட்டிற்குரிய எல்லா நூல்களிலும் இன்னும் எல்லாவிதமான விவகாரங்களிலும் தாராளமாய் அள்ளி வீசப்பட்டு கண்ணொளிக்குக் கதிரொளி போன்று உதவி புரிந்து வருகின்றது. இது இதிலுள்ள சாதர்ம்ய வைதர்ம்யங்களை அறிந்த புலவர்களுக்காயினும் சரி, இஃதறியாத சாதாரண மக்களுக்காயினும் சரி, எடுத்துக்கொண்டதற்கு எடுத்துக்காட்டிலுள்ள பொருந்தாத அம்சங்களைவிடுத்துப் பொருந்துமம்சங்களால் பொருளை விளக்குகின்றது. இது உருவக முதலாக மாறிவிழுந்தாலும் தடையின்றி மக்களுக்குப் பொருளை விளக்கிக்கொண்டு போகின்றது. ஒன்றைக் கேட்கின்றவனும் 'எது போல' என்கின்றான். சொல்லுகின்றவனும் 'இது போல' என்கின்றான். சந்தையிலிருந்து சிவலைக்காளை வாங்கிவந்தவரை எது போன்றதென்றால் உங்கள் பழையகோட்டை மயிலைபோன்றதென்கின்றார். கீழ்மகன் (அறிவில்லாதவன்) எவ்வாற்றால் பயன்படுவானென்றால் 'கரும்புபோல கொல்லப் பயன்படுவான்' என்கின்றார் திருவள்ளுவர். எதுபோல மனிதன் வளைந்து கொடுக்க வேண்டுமென்றால் 'ங போல் வளை' என்கின்றார் ஔவை.

பொருளையும் கல்வியையும் நிரம்பத்தேடி தேசத்தையும் தேகியையும் பாராது இரும்புப் பெட்டியிலும் இருதயத்திலும அடைத்துச் சுமக்குமவன் எதுபோல வென்ருல்—குங்குமம் சுமந்த கழுதைபோலென்கின்ருர்.

இவைகளெல்லாம் தங்களுக்குள்ளிருக்கும் ஒன்றற்கொன்றுமாருன வேறுபாடுகளையெல்லாமொழித்து ஒப்புமை அடையும் பகுதிகளில் பொருள் விளக்கிக்கொண்டு இடர்ப்படாது போகவில்லையா ? இன்னும் காவியங்களிலும் அதிலும் கம்பன் காளிதாசனிடத்தும் இது பொருள் விளக்குந் தன்மையைக் கேட்கவேண்டியதில்லை. இன்னும் உலகோற்பத்தியாயினும் சரி, மண்ணுற் குடம்போல, 'சிலந்திப்பூச்சியில் நூல்போல' என்று விளக்கப்படுகின்றது. இவ்வாற்ருல் இதனுல் விளக்கப்படாதபொருள் கடவுளாயினும்சரி உலகத்தில் ஒன்றுமில்லையென்று கையுயர்த்திச் சொல்லலாம்போலிருக்கின்றது.

இங்ஙனமாக 'போல' என்னும் உவமைச்சொல்லானது எல்லாப் பொருள்களையும் நன்கு விளக்கிச் சகல விவகாரங்களையும் போலி விவகாரங்களென்று சொல்லும்படிக்குத் தன்மயமாகவும் செய்துவிட்டது. இவ்வாறு உவமையானது சர்வசாதாரணமாய் யாவருக்கும் பொருள் விளக்கமுடைய சிலவிடங்களில் சிலரிடத்தில் முட்டிக்கொள்கின்றது.

கடவுளுக்கு வேருகப் பொருள்களிருக்கின்றனவா ? இல்லையா ? என்பது சிருட்டியதிகரணத்தில் காணத் தக்கதாகும். ஈண்டு அப்பர்சுவாமிகள் 'விறகிற் றீயினன் பாலிற்படும் நெய்போல' என்றது சிருட்டியதிகரணமன்று. 'மறைந்திருப்பது' என்னசெய்தால் எதுபோல வெளிப்படுமென்பதற்கு மாத்திரம் அதிகரணமாகும். 'மறைய நின்றுளன்

கடைய முன்னிற்குமே' என்பதை ஊன்றிக்கவனித்தால் இது என்ன இடம் (அதிகரணம்) என்பது நன்கு விளங்கும். இந்த அளவில் மேற்கூறியவாறு படைப்பிடத்தில் முடிந்த முடிபுக்கு மாறுகொள்ளாது ஒவ்வாத பகுதிகளை நீக்கி ஒக்கும் பகுதிகளில் தக்கமுறைப்படி பொருள்கொண்டால் எல்லா அதிகரணங்களும் நேர்பட்டுவிடும். ஒன்றையொன்று தாக்கவும் செய்யாது. மற்ற அவயவங்களின் அழகைப்பார்த்து முகத்தழகைக் கெடுத்துக்கொள்ளக் கூடாதல்லவா? இங்ஙனமன்றி நெய் கண்டபின்னரும் அதற்கு வேருகக் காணப்படும் மோர் துதியும் அப்படியே நெருப்புக் கண்டபின்னரும் அதற்கு வேருகக் காணப்படும் சாம்பலும்போல இறைவனுக்கு வேருகவும் பொருளிருக்குமெனக்கொண்டால் பிரதான சுருதியின் முகத்தழகைக் கெடுத்ததாக ஆகவில்லையா? ஆகையினுல் பிரதான சுருதி யுக்தி திருஷ்டாந்தங்களால் முடிந்த 'இறைவன் எல்லாமாயிருக்கின்ருன்' என்னும் பரமாத்து விதமானது உவமையில் பாலிலும் உவமேயத்தில் காரிய உலகத்திலும் மறைந்திருப்பது மீண்டு கடைதலாலும் மனனத்தாலும் வெளிப்படுகின்றதென்பதைச் சிறிதும் பாதிக்கின்றதில்லையல்லவா?

இப்படியே ஓர்புறத்தும் சிறிதும் சாயாது, தளராது, ஆராயின் 'மணியுள் நூல்போல' என்னும் ஆதார ஆதேய சுருதிகளும் அதற்கேற்ற ஊகானுபவங்களும் அம்முறையே மற்றவைகளும் காரியம் காரணனன்யம் என்னும் பரமாத்துவிதமான முகத்தழகைக் கெடுக்காமலும் அதனுல் தாங்களும் வளம்பெற்றவைகளாயும் அதனுல் அணியப்பட்ட இடங்களுக்கு தாங்களும் தங்களாலியன்ற அழகு செய்வனவாயுமிருப்பதைக் கரதலாமலகமெனத் தெளியக் காணலாம்.

முதற் குறள்—

இனி இங்ஙனம் மறைக்கிழவர் இடத்துக்குப் பொருத்த மான எளிமையில் பொருள்விளக்கும் திருட்டாந்தங்கள் கூறியதுபோலவே நமது பொதுத்தமிழ் தந்தையரான வள்ளுவனும் நூலாரம்பத்தில் கடவுளைத் தெரிவிக்கவேண்டியவர் உலகத்தொடர்போடன்றி கடவுளைக்காண்பிக்க இயலாதென்று உலகத்தோடு காரிய காரணத்தொடர்புள்ளதாக இறைவனிருக்கின்றானென்பதை யாவருக்கும் எளிதில் விளங்கும் உவமைகொண்டு விளக்குகின்றார். அது

'அகரமுதல எழுத்தெல்லா மாதிபகவன் முதற்றே உலகு.'

என்பதாகும்.

நாதமாத்திரமாயுள்ள அகரமானது உயிர்மெய்யாகிய எல்லா எழுத்துக்களுக்கும் முதற்காரணமாவதுபோல ஆதி பகவன் இயங்கியல் நிலையியலாயுள்ள எல்லா உலகப்பொருள்களுக்கும் முதற் காரணனாகின்றான் என்பது அதன் பொருளாம். இவ்வுவமானம் பள்ளிப்பிள்ளைகள் முதற்கொண்டு யாவருக்கும் நன்கு விளங்கக்கூடியதல்லவா? ஈண்டு ஆதி பகவன் என்றது உயிர்களனைத்தையும் நடத்தும் பரிபூரண சுதந்திரத் தன்மையைக் குறித்தது. அத்தகைய இறைவன் உலகத்திற்கு உபாதானகாரணனாகின்றான் என்பது முதற்று என்பதன் பொருளாகும். ஈண்டு தலைவன், காரணன் முதலிய வேறுபல சொல்லால் இறைவனைக் கூறின்—மக்கள் மயக்கத்தாலும் ஓர் பொழுது நிமித்தமாத்திரமாகவும் இறைவனைக் கொள்ளுவார்களாதலின் அம்மயக்கம் வாராது தெளிவெய்துவதற்கு பகவானுக்கு ஆதியென்ற அடை (விசேடணம்) கொடுத்து நில்லாது 'முதற்று' எனவும் கூறினார். 'முதற்று'

என்றது குறிப்பு வினைமுற்றாகும். முதலையுடையது என்பது அதன் பொருளாம். அப்பொழுது பகவானாகிய முதலை உடையது உலகம் என்பதாம். இரண்டாம் வேற்றுமை பகவானிடத்துச் சேருமாயின் ஆதிபகவானை முதலாக (முதற்காரணமாக) உடையது என்பது பொருளாம். காரணம் இரண்டனுள் முதல் என்பது உபாதானகாரணமென்பதை முன்பே கூறினோம். பவணந்தி முனிவரும் 'மொழிமுதற்காரணமாமணுத்திரளொலி' என உபாதானத்தை முதற்காரணமெனக் கூறி இருப்பதும் காணத்தக்கது. இதனால் முதற்று என்பது இறைவனை முதற்காரணமாக உடையது உலகம் என்பது அதன் முடிந்த பொருளாம். 'எழுத்துக்களில் அகரம்நான்' என்றார் பகவான். நிற்பனவும் திரிவனவும் நீ யென்றார் நம்மாழ்வார். இவ்விரு வசனத்திலிருந்தும் சொல்லுலகத்திற்கு அவரது மந்திரமாகிய அகரமும், பொருளுலகத்திற்கு அவரும் முறையே உபாதானகாரணமென்பது வேத ஆகம புராண 'மந்திர நூற்களில் முடிந்த முடிபுக்கொத்த பொருளாகும்.

இதன் சொரூபம் யோகிகளுக்கும் எட்டவில்லையாம். ஆனால் பள்ளிப்பிள்ளைகளும் பசுங்கன்றும் இதைக் கற்றுக்கொள்ளுகின்றன. இங்ஙனம் வலியாருக்கு வலியதூஉம் எளியார்க்கு எளியதூஉம் ஆன இத்தகைய அகர எழுத்தையன்றோ எடுத்துக்காட்டாகக்கொண்டு எடுத்துக்கொண்ட நான்மறையின் பொருளான உபாதானகாரணத்தை ஐயமுமெச்சமுமின்றி கையுறு கூவிளங்கனியிற் காட்டியுள்ளார். இதைக்கொண்டன்றோ ஔவையாரும் உலகப்பெருமக்களுக்குத் தானெடுத்துக்காட்டிய நூல் வரிசைகளில் தி[illegible] குறளை தேவர் குறளெனப் போற்றி முதன்மையாக [illegible]ம். துள்ளார்.

இங்ஙனம் சுருதி சூத்திரங்களில் முடிந்த பொருளை முதற்று என செம்பொருள்பட தமது வாக்காலேயே இறைவனை முதற்காரணமென கூறியிருந்தும், நாவுக்கரசரும் இதற்கொப்ப 'இறைவனெல்லாமானூர்' எனத் திருவாய்மலர்ந்திருந்தும் 'சுருதிகளில் யாண்டும் முதற்காரண வாசகத்தால் இறைவன் கூறப்படவில்லை' எனச் சிலர் முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதுபோல நால்வர் முடிபையும், நான்மறை முடிபையும் மறைக்கவும் துணிகின்றூர்கள்.

## திருட்டாந்தங்களின் முடிவு—

இங்ஙனமாகப் பெரியோர்களும், முனிவர்களும் எடுத்துக்காட்டும் உதாரணங்களெல்லாம் பின்வரும் மக்களுக்குக் காலதேசங்கள் மாறினும் அவைகள் மாறுது இருந்து உதவி புரிந்துவருகின்றன. அங்ஙனமன்றே! 'விறகில் தீயினன் பாலில்படும் நெய்போல்' என்றது இமயம்வரையும் வெளிப்படையான விடயமல்லவா? 'அகரமுதல் எழுத்தெல்லாம்' என்றது தமிழ் நாட்டிற்கு மாத்திரம் வெளிப்படையானதன்று. தமிழன் தலைஎழுத்து மாறி, காலம் மாறி, தேசம் மாறி, வங்கம், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்துஸ்தான் முதலிய நாட்டுக்குச் செல்வானுயினும், அங்கும் இவ்வுவமானம் மாறுதலின்றி, கடவுளுக்கும், உலகுக்கும் உள்ள தொடர்பை விளக்கிக் கொண்டிருக்கின்றதை காண்கின்றுன். அல்லது ஒருவேளை விரும்பி அதிகப் புண்ணிய கருமங்களைச் செய்து தேவலோகம் சென்றுவிடுவானுயின் அங்கும் நம் நாயனூர் காட்டிய உபமானம் மிகவும் பொருத்த முற்றதாய் அர்த்தப்பொலிவுடனிருந்து, இறைவனை விளக்குவதைத் தெளிவாய்க் காண்கின்றுன்.

ஆதலால் திருநான்மறை முடிவுகளுள் முகம் போன்றுள்ள சாந்தோக்ய உபநிஷத்தும் பொருளால் அதை அனுசரித்த

மற்ற உபநிஷத்துக்களும் பகவத்கீதையில் புகழ்ந்தோதப் பட்ட பிரம்ம சூத்திரமும், கடவுளுக்கும், உலகுக்கும் இயல் பாக உண்டான காரியகாரணத் தொடர்புக்கு மேற்காட்டிய மண்ணும்,குடமும்,இரும்பும் கத்தியும், பொன்னும் பணியும், இவைபோன்றவைகளும் திருட்டாந்தங்களாகக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இவைகள் யாவும் பொதுமக்கள் அனை வருக்கும் தினமனுபவித்தலால் ஐய விபரீதங்களின்றி நன்கு விளங்கக்கூடியவைகளேயாகும். இவற்றில் இதற் கிது காரணமென வாக்காலேயே வெளிப்படையாகச்சொன்ன பொருளை விடுத்து, அதற்கு வேறொன்றைக் கொள்ளுவ தென்றால், அது முற்றிலும் பொருந்தாததாகும். மேலும் எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகுமோ' என்னும் பிர திக்ஞா வாக்கியத்திற்கும் விரோதம் வரும். இன்னும் வாக்கி யார்த்தம் நேரே பொருந்தும்போது வாக்கியப்பொருளை மாற்றுவது என்பது நியாய விரோதமுமாகும். மேலும் சொன்னதை விட்டுச் சொல்லாததைக் கொள்ளுவதானால் 'தாங்கள் இதற்கு மாறாக ஏதோ ஒன்றில் மாட்டிக்கொண் டார்கள்' என்பதையும் வெளிப்படுத்தும். அன்றியும், சுருதி யுக்தி அனுபவம் என்னும் மூன்று மணியுள்ளும் ஓரத்தில் துவா ரமிட்டுச் செல்லாது நேர்மையாக நடுநிலையில் ஒன்றொழியாது ஊடுருவி மூன்றனுள்ளும் செல்லும் ஓர்மேலான நூலை அறுத் துவிட்டதாகவும் ஆகும். ஆதலில் சொன்னதை மாற்றாது சொன்னபடியே கொள்ளுவதில் யுக்தி அனுபவங்களும் மற்ற திருட்டாந்தங்களும் சிறிதும் விரோதமின்றி அனுகூலங்க ளாக இருக்கின்றன. இதற்காகவே ஈண்டு ஒரே பொருளில் சமான சுபாவமுள்ள பல திருட்டாந்தங்கள் கொடுக்கப்பட் டிருக்கின்றன. இப்பல திருட்டாந்தங்களிலிருந்தும் பிரதி க்ஞைக்கும், நிருவிகார சுருதிக்கும், மாறுபாடில்லாத ஒரு

காரண காரியத்தன்மையை எடுத்துக்கொள்வது என்பது சுலபமேயாகும்.

மேற்கூறிய உபமானங்களில் எதைக்குறித்து எப்பொருள் காரணமென்று சொல்லப்பட்டதோ அதைக் குறித்து அப்பொருளைத் தவிர வேறுமோர் பொருள் அதற்குக் காரணமாவதை உலகம் கண்டதில்லை. இன்னும் அக்காரியத்தைக் குறித்து அக்காரணத்தோடு நியதியாக வேறுமோர் பொருளும் உடன் கூடியும் காரணமாவதையும் உலகம் கண்டதில்லை. மேலும் இந்த எடுத்துக்காட்டிய உவமைப்பொருள்களின் காரணம் ஒவ்வொன்றும் தன்னியல்பு கெடாது அந்த அந்தக் காரியங்களாக பரிணமித்திருக்கின்றன. இதுதான் நிர்விகார பரிணாமம் என்பது. இங்ஙனம் பரிணமிக்கும் தன்மை தாட்டாந்தத்திலும் உண்டா என்று சந்தேகத்திற்கு இடம் இல்லாதவாறு வியாசபகவான் பிரம்மசூத்திரத்தில் 'தன்னை உலகமாகச் செய்தான்' என்ற சுருதியால், 'தானே உலகமாகப் பரிணமிக்கின்றான்' என்று கூறுகின்றார். இவைகள் அனன்ய காரியங்களாகையால் பால் தயிராகப் பரிணமித்தபின்பு தயிரில் பாலைக் காணமுடியாதவாறு போல காரியப்பட்ட உடனேயே காரணத்தின் இயல்பு கெடுகின்றதில்லை. காரியம் முழுவதும் காரணத்தின் இயல்புமாறாத தன்மையை நன்கு ஐயமின்றிக் காணலாம். அங்ஙனம் பெரியோர்கள் காண்கின்றார்கள் என்பதை முன்பே கூறினோம்.

மேலும் பிரம்மசூத்திர பிரகிருதியதிகரணத்தில் 'திருட்டாந்தத்திற்கு விரோதம் வராதவாறு கூறவேண்டும்' என்று வியாசமுனி கூறிய விடத்து பாஷ்யகாரர்களனைவரும் ஒருவருக்கொருவர் தங்களுக்குள் சிறிது கருத்து வேறுபாடுகள் உடையவர்களாயினும் மண்குடம் முதலிய திருட்

டாந்தங்களைக் கொடுத்தார்களேயன்றி பால் தயிரான பரிணாம திருட்டாந்தங்களையோ அல்லது கயிற்றரவு, கிளிஞ்சல் வெள்ளிபோன்ற மயக்க உணர்விற்றோன்றும் பொருள் திருட்டாந்தங்களையோ ஒருவரும் கூறினரில்லை. இதனாலும் இவ்வெடுத்துக்காட்டுக்கள் சர்வசம்மதமென்பதூஉம், சுருதி, யுக்தி, அனுபவங்கள் மூன்றையும் நேர்மையாகப் பொருத்தமுறச் செய்கின்றவைகள் என்பதூஉம் நன்கு விளங்கும். இதன் விளக்கத்தினாலேதான் நிர்விகார சவிகார சுருதிகளும், நிர்க்குண சகுண சுருதிகளும் உண்மை இன்மைச் சுருதிகளும், ஒன்றை ஒன்று முட்டி மோதித் தங்களுக்குள் பலாபலம் பார்த்து ஒன்றை ஒன்று தள்ளி வீடாதவாறு விரோதமின்றி நன்கு பாதுகாக்கப்படுகின்றன.

இங்ஙனமன்றி பால் தயிராவதுபோன்று இறைவன் உலகமாகப் பரிணமித்திருப்பானாயின் காரியத்தில் காரண சொரூபம் காணமுடியாததாய் காரணம் இயல்புமாறி விகாரப்பட்டு சவிகாரி, சகுணன், என்பதாதி சுருதிகளே முழுதும் மெய்யெனப்பட்டு; நிர்விகாரி நிர்க்குணன் என்பதாதி வேதங்கள் பொய்யெனப்பட்டு விரோதமுறுவனவாய் முடியும். இதற்குப் பரிகாரமாக இறைவனிடத்தில் 'ஏக தேசபரிணாமம் உலகம்' என்பது கொண்டு

'एकदेशविकृतमनन्यवद्भवति' ''ஏகதேசவிக்ருதம் அனந்யவத்பவதி'

[சிறுபாகம் மாறுபட்டதனால் பொருளை மாறிற்றென்று சொல்லுவதற்கில்லை. அப்பொருளாகவே யிருக்கின்றது.] என்னும் நியாயத்தினால், ஏகதேசவிகாரம் விகாரமன்று, நிர்விகாரமேயாம் ; என்றாலும், வாலறுந்தவிடத்திலும் பசு என்பதில் குறைவின்றாயினும், வாலறுந்த பசு என்பது தவிர்க்கமுடியாததுபோல, விகாரப் பிரதேசத்தில் அக்

குற்றத்தைத் தவிர்க்கமுடியாததேயாகும். 'இல்லை' உபாதானமாதலின் காரியத்தில் காரணசொரூபம் சூக்குமமாகவாவது இருக்குமேயன்றி இல்லாது போகாது என்று யாதானுமொரு சமாதானங்கூறித் தோஷபரிகாரஞ் செய்வதைக் காட்டிலும் (प्रक्षालनाद्धि पङ्कस्य दूरादस्पर्शनं वरम्) 'சேற்றிலிறங்கிக் காலைக் கழுவுவதைக்காட்டிலும் அதற்குத் தூர ஒதுங்கி நல்ல நேர் பாதையில் போவது நல்லதல்லவா'? என்னும் நியாயப்பிரகாரம் சுருதி சூத்திரம் ஆழ்வாரப்பர் ஆதரித்த நிர்விகார பரிணாமங்கொண்டால் மேற்கூறிய தோடங்களொன்றும் இன்றி யாவும் நேர்மையிற் பொருந்தும் என்பது தெளிவாம்.

இனி இங்ஙனம் இறைவனை விகாரி என்று அதனால் வரும் தோற்றக் கேடுகளை யெல்லாம் இறைவனிடத்து ஒத்துக்கொள்வதைக் காட்டிலும், அவனைப் பூரணமாக நிர்விகாரியென்றே கொண்டு, இங்ஙனம்கொண்ட நிர்விகாரத்திற்குப் பங்கம் வாராமைப்பொருட்டு, உயிர்களையும் உலகத்தையுமாவது கயிற்றரவுபோன்று மித்யா பதார்த்தங்களெனக்கொண்டு அவன் இவைகளாக ஆகவில்லை என்றும், நிர்விகாரியாகவே இருக்கின்றானென்றும் கொள்ளவேண்டி நேரிடும். அப்பொழுது நிர்விகாரி, நிர்மலன், நிர்க்குணன் என்பதாதிசுருதிகளே மெய்யெனப்பட்டு மற்றவைகளெல்லாம் பொய்யாய், போலியாய், நிரர்த்தகமாய், முடிந்தமை காணப்படும். இவ்வாற்றால் எப்படிப்பார்த்தாலும் வேதங்களில் அர்த்த(ஸ்வ)ஜரதீய நியாயமும், பிரதிக்ஞா விரோதமும் ஏற்படும். அதாவது பாதிச்சுரைக்காய் கறிக்கும், பாதிச் சுரைக்காய் விதைக்குமென்பது ஒவ்வாததாகும். விதைக்காக விட்டால் அது கறிக்காகாது. கறிக்காக எடுத்துக் கொண்டாலும் அங்ஙனமே. ஜரதீ என்பது சுரைக்காய்க்

கும், கிழவிக்கும் பெயர். அர்த்தஜரதி நியாயமென்றால் பாதிக்கிழவி நியாயமென்றும் பொருள்படும். அவளது போகமாகிய ஆடை ஆபரணம் உணவு முதலியவற்றிற்குக் கிழவியாகவும், இவனது போகத்திற்கு மாத்திரம் குமரியாக வும், ஒரு பெண்ணையே உபயோகப்படுத்திக் கொள்வதென் பது முடியாததும் நியாயவிரோதமுமாகும்.

இதுபோல நமக்குத் தலைநின்ற பிரதான வாக்கியங்க ளில் சிலவற்றைத் (பாதியை) தள்ளி சிலவற்றைக் கொள்ளுவ தென்பது எதைவிட்டு எதைக்கொண்டாலும் சரி நேர்மை யாகப் பொருந்தாததும், நியாய விரோதமுமாகும். மேலும் 'வாதிகள் பிரமாண நூற்களில் தங்கள் கருத்தின்படி இயைந்த சிலவற்றைக்கொள்ளவும், இசையாத சிலவற்றைத் தள்ளவும் செய்கின்றார்கள் என்னும் பழிபாவத்தையும் சும க்கவேண்டி நேரிடும்.

மேலும் கடித்தவாயில் விஷம் இறக்குவதுபோல வேத ங்களும், நம் முன்னோர்களும் கூறியிருக்கின்றார்கள். சீர்காழி தலத்தில் இறைவனைப் பார்த்துத் 'தோடுடைய செவியன்' என்றவரே மீண்டும் அதே தலத்தில் அந்த ஞானப்பால் உண்ட வாக்காலேயே 'தோடுசெவிக்கிலர்போலும்' என் றும்' 'விடையேறித் தூவெண் மதிசூடி' என்றவரே மீண்டு மதே தலத்தில் 'பெற்றமு மூர்ந்திலர்போலும், பிறையும் சடைக்கிலர்போலும்' என்றும் மதுரையம்பதியில், 'குற்றம்நீ குணங்கள் நீ கூடலால வாயிலாய்' என்றும் திருஞான சம்பந்தப் பெருமானே திருவாய்மலர்ந்தருளியிருக்கின்றார்.

தில்லைக்கூத்தனின் வாய்மொழியேயன்றி அவர் திருக் கையெழுத்தும், 'மெய்மையும், பொய்மையும் ஆயினார்க்கு' என்றும் 'ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்' என்றும் எழுதியிருக்கின்றது.

'பெருநலமும் குற்றமும் பெண்ணுமாணும் பிறர் உருவும் தம்முருவும் தாமேயாகி' என்பதாதியாகவும் 'நலங் தீங்கவையாய் அவையாய் நின்ற அவரே' எனவும் 'உள னென, இலனென, இவை குணமுடைமையில், உளன் இரு தகைமையோடு ஒழிவிலன் பரந்தே' எனவும் 'இல்லது முள் ளது மல்லது மவனுரு' எனவும் நம்மப்பரும் நம்மாழ்வாரும் அருளிச் செய்திருக்கின்றனர். தைத்திரீய உபநிஷத்திலும்

(सच्च त्यच्चाभवत् । निरुक्तं चानिरुक्तं च । निलयनं चानिलयनं च विज्ञानं चाविज्ञानं च । सत्यं चानृतं च सत्यमभवत् ।)

'ஸச்ச த்யச்சாபவத். நிருக்தஞ்சாநிருக்தஞ்ச. நிலயநஞ்சா நிலயநஞ்ச. விக்ஞாநஞ்சாவிக்ஞாநஞ்ச. ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்.'

என்பன ஆதியாகவும் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் ஒரே வினைமுடிபுகொள்ளும் முறையினும் ஒரே வேற்றுமையி லிருப்பனவாகவும், (சமானாதிகரணமுடையவைகளாகவும்) தெளிவாய்க் காணப்படுகின்றன இதில் எதைப் பொய்யென்று தள்ளுவது, எதை மெய்யென்று கொள்வது?

'ஞானசம்பந்தப் பெருமான் ஞானப்பாலுண்டபோது தெளிவாய் உண்மையை உள்ளபடி கூறியிருக்கின்றார். பின் னர் தெளிவு மயங்கி உண்மைக்கு மாறாகவும் எதிர்மறுத்துக் கூறிவிட்டார்' என்று சொல்லலாமா? அல்லது 'பின்னர்தான் நாட்செல்லச்செல்ல தெளிவெய்தி பிரமாபுரத்தில் வந்து உண்மை கூறியிருக்கின்றார். முற்கூறியது ஆரம்பமாதலின் தெளிவில்லை. உண்மையில்லை' எனக்கூறமுடியுமா? ஒன்றை நம்பினபின் மீண்டும் பாதிசந்தேகம் கொண்டிருப்பது கேட்டிற்கறிகுறியல்லவா?

(संशयात्मा विनश्यति) 'ஐயங்கொண்டவன் நாசமாய்ப் போகின்றான்' என்றார் கீதையில் பகவானும். வேதத்தையே சரணமாக அடைந்தவர்களல்லவோ நம் முன்னோர்கள். அன்னை வணங்கத்தக்கவர் என்றபின்னர் இடதுபாதம், வலது பாதமென வேற்றுமையாய் எண்ணுவார்களா? அங்ஙனம் வேற்றுமையாக எண்ணும் அவ்வளவு தூரத்திற்கு அவைகளைப் பிரித்துக்கொள்வார்களா? இவ்வாற்றால் இச் சுருதிகளின் எப்பாகமும் தாக்குறு வண்ணம் சுருதி சூத்திர மெடுத்துக்காட்டிய திருட்டாந்தங்கள் விளக்கிய வண்ணம் 'காரியமும் பொய்யாகாமல், காரணமும் இயல்பு மாறாமல் பரிணமிக்கின்றானிறைவன்' எனக் கொள்ளின் எதற்கும் யாவர்க்கும் எப்படியும் மாறுபாடின்றி வேதத்தில் பாதிச் சுறக்காய் விரோதமுமின்றிப் பொருள் பொருத்தமாம் என்பதை நன்கு தெளியக் காணலாம்.

இங்ஙனமாக நாமரூபத்திற்கு இருப்பைப்பெற்று எல்லா விதத்தாலும் பொருத்தமுற விவகரிக்கப்படும் பொருள்களை மயக்க உணர்விற்றோன்றும் இருப்பில்லாத பிராந்திபொருள் களெனக் கொள்ளுவதூஉம் அவ்வளவு பொருத்தமன்று. அல்லாமலும் உலகப்பொருள்களனைத்தையும் முதற்காரண மான இறைவனின் இருப்பைப்பெறாத ஆபாசமான காரியங் ளெனக் கொள்ளின் புருடார்த்தங்களும் அவைகளுக்காய வழிகளும் அவைகளைப் போதிக்கின்றவைகளும் இவைகளுக்கு ஆதாரமாயிருப்பவைகளும் பகல்விளக்கேற்றிவைப்பதிலுள்ள பயன்போன்று வீணாய் முடிந்தமை காணப்படும்.

குடத்தோற்றம்போலப் படத்தால் செய்துவைக்கப்பட்டி ருக்குமாயின் எனக்கு பார்வையளவுக்குப் போதுமென்பவனே வாங்குவானன்றி அடுப்பின்மேல் வைத்துத் தண்ணீரைக்

காய்ச்சி ஊற்றி அழுக்கைப்போக்கிக்கொள்ள விரும்புகின்றவனும், அதற்காக அதை வாங்குவானு? காரணத்தினிருப்பைப் பூரணமாகப்பெற்ற காரியத்தையல்லவோ சகல விவகாரங்களுக்கும் பொதுவாக உலகமக்கள் வாங்குகிருர்கள்.

ஒரு நிமிடத்திற்குப் பல கோடிப்பொன் கொடுக்கினும் மனுட ஆயுளில் அது பெறத்தருவது அன்று என்று கூறப்படுகின்றது. இது ஏழை மரணத்தில் கொடுப்பார் இல்லை என்றன்று. அரசன் மரணத்திலும் கொடுத்துப்பார்க்கலாம். இத்தகைய மதிப்பைப்பெற்ற ஆயுளைப் பொருந்திய மகன் இதற்கும், அதற்கும், எதற்கும் (இம்மை மறுமை வீடுகளுக்காக) செய்துகொள்ளவேண்டிய காரியங்கள் இங்கு பல இருக்கின்றன. பழுதைப்பாம்பு, கிளிஞ்சல் - வெள்ளி. கட்டையிற்கள்வன் என்று கண்டவர்கள் துஷ்டர்களாயினும் 'அந்தப் பாம்பை அடித்துக் கொன்றுவிடு' என்னுர்கள். ஜீவ காருண்யமுள்ள சிஷ்டர்களாயினும் 'வீட்டினுள் புகுந்த அதை அடிக்காதே. அதைபிடித்து அப்புறம்விடு' எனவும் கூறமாட்டார்கள். இவ்விவகாரங்களெல்லாம் உண்மையான பொருள்களுக்கே நிகழும். அதுபோல இவ்வுலகப் பொருள்களும் உயிர்களும் உண்மையாயிருக்கவே அறம் பொருள் இன்பம் வீடுகளும் அவைகளைப் போதிக்கின்ற நூல் முதலியனவும் அவைகளைக் குறித்துப் பிரவிர்த்திக்கின்றன. மேலும் அறம் பொருளின்பம் வீடு அடைகின்றவர்கள் ஓர் உலகத்து மக்களேயாவர். அவைகளின் சாதனங்களும் பொருள் வகையில் ஓரிடத்துப் பொருள்களேயாகும். எவனைக் குறித்து அறம் சொல்லப்படுகின்றதோ அவனைக் குறித்தே வீடும் சொல்லப்படுகின்றது. இதனுல் அறத்திற்கு வேறு மக்களும் சாதனமும் அப்படியே வீட்டிற்கும என்பதில்லை. இதில் உள்ள உட்பாகுபாடுகளையும் கண்டு கொள்க.

இதனால் கருமகாண்டத்திற்குப் பொருட்டன்மையில் வேறு உலகமும் அப்படியே ஞானகாண்டத்திற்கும், என்றும் சொல்லுவதற்கில்லை. இங்ஙனமிருக்கும்பொழுது ஜீவேசுவர ஜகத் மூன்றினையும் மித்யாபதார்த்தமெனின் இருப்பில்லாத வெறும் தோற்றமாத்திரமாயுள்ள பொருளைக் கர்த்தவாக வைத்து ஒரு நல்வழியைச் சொல்லுவதும் அல்லது சொல்லாதிருப்பதும் அல்லது எதிர்மறுத்துத் தீயவழியைச் சொல்லுவதும் பாகுபாடின்றிச் சமானமேயாகும். கண்ணுடிக்குள்ளிருக்கும் தோற்றமாத்திரமான புருடனுக்குச் சொல்லும் புத்திபோலப் பயனற்றதாகும். இல்லை, அதுவும் பயனுள்ளதாயிருக்கின்றதென்றால் அப்பொழுது அது கண்ணுடிக்கு வெளியேயிருக்கும் உண்மை மனிதனுக்குக் குறிப்பால் புத்தி சொல்லப்பட்டதாய்ப் பயனுள்ளதாக ஆகவேண்டும். இன்றேல் நிழல், குழியில் விழுந்தாலும், அப்படியே சேற்றில் விழுந்தாலும், அல்லது உன்னத மேடைமீதிருந்தாலும், முன்னையது துக்கமென்றும், பின்னையது சுகமென்றும் சொல்வதற்கில்லை. இதனால் மனிதத் தோற்றமான நிழல் குழியிலும் சேற்றிலும் விழாதவாறு வழி சொல்லப்படுகின்றதெனறால், அப்பொழுது சொல்லும் வழி நல்லதாயினும், அது நிழலுக்காதலின் பயனற்றதாகும். பிரதிபிம்ப(ஆபாச)த்திற்கின்றாயினும் பிம்பத்திற்கு (கூடத்தனுக்கு) உண்டு எனின், அதைக் குறித்து சாஸ்திரம் பிரவிர்த்திக்கின்றதில்லை. அங்ஙனமன்று, அதைக்குறித்துப் பிரவிர்த்திக்கின்ற சாஸ்திரமும் தேடிக் கழுத்திலேயே கிடைத்த அணிபோலும் தசம திருட்டாந்தம்போலும் (அடையாததின் அடைவாக இராவிடினும்) அடைந்ததின் அடைவாகவாவது பயனுள்ளதாக ஆகலாமே எனின்; சரி நல்லது இது உண்மையாயின் எது ஒன்று தானுகக்

கடவுளை யறிகின்றதோ அது அந்த நிலையிலுள்ள தன்னை மறந்தது என்பதும் உண்மையாகின்றது. 'இது உண்மையானால் இவ்வாறு தனது இயல்பாயுள்ள நிலையை மறந்தவைகளாயும் மீண்டும் பிராப்தப் பிராப்யமாய் தன்னியற்கை நிலையை அடையத்தக்கவைகளாயுமுள்ள பொருள்கள் பலவுள என்பதும் உண்மையேயாகும். அங்ஙனமன்று, அப் பொருள்களெல்லாம் ஒன்றுதான் எனக் கூறினும், ஒரு பொருளினம்சங்களாய் பலவாய் இருக்கின்றன என்றுவது சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகின்றது; ஒருவனடைந்தால் போருதாதலின். இங்ஙனமன்றி கூடத்தன் தன்னை மறக்கவில்லை ஆபாசனே அதை மறந்தான் என்னில், ஆபாசன் அறிவுற்று கூடத்தன் ஐக்யத்தைப் பிராப்கப் பிராப்யமாய்ப் பெற்றுன் என்று சொல்லவேண்டிநேரும். அப்பொழுது ஒருவன் செய்கைக்கு இன்னொருவன் பயனெய்தினுன் என்பதும், ராமன் உண்ணக் கந்தன் பசியாறினுன் என்பதும் போல மறவாதவனுக்குப் பிராப்திகூறுவது முதலியன நேர்மையாகப் பொருந்தாதவைகளாகும். இங்ஙனமாயினும் கண் மூக்குக் காதுகளுக்குச் சரீராவயவங்களென்பது சமானமாயிருந்தாலும் தங்களுக்குள் ஒன்றற்கொன்று வேற்றுமையிருப்பது போல, அந்த ஒரு பொருளின் அம்சங்களாயும், ஆன்மாக்களாயுமுள்ள அவைகள் பல கோடிகளென்பதும், அவைகளுள் பிராப்த பிராப்யங்களாய் அடைந்தவைகள் பல என்பதும், இப்போது அடையத் தகுந்தவைகள் சில என்பதும், இன்னும் அடையாதவைகள் பல கோடிகள் என்பதும், இந்த தாரதம்யங்களுக்கெல்லாம் தக்க காரணங்கள் உண்டென்பதும், இவைகளெல்லாம் உண்மைதானென்பதும் நன்கு பெறப்படுகின்றது.

இங்ஙனமாக ஜீவேச்வர ஜகத்தைப் பொருளின்றிய வெறும் தோற்றங்களெனக் கொள்ளினும், உண்மைப்

பொருளில் சம்பந்தம் வைத்துக்கொள்ளவேண்டி பிராப்த பிராப்யம் முதலாக யாதானு மொன்றைக்கூறினும், அதை மெய்ப்பிக்கத் தொடங்கும்பொழுது அதனால் மற்ற யாவுமே மெய்யெனப்பட்டு முழுதும் பரமாத்துவிதமாய் முடிவதை நன்கு தெளிவாய்க் காணலாம்.

ஈண்டு எடுத்துக்கொண்ட பொருளிலோ, 'ஞானகாண்டமாய வீட்டு நெறியாயினும் சரி, அதில்பிறப் பிறப்புக்கள் துன்பமாயிருக்கின்றன. அவற்றை விட்டு நீங்குமுபாயம் தேடிக்கொள், இதற்காகவாவது ஞானசாஸ்திரத்தைச் சிரவணம் செய்வாயாக' என, மக்களைப்பார்த்துச் சொல்லி நூல் ஆரம்பிக்கப்படுகின்றது. சொல்லியும் பயனில்லாத தோற்றங்களாயின். இவ்வளவுதூரம் கிரமம் முதலியன வைத்துச் சொல்லவேண்டியதில்லை. சொல்லுவதனாலேயே வெறும் தோற்றமாத்திரமான பொருள்களல்ல, என்பது தெளிவாகின்றது. மேலும் மூன்றையும வெறும் ஆபாசங்களெனக்கொள்ளின், எல்லா மக்களுக்கும் வாதிகளுக்கும் பொதுவாயங்கீகாரமாயுள்ள பிரமாண நூற்களையும் பிரத்யக்ஷக் காக்ஷிகளையும் நிராகரித்ததுமாகும். இன்னும் பிரத்யக்ஷ பிரமாண முதலியவைகளை ஒத்துக்கொண்டு சுருதியில் சிருஷ்டி கூறப்படுகின்றது. வியாச பகவானும் அது உண்மையும் நியாயமும் நேர்மையுமென்று ஒத்துக்கொண்டு சிருஷ்டியிலுள்ள மாறுபாடுகளை நீக்கி அவ்வாறு சிருஷ்டிக்கப்படும் பொருள்களின் கிரமங்களைச் சீர்திருத்தி அமைக்கின்றார். பாஷ்யகாரர்களனைவரும் அதுதான் சரியென்றும், கிரமம் தவறி உண்டதால் நியாயமன்றென்றும் அதற்குத் தகுந்த சுருதி, யுக்தி, அனுபவங்களை விளக்கமாகவும் எடுத்துக்காட்டுகின்றார்கள்.

இங்ஙனம் யாவரும் எவையும் ஒரே முகமாய் ஒத்துக் கொள்ளும் விஷயத்தை விடுத்து 'சிருஷ்டியில் சுருதியாதிகளுக்குத் தாத்பரியமில்லை. அவைகளுக்கெல்லாம் முப்பொருள்களையும் மித்யையென்பதில்தான் தாத்பரியம்' என்று ஒரே பிடிவாதமாகக் கூறுவது அவ்வளவு பொருத்தமுடையதன்று. மேலும் சாஸ்திரப் பிரக்ஞையினால் கற்பனாசக்தி வாய்ந்த புத்தியுள்ளவர்களுக்கன்றி சர்வசாதாரணமாக விளக்கமில்லாத ஒரு அயதார்த்தக் (பொய்) காக்ஷியைச் சகாயமாகக்கொண்டு உண்மையை விளக்குவதென்பது மிகவும் சாதுர்யமுடையதேயாயினும், அதைக்காட்டிலும் சர்வானுபவசித்தமான உண்மைக் காக்ஷியைத் துணையாகக் கொண்டு உண்மையை விளக்குவதென்பது சிறந்ததும் நலமும் எளிமையும் விளக்கமும் ஆகும் என்பதையே மித்யா வாதத்திற்குச் சொல்ல விரும்புகின்றோம்.

மேலும் பிரஸ்தானத்திரயங்களுள் தனித்துச் சிறந்தவைகளும் உலக மக்களனைவரும் தலைசிறந்த பிரமாணங்களாகக் கொள்ளுபவைகளுமான பகவத் கீதையிலும் பிரமசூத்திரத்திலும் இந்த மித்யா உவமைகள் எதற்காகவும் எவ்விடத்தும், எப்படியும் எடுத்தாளப்படவில்லை. இன்னும் பிரதான உபநிஷத்துக்களிலும், சங்கர நாராயணரிருவரும் ஓராதான மேல் வீற்றிருந்தருளும் ஈச்வர கீதையிலும் கயிற்றரவு போன்ற உவமைகள் எங்குமெதற்கும் காணப்படவில்லை. ஆனால் இவைகளில் இதற்குமாறாக 'உடுக்குமாடையினைப் போல உலகம் யாதொன்றில் குறுக்கும் நெடுக்குமாகும்' (मृदा कुम्भादिकं यथा) ம்ருதா கும்பாதிகம் யதா எனவும் 'ஓங்காரப் பொருளாம்' என்னுணர்வின் விரிவு உலகெலாம், என்பன முதலியவாகவும் விவர்த்த திருட்டாந்தமொழிந்த

மற்ற ஆரம்ப பரிணுமாதி திருட்டாத்தங்களே கொடுக்கப் பட்டிருக்கின்றன. மேலும் வியாச சூத்திரத்தில் 'இறைவன் பரிணமிக்கின்ருன்' என்ற இடத்தில் சங்கராசாரிய சுவாமிகள் இறைவன் தன்னை உலகமாகப் பரிணமிக்கும்படி செய்து கொண்டார், என விளக்கமாகக் கூறி இருக்கின்ருர். ராமாநுஜாசாரிய சுவாமிகளும் அச்சூத்திரத்திலும் மற்ற இடங்களிலும் தேவதத்தனைவன், பால யௌவன விருத்த வடிவங்களாகப் பரிணமிப்பதுபோல சித் அசித் சரீரகனை பரமாத்மாவானவன் இந்த ஜகத்வடிவமாகப் பரிணமிக்கின்ருன் என்கின்ருர். இங்ஙனமே நீலகண்ட சிவாசாரிய சுவாமிகளும் சூக்கும சித் அசித் சக்தி விசிட்டமான இறைவன் தூல சித் அசித் சக்தி விசிட்டமான உலகமாகப் பரிணமிக்கின்ருன் எனவும் கூறுகின்ருர். இங்ஙனம் மூவரும் இறைவன் உலகாகப் பரிணமிக்கின்ருன் என வாய்மொழியாகவே கூறி இருக்கவும், அரசு வீற்றிருந்த நாவுடைப்பெருமானும் 'இருநிலனுய்த் தீயாகி நீருமாகி இயமானனுய் எரியுங்காற்றுமாகி' என்பன வாதியாகவும் அருள்செய்திருக்கவும் அது வதுவாக ஆகும் தன்மை இக்கிளிஞ்சல் வெள்ளி, பழுதைப் பாம்பு முதலியவற்றில் இல்லாதிருக்கும்போது இவ்வுவமைகளையே சிருஷ்டி யதிகரணத்தில் வற்புறுத்தவேண்டிய அவசியமொன்றையும் காணேம்.

மேலும் சுருதி சூத்திரங்கள் கூறிய உவமைகளின்படி 'பரிணமித்தல்' வியாச மகரிஷிக்கும், பாஷ்யாசாரியர்களனைவருக்கும் சம்மதமாயிருக்க அத்தகைய நிர்விகார பரிணுமத்தைக் கொள்ளாது, பரிணுமம் என்ருலே 'பால் தயிராகாரம்' அடைதல் என்று காரணசொரூபம் மாறுகின்ற விகார பரிணுமமாகக்கொண்டு 'இப்படி இறைவன் பரிணமிக்கின்ருன்' என்று கொள்வது சரியல்லவென்று விடுத்து, ஈசுவர

சிருஷ்டியான உலகப் பொருள்களனைத்தையும் நாலாவதாகச்சொன்ன விவர்த்தபக்ஷப் பிரகாரம் மயக்கப் பொருள்களெனக் கொள்ளுவோமாயின், அப்பொழுது வாதிகள் 'காணப்படுகின்ற இந்த பிரபஞ்சப்பொருள்கள் உன் மயக்கமா? என் மயக்கமா?' என்று கேட்க ஆரம்பித்து விடுவார்கள். இந்த இவ்வாதம் முடிவடையாது. இதற்குள் இடையிலொருவன் 'என்மயக்கமாகத்தான் இருக்கட்டுமே' என வந்துவிடுவான். அப்பொழுது இந்த வாக்குவாதம் (வில்லினின்றும்) விட்ட ராமபாணம்போல பெருகுமேயன்றி (இலக்கியத்தில்) பட்ட ராமபாணம்போல முடிவையும் பயனையும் உண்டாக்காது. இதற்காகக் கடவுள் மயக்கமென்றுவது சொல்லியாகவேண்டும். அப்பொழுது கடவுளுக்கு மயக்கம் பொருந்தாமையால் பிரதான வேதாந்தங்களிற் கூறும் பரமாத்துவித சிருஷ்டியேயாமென்பது நியாயமும் பொருத்தமுமாம்.

## காரியத்தில் உள்ள ஒழுங்கு—

இங்ஙனம் இவ்வளவும் கேட்டிருந்தும், எல்லாம் ஒரே பொருள் என்றால் நன்மை, தீமை சுவர்க்கம், நரகம் இவைகளுக்குத் தகுந்த மார்க்கங்கள் இவைகளைப் போதிக்கின்றவைகள், இவைகளுக்கு மூலமாயிருப்பவைகள், முதலிய யாவும் மித்யா வாதத்திற் கூறியதுபோல நிரர்த்தகமாய் (பொருளில்லாததாய்) முடியுமல்லவா? மேலும் தாய், மனைவி, தங்கை, மகள் முதலியோரை ஒன்றெனக்காணும் தூர்த்தனின் செயல்போல் ஆகுமன்றோ? மித்யா வாதத்தைக்காட்டிலும் மிகக்கொடியதாகவன்றோ இருக்கின்றது, என்றால் நல்லது சொல்லுவோம். பரமாத்துவித திருட்டாந்தங்களிலிருந்து இச்சங்கைகளுக்கு எளிதில் சமாதானங்கள் கிடைக்

கும். சாலும், குடமும், கலசமும் ஒரே காரணத்தின் காரியங்கள் என்பது சிறு பிள்ளைகளுக்கும் தெரிந்த விடயமாகும். என்றாலும் இவைகளெல்லாம் ஒரு பொருளின் காரியங்களென்றநிலையில் யாராவது குடத்தில் நீர் கொண்டு வந்து கலசத்தில் ஊற்றித் தாளியால் மொண்டு (சாலால் மொண்டு) குடிப்பார்களா? அல்லது கலசத்தால் நீர் கொண்டுவந்து தாளியில் ஊற்றி குடம் கொண்டுதான் மொண்டு குடிப்பார்களா? காரணம் ஒன்றானதால் இங்ஙனம் உபயோகிக்கவும் பொருத்தமாமே என்றுதான் கேட்பார்களா? பயித்தியக்காரனை ஒழிந்த எந்த மூடனும் இத்தகைய காரியம் செய்யமாட்டான். அப்படியே இவைகளெல்லாம் ஒரே பொருளின் அனன்ய காரியமாகையால் ஒழுங்கு மாறியும் நடக்கலாமே. விவஸ்தை கடந்தும் நடக்க இடம் கொடுக்குமே என்று கேட்கவுமாட்டான். பரமாத்து விதமான இந்தக் காரிய காரண ஒற்றுமையானது யாவருக்கும், எப்பொருளும், எவ்வளவும், தன் தன் மரியாதையைக் கடக்கச் சிறிதும் ஒத்துக்கொள்ளாது. ஒரே மண்ணின் காரியமாயினும் குடத்தால் நீர் கொண்டுவந்து சாலில் ஊற்றி கலசங்கொண்டு மொண்டு குடிப்பதற்கிணங்குவதே அவைகளுக்குண்டான ஒழுங்கு முறையாகும். இவ்விடயத்தில் இம் மரியாதையைக் கடக்க யாதொருவனும் முயற்சிக்கமாட்டான். முயற்சிப்பானாயின் அவைகள் தாங்கள் அழிந்துபட்டாலும் படுமேயன்றிச் சுய மரியாதையைக் கடந்து நடந்துகொள்ள ஒருபொழுதும் ஒத்துக்கொள்ளா.

இந்த இயற்கைக்கு மீறியும் 'அவைகளைச் சம்மதிக்கச் செய்கின்றேன்' எனச் செய்வானாயின், மீண்டு அங்கு என்ன நடக்கும் என்பதை தெரிந்துகொள்ளுவான். அப்படியே மோதிரமாயின் விரலுக்கும், கடகமாயின் கைக்கும் அணி

ந்து கொள்ளலாமேயன்றி, ஒரே காரணத்தின் காரியமென்ப முறை மாறியும் நடந்துகொள்ளலாம் என்பது அங்கு தகாத தாகும். அப்படியே மற்றதும். மற்ற திருஷ்டாந்தங்களால் மரியாதையும், ஒழுங்கு கெடாத தன்மையும். இவ்வளவு எளிமையில் யாவருக்கும் புலனாகாது. இதனால் இது நான்மறை முடிவின் முகத்தில் வைத்துக் காட்டப்பட்டுள்ளது. இதுபோலத் தாட்டாந்தத்திலும் கண்டு திருப்தியடையத் தக்கது.

எவ்வளவுவரையும் ஒருவனுக்குக் காரியப்பார்வை யுண்டோ அதுவரையும் மனிதன் அந்தந்தப் பொருள்களின் மரியாதையைக் கடவாது நடக்கக் கடமைப்பட்டு இருக்கின் ருன். மரியாதையைக்கடந்து நடந்தவனும், மரியாதையின் ஒழுங்கின்படி நடவாதவனும் இவற்றில் மரியாதை யென் பது ஏது என்றவனும், தன்னை மாத்திரமன்றிப் பிறரையும் கெடுத்தவனாகின்றான். தாயும், தகப்பனும், அண்ணனும், குருவும் வணங்கத்தக்கவர்கள். ஏழைகள் இரங்கத்தக்கவர் கள். உள்ளவர்கள் கொடுக்கத்தக்கவர்கள். அறிவு பெறாத வன் இயன்றது கொடுத்து உவப்பித்து, அல்லது வணக்கமாக வாவது கேட்கக் கடமைப்பட்டவன். அஃதுள்ளவன் தாழ்ந்து சொல்லக் கடமைப்பட்டவன். இவை போன்றவைகளெல் லாம் அவ்வப் பொருள்களின் இயல்பாயுள்ள சுய மரியாதை யான கடமைகளாகும்.

இங்ஙனமின்றி கேவலம் வயறு வளர்ப்பதும், இனம் பெருக்குவதும் மாத்திரம் மக்கட்பிறப்பின் எல்லைக் கற்க ளல்ல. இவைகளெல்லாம் மிருகப்பிறப்பின் எல்லைக்கற்க ளாகும். மக்கட்பிறப்பினர் மிருகப் பிறப்பின் எல்லைக் கற்க ளிலேறி இறங்காது நின்று விடுகின்றதென்றால் அது மக்கட்

சமுதாயத்திற்கே பிரளயகாலம் வந்துவிட்டது என்பதற்கு அறிகுறி அல்லவா? 'ஆறறிவும படைத்த மகனுலது நான் யார்? இவ்வுலகம் எத்தகையது? நான் ஏன் இங்கு வந்தேன்? அதுவும் இத்தேசத்து, இந்நாட்டு, இவ்வூரில், இவ் வீட்டிற்கே வருவானேன்? என் முயற்சியா? பெற்ருேர்கள் முயற்சியா? அல்லது வேறுமோர் பொருள்களின் முயற்சியா? எங்கிருந்து வந்தேன்? எதற்காக வந்தேன்? நானே போவேனு? அல்லது யாராயினும் கூட்டிக்கொண்டு போவார்களா? நான் இந்த உடம்புதானு? அல்லது இவற்றை எல்லாம் ஆராயும் உணர்ச்சியா? அது நானுயின் அதைக் குறித்துச் செய்யவேண்டியதுண்டா?' என்னும் இவை போன்ற கேள்விகளுக்கெல்லாம் நேர்மையானபதில் தெரிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளும் புலமை வாய்க்கத்தக்க மனுடப்பிறவி யெடுத்தும் மிருகநிலைக்குக் கீழும் சென்று விடுகின்ருர்கள் என்ருல் அவர்களைப்பற்றி சொல்லியாவது என்னை? பிறரை வருத்திக் கோடிகோடியாகத் தேடிவைக்காக் குறையினுலே எத்தனை மிருகங்களும், பறவைகளும் எத்தனை நாட்கள் பட்டினியாய்க் கிடந்துவிட்டன? சூரியன் தனது சரித்திரத்தை முடித்துக்கொண்ட உடனே தாங்களும் தங்கள் சரித்திரத்தை முடித்துக்கொண்டு மரியாதை கடவாமல் கூடுகளுக்கும் பட்டிகளுக்கும் வந்துவிடுகின்றனவே? அஸ்தமித்த சூரியன் எழப்போகின்ருன் என்று மரியாதை கடவாமல் அவைகள் அறிவித்தும் கூட இவன் சரிதம் ஓய்வெடுத்துக்கொள்ளுகிறதில்லை; ஆறுதலின்றி அலைகின்ருன். ஆயுளும் அறமுமின்றித் தொலைகின்ருன்.

ஆதலின் மக்களாக்கை பெற்றவன் முடிந்தவரையும் ஏற்றுப் பிழைக்காமலும், பிறரை வருத்தி வாழாமலும் தன் காலில்தான் நின்று இவ்வழியைப் பிறருக்கும் கற்பித்தும்,

நடப்பித்தும், தன்னையும், பிறரையும் ஆன்மார்த்த வாழ்க்கையில் வாழச்செய்யவேண்டிய கடமைப்பட்டுள்ளான். மக்கட் சமுதாயம் என்னும் திருப்பதியில் மிருகத்தெரு, மனிதத் தெரு, என்று இரண்டு தெருக்களிருக்கின்றன. அதில் ஆன்மார்த்த வாழ்வு என்னும் ரதம் மனிதத்தெருவில் ஓடுகின்றது. மிருகத்தெருவில் ஓடுவதற்கிடமேது? இத்தேரை மனிதன், தன் முயற்சி ஒன்றாலேயே நடத்திச்செல்ல முடியாவிடினும், பலராலும் அலங்கரித்து இழுக்கப்படும் அதனது வடத்தின் யாதானுமொரு பகுதியிலாவது தன் கை பிடித்திருக்கும்படி செய்யவேண்டிய கடமையையாவது எவ்வளவு அசக்தனாயினும் மனிதன் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றான்.

இவையெல்லாம் மனிதப் பிறவியின் முக்கியமான எல்லைக் கற்களாகும். இதைக் கடந்து நடக்க எவ்விதத்திலும் எப்படியும் கடமைப்பட்டவனல்லன். மேலும் இப்பொருள்களின் மரியாதையைக்கடக்கவேண்டிய நிர்ப்பந்தமும் ஒன்றுமில்லை. இவன் கிருத்திரிமம் பண்ணாதிருப்பானாயின் இறைவனின் அனன்ய காரியமாயமைந்த உலகப் பொருள்களே இவனுக்கு நல்ல வழியையும், இவன் எவ்வளவு தூரம் அவைகளைப் பின்பற்றி நடக்கலாம் என்பதையும், தெளிவாய் காட்டும். 'அறியாவிட்டாலும் அயலைப் பார், தெரியாவிட்டாலும் தெருவைப் பார்' என்பது நம் பழையோர் மொழியாகும். யாவும் பரமாத்துமாவின் அனன்யகாரியங்களாயினும் காரிய விவகாரத்தில் ஒன்று ஒன்றாகவும் ஆகாது. ஆதலால் ஒன்றற்கான வழி அதற்கு வேறான மற்றொன்றற்கும் ஆகாது. மூன்றும் பொன்னாயினும் கழலைக் காலிலும், கடகத்தைக் கையிலும், மகுடத்தைத் தலையிலுமே உலகம் அணிந்துகொள்ளுகின்றது. இதனாற்றான் 'அறியாவிடினும் அயலைப் பார்' என்றார்கள்.

தோற்றமாத்திரமான பொருள்களில் இந்த நியதி வாரா. கானல்சலம் தாகத்தைத் தீர்த்தாலல்லவோ கிளிஞ்சல் வெள்ளி அதற்குதவாது என்பார்கள். அல்லது கிளிஞ்சல் வெள்ளியாவது கைக்காப்புக்கு ஆனால் அல்லவோ கயிற்றரவு அதற்கு ஆகாது என்பார்கள். ஏனென்றால்—சுருதிகளில் புருடார்த்தங்களுக்குப் பொதுவும் சிறப்புமாக அநேக வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. இதை ஊன்றிக் கவனிக்கவும். இவைகளெல்லாம் நாமரூபத்திற்கு இருப்பைப் பெற்ற உண்மைப் பொருள்களுக்கே கூடும். இவ்வாறாக காரண வடிவத்தில் ஒரே பொருளாயினும் காரிய வடிவத்தில் வேற்றுமையும் விவகார ஒழுங்கும் கூடுகின்றன.

இவ்வாறு சர்வஜனப் பிரத்யக்ஷமாக (சுருதிப்) பொருளியல்பு இருந்தும், இதைச் சுருதிகள் பேரொலியாய்க் கடலென ஒலித்தும்கூட காரணமொன்றாயின் காரிய மரியாதை கெட்டுவிடும். உலக விவகாரத்தின் ஒழுங்குகெட்டு தூர்த்தனின் செயல்போல் ஆகுமென்றும் வித்துவான்களாலேயே கேட்கப்படுகின்றதென்றால் அறியாமையின் சிகரம் புலவர்கள் சிரசையும் கடந்து எவ்வளவு உயர்ந்திருக்கின்றதோ தெரியவில்லை. இதனால் ஒன்று ஞாபகப்படுத்தப்படுகின்றது. எளிமையில் கிடைக்குமொன்று எவ்வளவு உயர்ந்ததும், சிறந்தது'மாயினும், மக்கட்கு அதன் பெருமையும், சிறப்பும், தெரியாது போலும். அரிதிலும், சிரமத்திலும், தான் தேடி கிடைத்ததாயின் அது எவ்வளவு தாழ்ந்ததும் சிறியதுமாயினும் அதனது தாழ்மையும், சிறுமையும், அவர்களுக்குத் தெரியாதுபோலும், என்பதும் பெறப்படுகின்றது.

**மரியாதையின் முடிவு—**

இங்ஙனம் முழுமுதற்கடவுளே நிர்விகார பரிணாமத்தையடைந்து சகல விவகார யோக்கிய சாதகமாய் இருக்கின்

ருன் என்பதைத் தெளிவுபடுத்தும் பொருட்டே நம்மாழ்வாரவர்கள் 'அருநரகவையும் நீ யானல்' என்றுகூறி காரணமான நாராயண சொரூபத்தை அங்கும் காண்பவனுக்கு எதுவும் பாதகமாயில்லை என்பதைவிளக்குவதற்காக 'வானுபர் இன்பம் எய்திலென் ? மற்றைய நரகமே எய்திலென் ?' எனக் காரணப் பார்வையுள்ளவனுக்கு இரண்டும் சமமே என்பதைத் தெரிவித்து, அங்ஙனமாயின் நரகத்தையும் அது போன்ற தீமைகளையும் அடைவது விரோதமில்லையே ஆதலின் அதினின்றும் மக்களை நிவர்த்திக்கின்ற சுருதிகளும் மார்க்கங்களும் பிரயோஜனமில்லையே என்று வரும் கடாவுக்கு விடையாக 'யானும் நீ தானய்த் தெளிதோறும் நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்' என்று நரகம், அதற்காயவழி, அதுபோன்ற தீய துக்கம் தரும் பயன்கள் அவைகளை விளைவிக்கும் நெறிகள், முதலியவற்றிற்குப் பயந்து அவைகளை அடையாதவாறு அவைகளை விளைவிக்கின்ற மார்க்கங்களினின்றும்நீங்கிநடக்கவேண்டும் என்றும் அருளிச் செய்கின்றார். எது வரையிலும் இவைகளுக்குப் பயப்பட வேண்டும் என்றால் இறைவனது காரியமான உலகப்பார்வையுள்ளவரையும் (மிகவும) பயப்பட்டு நடக்கவேண்டும் என்கின்றார். 'யானும் நீ தானய்த் தெளிதோறும்' என்று தெளிவின் வடிவத்தையும் அஞ்சும் காலவரையறையையும் கூறினார். மேலும் அஞ்சும் விதத்தையும் கூறுகின்றார். 'நன்றும் அஞ்சுவன்' என. இதனல் பரம முதற்காரண சொரூபம் அவைகளில் நன்கு அபரோக்ஷமாக அறியப்படும் வரையிலும் மிகவும் விழிப்புடன் தீமையினின்றும் விலகிக்கொள்ள வேண்டும் என்கின்றார். இன்றேல் 'கற்பகத்தைச் சார்ந்தவர்க்கும் காஞ்சரங்காய் ஈன்றதே முற்பவத்தில் செய்தவினை' என்பதுபோலஎல்லாப்பொருள்களும்முதற்காரணமானநாரா

யணுத்மகமாயிருந்தாலும் எம்முறையில் கிரமம் தவறி நடந்தானே அம்முறையிலேயே தண்டனையும் துக்கமும் ஏற்படும். பொன்னூசியாயினும் தகாத முறையிலுபயோகித்தால் குத்தத்தான் செய்யும். பொன்னூசி குத்தலாமா என்று கேட்கப்படாது. ஏன் அவ்வாறு உபயோகித்தாய் என்றுதான் கேட்கவேண்டும். வந்தவனை காரணசொரூபமான நாராயணனாகவே காண்பாயாயின் அவ்வப்பொழுது நாராயணன் கேட்கச் சோறில்லை போ என வைத்துக்கொண்டு சொல்ல மாட்டான். அல்லது பசித்துவந்து நம்முன் நிற்குமிவன் ஏழை என்றோ, கூலி என்றோ, பரதேசி என்றோ, திக்கற்றவனென்றோ, அப்பொருளினது காரிய நிலையுள்ள அளவுக்கு தோன்றுமாயின் - அப்பொழுதும் வைத்துக்கொண்டு இல்லை என்று சொல்வதற்கில்லை. 'ஐயமிட்டுண்' 'பார்த்திருந்துண்மின், பழம்பொருள் போற்றன்மின், காக்கை கரைந்துண்ணும் காலமறிமினோ' 'அட்டுண்பார், இட்டுண்பார், விகைக்காரையம்' என நான்மறைக் கிழவியும், கிழவரும், நூற்றநூல்கள் இரு காதிலும் நுழைகின்றன. பொருளையும் கொடுத்துப் புத்தி சொல்லி விட்ட பின்னர், கிரமம் தவறுவானாயின் வருந்தண்டனை தகப்பனுடையதேயாகும். விவகாரமிங்ஙனமிருக்கும்போது அம்சத்துக்குண்டான துக்காதிகள் அம்சிக்கும் வருமே யென்று யாராவது கேட்பார்களா? இதனால் இரண்டு பார்வையினாலும் தனக்கும் பிறர்க்கும் துக்கம் விளைவித்துக்கொள்ளவேண்டுமென்பதோ தீயவழியிற் செல்லவேண்டுமென்பதோ இல்லை. மீறிச் செல்வானாயின் பட்டுக்கொள்ள வேண்டியதே. இவ்விரு பார்வையினும் மகன் தனக்குத்தானே பகைவனும் பந்துவுமாகின்றான். உலக வழக்கிலும், நூல் வழக்கிலும் இவ்விரு பார்வைக்கே இடமுண்டு. இவ்விரண்டில் ஒன்றுமின்றி வஞ்சகப் பார்வை மூலம்

அங்கு செயலாற்றுவானுபின் அந்தவிழி குருடன் அதனல் வருந்துன்டங்களை அனுபவிக்க வேண்டியதேயாம். அவனுக்குள் நாராயணனிருந்தாலும் முடியாது. அவனுகவே நாராயணனிருந்தாலும் முடியாது.

இன்றேல் 'யானுய்த் தன்னைத் தானே பாடி' என்றும், 'நரகவையும் நீ' என்றும், 'நரகம் எய்திலென்' என்றும் சொன்னவர் 'நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்' எனச்சொல்லுவாரா? இன்னும் காரிய மென்றதனுலேயே உலகத்துள்ள துக்க ஜட அமங்களங்களெல்லாம் இறைவனுக்கும உண்டென்று சொல்லுவதற்கில்லை. தண்ணீரைத் தாங்கிவருவது மண்ணுயினும் 'மண் தண்ணீர்கொண்டுவந்தது' என்னும் விவகாரமில்லை. குடமென்றே சொல்லுவார்கள். இதுதான் இவ்விரண்டிற்கும் உண்டான வேற்றுமை. இதனுல் சிவனே ஜீவனுயிருந்தாலும் (நாராயணனே நரனுயிருந்தாலும்) சீவனுக்குண்டான சுகதுக்கங்கள் இறைவனுக்குமாம் என யாரும் கூருர்.

இதற்கு ஓர் நல்ல அழுத்தமான திருட்டாந்தம் கண்டு கொள்ளத்தக்கது. முக்கிய வேதம் எந்த உபமானத்தால் முப்பொருளொற்றுமையை விளக்கிற்றே அதையே சிறிது அழுத்தமாக இங்கு ஆராய்ந்து பார்ப்போம்.

பாமரன் வீட்டுப்பிள்ளை நீர்மொள்ளாது வந்து குடம் ஒட்டையாயிற்றென்கிருன் என வைத்துக்கொள்ளுவோம். இங்கு இது சிறுபிள்ளையாதலால் குடம் எதால் செய்ததென்று தெரியாமல் இப்படிச் சொல்லியிருக்கலாம். பெற்றேர்களுக்குமா தெரியாது? அவர்களும்தானே அப்படிக் கேட்கிருர்கள். சரி, பண்டிதனும் தனது மனைவியை 'குடத்தை ஏன் ஓட்டை செய்தாய்' என்றுதானே கேட்கின்ருன்,

இவனது புலமைக்கும் கூடவா 'அதன் காரணம் இது. அதற்கும் இத்தோடம் சம்பவித்திருக்கும்' என்று தெரியாது போயிற்று? அவராவது 'மண்ணை ஏன் ஓட்டை செய்தாய்' என்று கேட்கப்படாதா? ஆயினும் இவ்வளவுபேரும் குடம் உண்டாகும்வரையும் அங்கு நின்று பார்த்திருக்கார்கள். ஆதலால் இவர்களுக்கு முழு விவரமும் தெரியாதிருக்கலாம், குயவனுர் வீட்டுப் பிள்ளைக்குமா தெரியாது போயிற்று? அதாவது விழித்துக்கொள்ளக் கூடாதா? போகட்டும். அதுகூடப் பெண்தானே என்று அலக்ஷியமாக விட்டுவிடுவார்கள். நல்லது நிமித்த காரணனென்றாலே உபாதான காரணத்தை நன்றுயறிந்தவன் என்று அவனது இலக்கணமாகும். அவ்விலக்கணமமைந்த குயவனுக்குமா தெரியாது? காரியத்திற்கு வந்தது காரணத்திற்குமாமே என்று ஏன் தெரியாது போயிற்று? அவர்கூடக் குடம் எப்படி ஓட்டையாயிற்றென்கிறாரே யொழிய மண் எப்படி ஓட்டையாயிற்றென்று கேட்கவில்லையே?

பாமரர் முதற்கொண்டு பண்டிதர்வரையும், சிறுபிள்ளை முதற்கொண்டு செய்தவன் வரையும், ஒன்றுபோலக் காணப்படும் இவ்விவகாரத்திலிருந்து ஓட்டைமண்ணிற்கா, குடத்திற்கா என்பது நன்கு விளங்கும். சிறு பிள்ளையும், பாமரனும், அஞ்ஞானத்தினுல் சொல்லிவிட்டார்கள் என்றாலும் பண்டிதனும் கர்த்தாவுமாவது உண்மை சொல்லிக் கேட்டிருக்கலாமே. இதிலிருந்து மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலும், ஆழ்ந்த கருத்துடன் ஊன்றித் தடவிப் பார்த்தாலும் நரனுக்குண்டான இன்பதுன்பங்கள் நாராயணனுக்கும் உண்டு என்று யாரும்சொல்லமாட்டார்கள். குடத்தில் நிகழ்ந்த அது மண்ணிடத்து நிகழ்ந்ததாயினும் குடத்தைப்பற்றி நிற்குமே யன்றி மண்ணைப்பற்றி நிற்காது. ஆனுல் எல்லாம் நிகழ்வது

மண்ணிடத்துத்தான். என்றாலும், அதனிடத்து நிகழுமது அதனைப்பற்றாது. இதுதான் காரணத்தின் பெருமையாகும். இதனாற்றான் காரண இறைவன் அனந்தகல்யாண குண கண வைபவன் சர்வோத்கிருஷ்டன், சர்வோத்தமன், சர்வாந்தர்யாமி, சர்வாத்மகன் என்றெல்லாம் புகழப்படுகின்றான்.

இத்தகைய பரம் பெரும்பொருளினிடத்தில் உலகம் காரியமாய் நிகழ்ந்தாலும், இதிலுள்ள துக்க மோக ஜட அமங்கள வடிவங்களெல்லாம் இதனிடத்துள்ளது வாஸ்தவமேயாயினும் காரண சொரூபமான இறைவனிடத்துச் சிறிதும் பற்றாது. சேய்கள் பாமரர் முதற்கொண்டு செய்தவர், பண்டிதர் வரையும், இது ஆக்ஷேபிக்கத் தக்கதன்று என்று விட்ட ஒன்றை பண்டிதர்களும், அறிஞர்களும் கேட்கின்றார்கள் என்றால், இது ஆச்சரியமாயும், சுருதியனுபவ மாளிகையின் அஸ்திவாரத்தைத் தோண்டுகிறதாயும், துக்ககரமாயும் இருக்கின்றது.

கேவலம் நிமித்தகாரணம் கூறுகின்றவர்கள் நிர்விகார பரிணாமங்கூறும் வியாஸ பகவானைப் பார்த்து 'காரியத்துக் குண்டான குண தற்றங்கள் காரணத்துக்கும் வருமே' என்று அறியாமையினால் கேட்கலாம். 'அபின்னநிமித்த உபாதானங்கூறி, 'இறைவன் இவ்வுலகமாகப் பரிணமிக்கின்றான்' என்பவர்கள்கூட இக்கேள்வியைக் கேட்கலாமா? ஆனால் தாங்கள்மாத்திரம் உடலுக்குண்டான தோடங்கள் (துன்ப இன்பங்கள்) அதனுள் இருந்தாலும் அபிமானமின்மையால் ஞானிக்கில்லாதது போல, உலகுயிர்களுக்குண்டான அந்தக் குற்றங்கள், அதனுள் வியாபகமாய் ஊடுருவி விசேடியமாயிருக்கும் பரமாத்துமாவுக்கு இல்லை என்று கூறுகிறார்கள். அப்பொழுது சுருங்குதல், விரிதல்,

ஜடமாயிருத்தல், அமங்களமாயிருத்தல், முதலியனயாவும், உலகத்திற்கே என்பது நியாயமாய் ஆண்டவன் இதற்கேது வாய் உள்ளிருக்கின்ருன் என்று நிமித்தகாரணன் என்பதே பொருத்தமுடையதாய், அதுவே இவர்கள் கொள்ளத்தகுந் ததுமாம் என்பது பெற்ரும்.

காரியத்தின் உற்பத்தி ஸ்திதி முதலியவைகளுக்கு உபா தானமாகாமல் உள்ளிருந்து ஏதுவா கின்றது என்பதனுல் அதைஉபாதான காரணம் என்று கூறுவதானுல், குடம் பணி முதலியவைகளுக்கு மண்ணையும் பொன்னையும் தள்ளி ஆகாயத்தையும் முதற்காரணம் என்று ஏன் கூறப்படாது? அப்போது ஆகாயம் ஸர்வகாரியங்கட்க்கும் முதற்காரணம் என்று கூறுபவனை மாத்திரம் அறிவிலியென்று கூறலாமா? கடவுளுக்கு உத்கிருஷ்டம் (மேன்மை) முதலியன சொல்லு வதற் கென்ருல், கடவுள் உலகமாகப் பரிணமித்தார்' எல்லா மாய் அது வதுவாக ஆனுர் என்றும் கூறிக்கொள்ளுவதும் அப்படியானுல் 'அவ்வவற்றிலுள்ள தோஷ துக்கங்களெல் லாம் வருமே' என்று கேட்டால்? அதற்கு 'கடவுள் அதுவ துவாக ஆகவில்லை, மாயையே எல்லாமாகப் பரிணமித்தது, அதற்கே இவைகளெல்லாம்' என்றும் கூறிக்கொள்ளுவதும்' என்ருல் 'கொள்ளுக்கென்ருல் வாயைத்திறப்பதும்; கடிவா ளத்துக்கு என்ருல் வாயை இறுக மூடிக்கொள்வதும்'என்பது போலானுல் வேதங்களைக் குதிரையாகக் கொண்டுவந்த குதிரைச் சேவகன் சவுக்கையும் வைத்துக்கொண்டு சும்மா இருப்பானு?

எந்தக் காரணத்தால் எல்லாப் பொருள்களிலுமுள்ள துக்க தோடங்கள் சித்தசித்துச் சக்திமேல் ஏற்றப்படுகின் றனவோ, இறைவன்மேல் ஏற்றப்படுதலில்லையோ, அக் காரணத்தினுலேயே அவைகள் அவைகளாயிருக்கின்றன (சித்தசித்துக்கள் உலகுயிராயிருக்கின்றன) என்பது யாவருக் கும் தெளிவான பொருளாம்.

கைப்புண்ணுக்குக் கண்ணடி கொண்டுவரச்சொல்லி அதோடு ஒத்துப்பார்ப்பாரொருவரும் இல்லை. எது எதுவாக ஆகின்றதோ அது அதுவாக இருக்கின்றது என்பதை நிரூபிப்பதற்காக மற்ற ஊக திருட்டாந்தங்கள் கூடத் தேவையில்லை. பிறவற்றோடு ஒத்துப்பார்த்து இதைத் தெளியவேண்டும் என்பது காணாததும், அனுபவமில்லாததுமான பொருளுக்காகும். அப்படியிருக்க சித்து. அசித்து, சக்தி இவ்வுலகமாகப் பரிணமித்தது, அதனாலேதான் இதன் தோடங்கள் இறைவனுக்கில்லை என்பதை மனப்பூர்வமாகச் சொல்லுவதென்றால் இறைவன் பரிணமிக்கின்றான் என்று சொல்லியாவதென்னை ?

கடவுளை நிமித்தமாத்திரமாகக் கொள்ளுவோர்களுக்குக் கடவுள் மாயையிலேயும், மற்ற பொருள்களிலேயும், ஊடுருவியிருந்து அவைகள் நிலைப்பதற்கும் ஒன்று மற்றொன்றாகப் பரிணமிப்பதற்கும், அவ்வப்பொருள்களினின்று அவ்வக்காரியங்கள் உண்டாவதற்கும் என்னென்னவெல்லாம் உதவிசெய்கின்றாரோ, அதைக்காட்டிலும் விசிட்டாத்துவிதத்திற்கு சிதசித் சக்தி பரிணமிக்கக் கடவுள் அங்கு அப்படியிருந்து அதற்குபகாரமாக என்னென்னவெல்லாம் அதிகமாகச் செய்கின்றார் என்பதுதான் தெரியவில்லை. கடவுளின் சொரூபத்தில் அணுமாத்திரங்கூட சக்தியோடு சேர்ந்து பரிணமிக்கிறதில்லை, அப்படிப் பரிணமித்தால் அதனால் தோடங்கள் அவ்விடத்தைப் பற்றிக்கொள்ளும், ஆதலால் மாயையோடு கூடத்தானும் பரிணமிக்காமல், அது பரிணமிக்க, எல்லாவிதத்தாலும் உதவிபுரிகின்றார் என்பது நன்குபெறப்படுகின்றது, இதனாற்றான் நிமித்தகாரண வாதியராகிய சிவஞானமுனிகள் 'அபின்ன நிமித்த உபாதான காரணன் இறைவனென்றும் 'சத்திவிசிட்டனான அவனே உலகமாக பரிணமிக்கின்றான்,

என்றும் கூறும் நீலகண்ட சிவாசாரியரைத் தன்னோடுசேர்த்து அணைத்துக்கொண்டு, 'எங்களிருவருக்கும்,

வாய்ப்பாட்டின் பாகுபாடே வேற்றுமை — ஒற்று
மையே பொருட்பாகு பாடுகளனைத்தும்'

என விளக்கமாகத் தனக்கும் (நீலகண்ட சிவாசாரியருடைய) விசிட்டாத்துவிதத்திற்கும், உள்ள வேற்றுமையை ஒளியாது சொல்லிவிட்டார்.

இதனால் ஒன்றன் பரிணமத்தை ஒன்றற்குச் சொல்லி அது அங்ஙனமாதலை அது அங்ஙனமாயிற்றென்று சொல்லுவதானால் அது அங்கனமாதல் எங்ஙனம் போயிற்று? என்பது தெரியவில்லை.

அப்படியே வைத்துக் கொண்டாலும் அறியாதவன் ஞானியைக் கருத்தவன், இளைத்தவன், நொண்டி எனக் கூறினும், உடம்பைத் தனக்கு வேறாகக் கண்ட அவனும் அதில் ஊடுருவி இருந்தாலும் நான் கருத்தவன், இளைத்தவன், நொண்டி, குருடன், என மயங்கியும் கூறமாட்டான். அதனாற்றான் அதன் தோடங்களும் அவனைப் பற்றுகின்றன வில்லை.

அதுபோல இறைவனும் நான் மலையானேன், மண்ணானேன், எல்லாமானேன் என்று உண்மைக்கு மாறாகத் தானல்லாத உலகுயிர்களை அவற்றுள் எவ்வளவு ஊடுருவி இருந்தாலும் தானாகச் சொல்லமாட்டார். இறைவனுக்கு நிகழாத ஒன்றைச் சொல்லி ஆவதென்ன? பரிணமித்தல் (ஆவது) என்பது ஒரு நல்ல விசேஷமான செயல். அது தனக்கில்லாவிட்டாலும் சிதசித்துக்களுக்குள்ளதைத் தனதாகப் பாவித்துக் கொள்ளுகின்றார் என்றால் நல்லது — 'நாய் வந்தால் வால் எங்கே போகும்' என்ற பழமொழியைக் கேட்டதில்லையா? அப்பொழுது அதற்குள்ள யாவையும் தூக்கிக் கடவுள் மேலே

போட்டுக்கொள்ளட்டும். இல்லை, அமங்களாதிகள் தனக்கும் வந்துவிடும் என்று பயப்படுவாராகுல் அப்பொழுது, தான் அதுவாக ஆகாமல் போகட்டும். இல்லை எப்படியாவது ஒரு முறையில் அதுவாக ஆகவேண்டுமென்ருல் அம்முறையி லேயே அந்த மற்றவைதயும் ஏற்றுக்கொள்ளட்டும். மீசைக் கும் ஆசை, கூழுக்கும் ஆசையா? என்பது உலகப் பழமொ ழியல்லவா?

இதனுல் முகத்துக்கு நேரே கையை நீட்டி மூக்கைப் பிடிப்பது போல நிர்விகார பரிணமம் சுருதி சொன்னவாறு நேரே இறைவனிடத்துக் கொள்ளாமல், தலையைச் சுற்றிப் பிடிக்க ஆரம்பித்து தலையைத் திருப்பியும், கையை மடக்கி யும் மூக்குக் கிடைக்காது கஷ்டப்படுவதைப்போல இறைவன் மாயையைச் சுற்றிச் சுற்றி வந்தாலும், உட்புகுந்து ஊடுருவி வந்தாலும் தான் பரிணமித்ததாக நேர்மையாகச் சொல்லப் பொருந்தவில்லை. அதிலுள்ள துக்க மோக அமங்களங்க ளெல்லாம் இறைவன் பரிணமிக்காதவாறு தடுத்துக்கொள் ளுகின்றன.

இதனுல் பரிணம சுருதியைச் சமர்த்தனம் செய்வ தற்காக எவ்வெப்பொருள்களில் பரிணமத்தை ஒளித்து வைத்து அதை இறைவன்மேல் ஏற்றிச் சொன்னுலும், அது நேர்மையாகப் பொருந்தாததாகவே முடியும்.

மேலும் 'सदेव सोम्य इदमग्र आसीत्' என்று 'இவைக ளெல்லாம் உற்பத்தியாவதற்குமுன் அவனெருவனே இருந் தான். அவனே 'இவ்வெல்லாமாக ஆவேன்' என்று ஆகியிருக் கவும், இதற்காக வியாஸபகவான் ப்ரம்மசூத்திராதி பிரதிஞ்ஞா திருட்டாந்தங்களைக் காப்பாற்றிப் போற்றி வைத்திருக்கவும், இதை விதித்தும், இதை மறுத்தும், இதை வெறுத்தும் யாராவது வேறுமோர் பரிணமத்தையும் திருட்

டாந்தத்தையும் கொள்வார்களா? இதனாலன்றோ புளியம் பொந்திலொளிந்திருந்து எடுத்துச்சேர்க்காது இயல்பா யமைந்த கொம்புத்தேனார் பொற்பணிபோல் நிர்விகாரபரிணா மங்கொள்ளாமல், எப்பொருளில், எவ்வகையில், எம்முறை யில் ஒளிந்துபார்த்தாலும் இறைவன் எல்லாமாயிருக்கும் தன்மை நன்குதெளியக் காணமுடியாதென்பதை நன்குதெளி யக்கண்டு, சுருதிசூத்திரானுஸாரமாய் பிரதிஞ்ஞாதிருட்டாந் தானுஸாரமாயுள்ள பரமாத்துவிதமென்னும் வெட்டவெளி பெருங்குகையிலொளிந்து இறைவன் எல்லாமாயும் தானுயும் இருக்கும் நிலையைத் தானுங்கண்டு நமக்கும் காட்டியுள்ளார்.

இங்ஙனம் நமதாழ்வார் பரமாத்துவிதத்திலொளிந்திரு ந்ததனாலல்லவோ எம்பெருமானுடைய எல்லாமாயிருக்கும் கள்ளத்தைக் கண்டுபிடிக்கலாயிற்று. அதனாலன்றோ, 'எல்லா வுலகும் உயிரும் தானேயாய்' 'தானே யான் என்பானாகித் தன்னைத்தானே துதித்து' எனப் பொதுவும் சிறப்புமாகக் கூறியதோடன்றி, இப்பரமாத்துவிதம் விளங்காத மக்களு க்குத் தொட்டுக்காண்பிப்பார்போல, 'நிற்பனவும் திரிபனவும் நீயே' 'யானும் நீதானே' எனக் ஆட்காட்டி விரலொன்றொழி ந்த மற்றவிரல்களை மடக்கிக்கைநீட்டிச் சுட்டிக்காட்டிக் கூறு கின்றார். இது கடத்தைத்தொட்டு இதுமண்ணென்று சுட்டிச் சொன்னதுபோலில்லையா? இவ்வுதாரணம் இவ்விடத்தில் வேதத்தலையில் கொடுக்கப்படவில்லையா? யாம்மாத்திரமா நாமெடுத்துக் கொண்டதற்குத் தகுந்ததென்று இதைச் சொல்லுகின்றோம்? இவ்வாறு கொண்டால் மஹாவாக்கி யத்திற்கு நேரே இப்பொருள் பொருந்தவில்லையா? ஆதலின் தனது, அன்னியம் எனப் பாரபக்ஷமின்றி நேர்மையாக இவைகளை ஆராய்ந்து பரமாத்துவிதத்திலெழும் ஆபாச சங்கைகள் ஒழிக்கத்தக்கன,

**மஹாவாக்கியம்—**

மஹாவாக்கியமென்பது மேற்கூறிய 'யானும் நீ தானே' யென்ற ஆழ்வாரது வாக்கேயாகும். எவ்வளவோ சிரமப்பட்டு ஆன்மா முடிவில் கண்டது என்ன ? என்று கேட்டால், அக் கேள்வியின் பதில் இவ்வாக்கியத்திற்றான் இருக்கின்றது. இதனாற்றான் 'எல்லா வுலகும் உயிரும் தானேயாய்' எனப் படக்கையிற்கூறி இங்ஙனம் எல்லாப்பொருள்களையும் நாரா யணாத்மகமாகக் கண்டதனால் கண்டபயன் என்ன ? என்றால் 'யானும் நீ தானே' என்பதுவேயாகும். இதை வேதத்தலையில் 'அது நீயாகின்றாய்' என்று கூறப்பட்டிருக்கின்றது. எல்லா முண்டாவதற்கு முன்னர் கடவுள் ஒருவரே இருந்தார் 'அவனே எல்லாமாக ஆவோம்' என எண்ணினான். அப்படியே ஆனான். ஆதலின் இவ்வெல்லாம் அவனே. 'அப்படியே நீயும்' என என்பதே அவ்வாக்கியார்த்தம் பொருந்துமாறு வேதாந்தத்தில் சொல்லப்படுகின்றது. இது ஆன்மாவுக்கு முடிந்த சிறந்த பொருளைச் சொல்லுவதனால் வாக்கியம் சிறிதா யிருந்தாலும் மஹாவாக்கியமெனப்படுகின்றது.

இது, ஆன்மாவானது அம்சமாகவோ அனாதி காரிய மாகவோ இல்லாவிடில், குடத்தைக்காட்டி இது மண் என்பது போல ஆன்மாவைப் பார்த்து 'நீ கடவுள்' எனச் சொல்லுவது எவ்வாறு பொருந்தும்? முடிந்த தீர்ப்புக் கூறுமிடத்தில் உப சாரமாகவோ, பொய்யாகவோ வேதமும் பெரியோர்களும் சொல்லமாட்டார்கள். ஒருவனைப் பார்த்து உண்மையாக 'நீ அரசகுமாரன். எப்படியோ உன்னை மறந்து விட்டாய். உன் னியற்கை நிலையைத்தெளிந்து உனதுரிமையைப்பெறுவாயாக' என்று உண்மையாளன் சொல்லுவது போலவும், அப்படியே 'நீ குந்திமகன், ராதாபுத்திரனன்று' என்றும், அழவேண்டாம்

பத்தாமவன் இருக்கின்ருன். 'அவனே நீயாவாய்' என்றும் சொல்லப்படுவது போலவும் இங்கு ஆன்மாவைப் பார்த்துக் கடவுளோடு அனன்யம் சொல்லப்படுகின்றது. இதையே

'கூடிற்ருகில் நல்லுறைப்புக் கூடாமையைக் கூடினுல்
ஆடல் பறவை உயர்கோடி எம்மானுவது அதுவதுவே'

என்று நம்மாழ்வாரும் விளங்கக் கூறியிருக்கின்ருர்.

ஐக்கியம் (அனன்யம்) பலவற்றுள்ளும் இம் மஹாவாக்கியத்தால் ஜீவேச்வரர்களுக்குப் போதிக்கப்படும் ஒற்றுமை எது போன்றது என்ருல், காரிய காரணங்கட்கு உண்டானதும் அம்சாம்சிகளுக்குண்டானதும் போன்றதென்கின்ேரும். இங்ஙனமன்றி ராதா புத்ரனுக்கும், குந்தி மகனுக்கும் உண்டான ஐக்கியம் போன்றும். ஆற்று வெள்ளத்தில் அடிபட்டுப்போன பத்தாமவனுக்கும், ஒன்பதுபேரை எண்ணியவனுக்கும் முதலுக்கு முதலோடு உண்டான மயக்கத்தெளிவாமைக்கியம் போன்றும் அன்று. இன்னும் சரீர சரீரிகளுக்குண்டான ஐக்கியம் போன்றும், நீருக்குப்பாலோடு உண்டான ஒற்றுமை போன்றும், பொருளால் இரண்டு கலப்பால் ஒன்ருய்த் தோன்றுவதுமான ஒற்றுமையும் அன்று.

எங்ஙனமென்னில்:— கர்ணனும் தசமனும் பலபேரன்றி ஒருவனுகவே இருத்தலின், இவனொருவனே தன்னை மறந்து அறிவுறுத்த அறிவுற்ருன் என்பதுபோல இறைவனே தன்னை மறந்து மீண்டும் அறிவுற்ருன் என்பதாதியாகப் பொருந்தாத விவகாரங்களெல்லாம் வந்துசேரும். கடவுளர்கள் பல வின்மையினுலும், மஹாவாக்கிய உபதேசம் ஒருவனேடு சாந்தியடையாததனுலும் என்க.

இங்ஙனமன்றி இருபொருளுக்குக் கலப்பால் உண்டான அபேதம் போன்றது என்னின் அப்பொழுது பிரதிஞ்ஞாதிருட்டாந்த விரோதங்களும், 'ஜீவான்மா எனதம்சம்' என்ற சுருதி விரோதமும் வரும். ஒன்ருய்க்கலந்து ஒன்றுபோலக்காணப்

படினும்; பாலுக்குள் நீர், பொருளால் வேருகவே இருக்கின்றது. அது பாலாகி ஒரு பொருளாய்விடவில்லை என்று எக்காரணத்தால் சொல்லுகின்றேமோ அக்காரணத்தினுலேயே நீரைப் பாலோடு கலந்திருப்பினும் நீர் பால் என்று சொல்லுவதற்கில்லை. மேலும் பாலைப் பால் என்னலாம். அல்லது அதன்காரியமாகிய குமிழி, நுரை திரைகளைப் பார்த்தாவது அவைகளை பால் என்னலாம். இஃதன்றி இவ்விரண்டுமல்லாத நீரைப்பார்த்து நீ பால் என்று எங்ஙனம் சொல்லுவது? பொன்னைப்பார்த்தும் அல்லது அதன் காரியங்களாகிய கடக மோதிர மகுடங்களைப்பார்த்தும நீ பொன் என்று சொல்லலாம். இங்ஙனமன்றி பொன்னல்லாத மண்ணையும் கல்லையும்பார்த்து நீ பொன்னென்று எப்படிச் சொல்லுவது? உண்மை கூறுமிடங்களிலும் முடிவான உபதேசம் கூறுமிடங்களிலும் பொய்யாகவும் உபசாரமாகவும் சொல்லலாமா? 'பக்கத்திலிருந்தது' என்ருல் அல்லது ஒன்றை ஒன்று தழுவிக்கொண்டிருந்தது என்ருல் அதையுள்ளபடி அப்படியே சொல்லலாமேயொழிய அதற்காக ஒன்றைப் பிறிதொன்ருக மாற்றி மயங்கும்படி சொல்லுவதா? அப்பொழுது அதுவல்லாததை அதுவென்று கூறுவதுதாஞ மஹாவாக்கியம் என்றெல்லாம் கேள்வி வரும். இதைக்காட்டிலும் அவ்வாக்கியத்தில் 'எங்கே' என்னும் ஒரு சொல்லை இசையெச்சமாக வருவித்துக்கொண்டு 'அது எங்கே நீயாகப்போகின்ருய்' அல்லது 'நீ எங்கே கடவுளாகப்போகின்ருய்' என்று கேள்வியின் மூலம் ஜீவேச்வரபேதத்தை உள்ளபடி வலியுறுத்துவதாக ஆகின்றது என்று, தங்கள் பொருட்பேதக் கருத்தை எளிதில் வலியுறுத்துவதால் 'இது மஹாவாக்கியம் ஆகும்' என்று நேராகப் பொருள்கூறமுடியாவிட்டாலும் இங்ஙனம் மாற்றியாவது தங்களிஷ்டத்தைப் பூர்த்திபண்ணிக்கொள்வது நலமாயிருக்கும்.

இவ்வாற்றால் இவ்விருவித ஐக்கியம் பொருந்தாமையி னாலும், அர்த்தவாதம், உபாஸனைபரம், துதிபரம், உபசாரி கம், குணஒப்புமை, ஜாதிவ்யக்தி, குணகுணி, விகார விகாரி, பிம்பப் பிரதிபிம்பம் முதலிய ஐக்கியங்களும் ஜீவேச் வரர்களுக்குப் பொருந்தாமையினாலும் (2) பாரிசேட அள வையினாலும் (3) கடவுள் ஒருவனாதாலும் (4) அவன் தன்னை மறவானாதாலும் (5) அவனுக்கு அறிவிக்கவேண் டியதின்மையாலும் (6) ஆன்மாக்களுக்கு அறியாமை உண் டென்பது அனுபவஸித்தமாதலினாலும் (7) அவைகளுக்கு அறிவிக்கவேண்டியது அவசியமாதலினாலும் (8) அவைக ளும் பலவாயிருத்தலினாலும் (9) பிரதிஞ்ஞா திருட்டாந்த சுருதி பலத்தினாலும் (10) ஜீவேச்வரர் என இருபொருளுண் டென்றாலும் ஒன்றை ஒன்றுக்கு அம்சமெனச் சுருதி கூறுவ தனாலும் (11) இவ்வாக்கியம் ஒவ்வொரு ஆன்மாவையும் பார்த்து,'நீ கடவுளாகின்றாய்'எனக்கூறுவதனாலும் (12) இவ் விரண்டற்கும் இயல்பாயுண்டான ஐக்கியமானது காரிய காரண ஐக்கியம் அல்லது அம்சாம்சிக ஐக்கியமேயாம் என் பது வெள்ளிடை மலையாய்த் தெள்ளத் தெளிந்த விடயமே யாகும். இதுவன்றி வேறெந்தவிதமான அபேதம் கூறினும் வேதாந்தம் முதலிய மூன்றிலொன்றோடும் நேர்மையாயொத் துழையாதென்பதும் அங்ஙனமேயாம். இதை ஈசுரகீதா பரமாத்துவித பாடியத்தில் விளங்கக் கூறுவாம். விரிவு அறிய வேண்டுவோர் ஆண்டு காணலாம்.

**முழுவதுமா ஏகதேசமா—**

இறைவனது வியாபகமான சிதானந்தத் திருமேனியில் இவ்வுலக சமுதாயம், முழுதுமிருக்கிறதா ஏகதேச பாகத் திலிருக்கின்றதா என்று கேட்டால், இக்கேள்விக்கு ஒப்பற்ற

பரமேச்வரனது திருக்கரத்துக்குப் பணியிட்ட மாணிக்வாசகமே பொருத்தமானதும் நேர்மையானதும் விளக்கமானதும் உண்மையானதுமான பதில் கூறுகின்றது. அது வருமாறு—

‘அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் தெரியின்’

என்று இந்த மாணிக்க வசனங்களில் எழுந்த நமது அன்புக்கடலின் அறிவு விளக்கத்தை என்னவென்று சொல்லுவது? ஓரண்டமே அளக்கமுடியாத எல்லையின் பெருமையும் வளமும் உடையதாயிருக்கின்றது என்றும் இத்தகைய அண்டங்கள் கிரமந்தவறாது வரிசையாக தந்தம் எல்லைவளங்களோடுகூட கோடிவரையிலும் அறியப்படுகின்றனவென்றும். எத்தனை கோடி என்றால் 100 கோடியும் அதற்கு மேலும் ஒரு கோடியும் நன்கு விளங்குகின்றன என்றும் அவ்வளவு பெருக்கூட்டமா என்றால் அதற்குமேலும் விரிந்துகிடக்கின்றன என்றும் அண்டகோடிகளின் எல்லையற்ற இயற்கையை உள்ளவாறு கண்டார். மீண்டும் சிவோகம் பாவனையினால் ஒற்றுமைப்பட்ட சிதாநந்த சிவசொரூபத்தை பரமாத்துவித நிலையில் நின்று அபரோக்ஷமாகக் காண்கின்றார். முன் கண்ட உலகத்துக்கு ‘நூற்றொருகோடியின் மேற்பட விரிந்தன’ என ஓரளவு சொன்னதுபோல, இங்கும் கண்டதை ஒருவாறாவது சொல்லாவிடின் கண்டதற்குத்தான் அடையாளமென்ன? என்று வரும் சங்கை அமைதிபெறுமாறு

யாதானுமொரு முகத்தால் அதன் பெருமை சொல்ல நினைந் தார். அப்பொருளை அவ்வாறிருந்து அவ்வாறுகண்ட அந்தக் காக்ஷிக்கு அப் பரம்பெரும்பொருளின் பெருமை அறியப் படவில்லை. ஆயினும், அப்போது அளவுகடந்த அண்டகோடி களெல்லாம் அக்காட்சியில் ஒரு அணுமாத்திரமாகக் காணப் பட்டது. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்னும் முறை யில் எதை நோக்கியும் அதைநோக்கியும் அளவுபடாத பெருமையுடைய ஒன்றுக்கு அதை நோக்கியும் எதை நோக்கி யும் அளவுபடாச் சிறுமையுடைய ஒன்றை அளவு கருவியாகக் கொண்டு அளந்து பெருமையின் அளவு கூறுகின்றது என் ருல் அப்பெருமை இத்திருவாசகங்களுக்கே உரியதாகும்.

அளக்கப்படும் பொருளின் பெருமையோ தெரியவில்லை. ஒரு கோடி தெரியாமலேயே முழம்போடுவதுபோன்றிருக் கின்றது. அளக்கும் கருவியோ ஒன்ருலும்அளவுபடாச் சிறியது. சாணல் அளந்தான் என்றவிடத்தில் சாண் அளவு கருவியாயினும் அதுவும் எட்டு விரற்கிடைகொண்டதாய் ஒன் ருல் அளவுபட்ட கருவியாயிருக்கும். இது அவ்வாறு ஆகப் படாது என்றுதான் அணு என்று கூறினர். தனித்து அணு என்று கூறினும் சிறிதென்னும் பொருட்டாய்த் திணை, சதுரணுகம் முதற்கொண்ட அளவும் பொருட்படுமாத லின் அதுவும் இங்கு ஒவ்வாதென ஒன்ருலும் அளவுபடாத ஒன்றைக் கூற விரும்பி அணுவுக்கு அடையாக 'இல் நுழை கதிரின் நுண் அணு' எனப் பகுக்கப்படாத பரமாணுவைக் குறித்துக் கூறினர். சதுரணுகமாயினும் நாலு திரியணு கம் கொண்டதென அளவுபடும் துவியணுக மாயினும் இரண்டு பரமாணுக்கொண்டது என அளவுபடும். இதனல் எவ்வளவு சிறிதாக வந்து பகுக்கப்படும் நிலையில் அமையும்

எவ்வளவு பெரிய பொருளாயினும் அது கொண்டும் இதன் பெருமை அளக்கவொண்ணுதென்பதாகின்றது. இவ்வாற்ருல் எதுவொன்று தன்னைக்காட்டிலும் சிறிதொன்றின்றித் தானே சிறிதாய்ப் பரமாணுவாகின்றதோ, இவ்வண்டகோடிகளெல்லாம் சேர்ந்து அந்த நிலையை எந்தநிலையில் அடைகின்றனவோ அந்த நிலையளவுக்கு எல்லாவிதத்தாலும் பெருமையுடையவன் இறைவன் என்பதாம்.

இங்கு உலகடையும் சிறுமையானது தனதியற்கை நிலை கெடாமலேயே இறைவனின் இயல்பான பெருமையினுல் அடைவதாகும்.

இது ஒரு முழக்கோலை முறித்து சிறிதாக்குவதுபோன்றதன்று, அதற்குப் பக்கம் ஒரு மார்க்குச்சியை வைத்தால் அடுத்ததின் பெருமையினுல் இது சிறுத்துவிடுவதுபோன்றதாகும். இப் பொருளைப் பகவத்கீதையிலும் 'விண்ணினியற்கை சுருங்க விரிந்தது' எனக் கூறியதும் இக் கருத்தே பற்றியதாகும். இத்திருவாசகத்திலிருந்து இறைவனது சொரூபத்தின் எம்மாத்திரத்தில் இவ்வுலகனைத்தும் நிகழ்கின்றது என்பதை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம். (पादोऽस्य विश्वा भूतानि) 'பாதோ அஸ்ய விச்வா பூதாநி' என்ற வேதபாகமும், உலகங்கள் முழுதையும் ஒரு காலாலடக்கி என்ற தத்துவ அரசன் வாக்கும் இப்பொருளை விளக்குவன காண்க, இதைச் சூதஸம்ஹிதையில் பிரம்மதேவனும்,

'நானும் அந்த அரி அமரர் ஞாலம் ஒன்றும் நரர் விவிதயோநி இந்த முழுதும் அதனூடு எழுந்த சிறு திவலை, தானெழுந்து பிறிது இல்' என விளக்கமாகக் கூறியிருக்கின்ருர். இக்கவியில் நானும் அந்த அரி எனத் தன்னையும் தனது தலைவனையும்

கூறினாரேனும் இவரே பிறிதோரிடத்தில் 'உருத்திரன் மால் முதலாகத் தம்பமீறுயுள்ள பொருட்குச் சான்றாகுமொரு வன் தன்னை' என மூவரையும் உடன்கூறினமையின் இங் கும் அவ்வாறே கொள்ளத்தக்கது. அப்பொழுது மும்மூர்த்தி களும் பிற ஆன்மாக்களும், 'இந்த முழுதும்' எனக் கைநீட்டிச் சொன்னமையால் மற்ற அசேதனப் பொருள்களும் சேர்ந்து 'கடவுட் கடலில் ஒரு துளி' என்பதாகின்றது. கடலில் துளி மதிப்புக்கூட பொருந்தவில்லையென்று, 'முழுதும் அதனூடெழுந்த சிறு திவலை' என ஓரளவுக்கு சுருக்கி வரை யறுத்துக் கூறுகின்றார். இவ்வாறு இவ்வனைத்தும் அதை நோக்க மிக அற்பமாயினும், அதனின் வேறன்று அது வேயாம் என்பதையும் கூறுகின்றார்—'தானெழிந்து பிறிதில்' என.

இவையெல்லாம் பிராமாணிக ஸத்திய வாக்காகும். இவைகளால் இறைவனது பரிபூரண வியாபக சொரூபத்தில் மிகச் சிறிய ஏகதேச பாகத்திலேயே இவ்வனைத்துலகும் நிர்விகார பரிணாமமாய் நிகழ்கின்றது என்பது நன்கு பெறப்படுகின்றது.

இதை விகார பரிணாமமாகக் கொண்டாலும் இவ்வனைத் தையும் அணுமாத்திரமாகக்கொண்ட அவனது சொரூபப் பெருமையினால் யானைக்காலில் அகப்பட்ட குளம்படி நீர் போல அவனுக்குத் துன்பகாரணமாய் ஒரு பொருட்டாவ தில்லை. அங்ஙனமாயினும் உயிருக்குயிராயிருந்து இதைக் காக்கின்றான் என்பதும், அப்பர் சுவாமிகள்—'அருந்துணையை, பெருந்துணையை' என்பதால் அறியப்படுகின்றது. இவ் வுலகம் இறைவனை நோக்க எவ்வளவோ அற்பமாயினும் தன்னை நோக்க இது எவ்வளவோ பெரியதும் எல்லை கடந்ததும் துக்க மோக அமங்கள சுகவடிவமானதுமாகும்.

மதங்கொண்ட யானைக்கு குளம்படி நீர் துக்க ஹேதுவாகச் சிறிதுமாகாவிடினும், அதில் விழுந்த கிழக்கொசுவுக்கு எல்லை கரைகாணுத பறவையே (கடலே) யாகுமாப்போல, அம்சமும் காரியமுமான இந்த உலகம் இறைவனுக்கு துக்க காரணமாக ஆகாவிடினும் இதில் விழுந்த ஆன்மாக்களுக்குப் பசி, மூப்பு, மரணம் முதலிய துக்கங்களுக்குக் காரணமா கவே இது ஆகும். ஆதலால் முக்கியமான யாதானுமொரு தொடர்பைக்காட்டி (அம்சாம்சி யென்ருே, வேருயினும் கலந் திருக்கின்ருன் என்ருே) இவைகளை யெல்லாம் கடவுள்மேல் போட்டுவிட்டுத் தானெதிங்கிக்கொள்ள ஆன்மாவால் முடி யாது. இது பொருள் கொடுத்தம் புத்தி சொல்லியும் கேளாது, தீங்கியற்றி அதனுல் வரும் துக்கத்தைத் தந்தையேல்போட்டு விலகிக்கொள்வதுபோல் முடியாதாகும் ஆதலின் அம்சமான ஆன்மா தனது பொருப்பை உணர்ந்து, அம்சியான கடவுள் சொன்ன நூல்வழி நடந்து, நல்லார்பின்னேசென்று, துட்ட வாதனை விட்டு, விவேகியாய், அந்த மாமறையால் நாடிய பொருளை அழகுற அறுதியிட்டு, அல்லற்பந்தமாம் மயற் பற்றறுத்து, உண்மை கண்டு, இம்மை மறுமை இரண்டிலும் இன்பியாயிருக்கக்கடவன். இதுதான் அம்சாம்சிகளுக்கும், காரிய காரணங்களுக்கும் உண்டான வேற்றுமையின் பயனுகும்.

## முடிந்ததன் முடிபு.

### பரமாத்துவித ஞானம்—

பொருளொன்று, அதற்கு நிலை இரண்டு, என்பது கொண்டு முன்பும் கூறிவந்தோம். இனி முடிவிலும் சிறிது அது பற்றிக்கூறுவாம், இறைவனுக்காரண நிலை, காரிய

நிலை என இரண்டு நிலை கொள்வதனுலேயே ஒரு பொருளைக் கொண்டு எல்லா விவகாரங்களும் நேர்மையில் பெறப்படு கின்றன. இதில் காரணநிலை, ஞான நிலை என்றும், காரிய நிலை, அஞ்ஞான நிலை என்றும் சொல்லுவதற்கில்லை. இரண் டும் உண்மையாயிருத்தலின் இரண்டும் மெய்யேயாம். இன் றேல், இறைவன் 'எல்லாமாக ஆவோம்' என எண்ணினது பொய்யென்பதாகும், அல்லது பொய்ப்பொருளை ஆவோ மென எண்ணினுர் என்ருவது சொல்லவேண்டி நேரும். அல்லது இவரே பொய்யானவர் என்ருவது சொல்லவேண்டி நேரும். அப்பொழுது இறைவனே முதன் முதலில் பொய் நினைவுகொண்டு பொய் பேசினுர் என்ருல் மற்றவர்களைப் பற்றி सत्यं वद । धर्मं चर । 'சத்யம் பேசு, தர்மம் செய்' என் றெல்லாம் வேதத்தலையில் சொல்லுவது வீணேயாகும்.

ஆதலால் இவ்வெண்ணம் உண்மையாயின் இவ்வெல் லாம் உண்மையே யாகும். அப்பொழுது பலபொருள் காணப்படினும் இவைகள் மூலத்திலொன்ருனதால் அங்கு அதைத்தவிற இரண்டாவது பொருளும் இன்மையால் பொருள் ஒன்றே எனப்படுகின்றது. இந்த வேற்றுமைக்குக் காரணம் அப்பொருளின் அவஸ்தா வேற்றுமையே என்பதும் பெறப்படுகின்றது.

இதனுல் அவ்விறைவனுக்கு இரண்டு நிலை உண்டு என்பது தெளிவாகின்றது. காரிய நிலையில் மலையாயிருக்கு மிடத்தில் கடலா யில்லை. கடலா யிருக்குமிடத்தில் பாறை யாயுமில்லை. ஆணுயிருக்குமிடத்தில் பெண்ணுகவுமில்லை. இங்கு ஆணைப்பார்த்துப் பெண்ணென்ருலும், மலையைப் பார்த்துக் கடல் என்ருலும் மயக்கமென்றும், பொய்யென் றும் சொல்லப்படும். இவ்வாறன்றி மலையைப்பார்த்து மலை

யென்றும், கடலைக்கடல் என்றுங்கூறி விவரிப்பது பொய் யாகாது. மெய்யேயாம். இறைவனின் இக்காரிய நிலையிற் றான் ஒளவை, வள்ளுவர், மனு முதலியோரின் நூல்களெல் லாம் சாந்தியடைகின்றன. காரியம் காரணானன்னியம் என் னும் பரமாத்துவித நிலையிற்றான் ஒவ்வொரு பொருளையும் பார்த்து இறைவன் (நீ) எனக்கூறும் நாவரசர் வாக்கும் ஞானமறைப் பிள்ளையின் வாக்கும் சாந்தியடைகின்றன.

காரணஞானி மலையைக் கடலை, மண்ணை, இறைவனெனக் காணும் பொழுதே, காரிய ஞானியானவன் மண்ணை உழ லாம், மலையை உடைக்கலாம், கடலில் ஓடம் விடலாம், அவன் இவைகளை நாராயணாத்மகமாகவோ சிவாத்மக மாகவோ காணுவதுண்மையாதலினால் இவைகள் இவ்விவ காரங்களுக்குத் தடையாக இருக்கின்றன என்பதும் இல்லை. காரணஞானி இவைகளைப் பரம முதற்காரணமான இறை வனைக் காணுவதற்கு இப்பொருள்கள் இவ்விவகாரங்களை விட்டிருக்கவேண்டும் என்னும் அவசியமுமில்லை. ஒரு காட் டில் தியானம்செய்யும் சிவயோகி, தியான ஸமயத்தில் அக் காட்டையுழும் குடியானவரைப் பார்த்து நீ ஏறை நிறுத்து, நான் மண்ணைச் சிவமாகப் பார்க்கவேண்டும். 'நீ பெரும் கலப்பையிட்டு அழுத்திப்பிடிப்பதால் எனக்கு இறைவனைப் பார்ப்பதற்குத் தடையாயிருக்கின்றது' என்று 'பார்த்த விடமெல்லாம் பரமன் காணம்மானே' என்னும் சிவயோகி ஒருவன் ஏறை நிறுத்தவேண்டிய அவசியம் ஒன்றுமில்லை.

மண்ணை உழுதான் என்பதைத்தவிர, சிவத்தை யுழு தான் என்னும் விவகாரம் எங்கும் இன்மையால், ஞானி அதைச் சிவமென்று பார்ப்பதுண்மையாதலினால் குடியான வனும், 'ஐயா நீர் கண்ணை விளியும், காட்டைவிட்டு அப்பு

றம்போம், நீர் இங்கிருந்து இவைகளைச் சிவமென்று பார்ப்பதனால் எனக்குக் கலப்பை இறங்கமாட்டேன் என்கின்றது எனச் சிவயோகியை அப்புறப்படுத்தவேண்டிய அவசியமும் இல்லை. இவ்விரு விவகாரங்களும் ஒரே சமயத்தில் நிகழலாம். ஒன்றையொன்று பாதிக்காது. இவ்விரண்டும் உண்மையாதலின் இரண்டுக்கும் பயன் உண்டு. இதுவன்றி அதைப் பாறை என்று கருதிக் கொண்டு கட்டப்பாறையால் நாளெல்லாம் தோண்டுவானாயின், இது பொய்ப் பார்வையாய் ஒரு கல்லும் கிடையாமல் வீண் சிரமமாய் முடியும். அப்படியே பாறையை மண்ணென்று கருதி உழுதாலும் உழவும் பயனும் உண்டாகாது. இதனாற்றான் காரியத்தை உண்மை என்று கூறுவது. இப் பொருள் பற்றியன்றோ 'யாவையும் மெய்யே' என நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

காரியகாரணங்களுக்கு இயல்பாயுண்டான மேலான ஒற்றுமை என்று சொல்லப்படும் பரமாத்துவிதத்தில் நின்று பார்த்தால், ஞானநிலை உலக நிலையாகிய இருவேறு நிலையிலுள்ள விவகாரங்களெல்லாம் ஒரே இடத்தில் ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளாமல் நேர்மையாய் நடைபெறுவதைக் 'குன்றேறி யானைப்போர் கண்டது போல' நன்கு தெளியக் காணலாம்.

காரியஞானியானவள் பொற்கடகமணிந்து மட்குடத்தில் நீர்மொண்டு செல்வாளாயின் காரணஞானியானவன் அவைகளைப் பொன்னென்றும் மண்ணென்றும் பார்க்கிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது இருவேறு விவகாரங்கள் ஒரேபொருளில் நிகழ்கின்றன. இரண்டும் உண்மையாகவும் இருக்கின்றன—மண் தண்ணீர் கொண்டுவந்த

தென்னும் விவகாரம் யாண்டு மின்மையினுலும் இவன் அவள் தலைமேலுள்ளதை மண்ணென்று பார்த்ததுண்மை யாதலினுலும் அது நீரைத் தாங்காது அவனை அபிடேகஞ் செய்துவிடவுமில்லை, அப்படியே காப்பும் கழன்று விழுந்து விடவுமில்லை, இன்னும் இவைகள் இவளுக்குக் காப்பாயிருந் தணியப்படுவதும் குடமாயிருந்து நீர்கொண்டு செல்லுவதும் உண்மையாயிருப்பதால் அவன் இவைகளைப் பொன் மண் ணென்று பார்த்தது பொய்யென்று சொல்லுவற்கும் இல்லை. அப்படியே காரிய ஞானியின் விவகாரமும் பொய்யென்பதற் கில்லை. இதுதான் காரிய காரணங்கட்குண்டான மேலான ஒற்றுமையின் பயனும்.

ஆகையினுல் ஒரு பொருளுக்கு இவ்விரு நிலை உண்மை யாகும். இஃதொழிந்த நிலையையே பொய் யென்பது, விபரீத பாவனை யென்பதுமாம். கலசத்தை மண்ணென்றுங் கலச மென்றும் சொல்லலாம். அதற்குத்தகுந்த முறையில் விவகரிக் கலாம். இதுவன்றி அதைக் குடமென்றும், சட்டியென்றும் சொல்லுவதும் அந்தந்த விவகாரங்களை அதில் செய்வதும் தகுதியன்று. ஏனென்ருல் குடத்தைக் கலசமென்று நினை த்து கலசத்தைப்போலத் தாளிக்குள் புகுத்தித் தண்ணீர் மொள்ள ஆரம்பிப்பானேயாளுல், அவன் எண்ணப்படி அங்கு பொருளமைந்திராததால், தாளியையோ குடத்தையோ அல்லது இரண்டையுமோ உடைத்து விடுவான். விபரீத பாவனையால் நடந்த காரியமாதலின் நேர்மையாய் தாகசாந்தி பெறுதலாகிய பயனை அடையமுடியவில்லை. ஆதலால் உள் ளதை உள்ளபடி கலச(சொப்பு)மென்றுகண்டு சாலில் முகப் பானுயின் அது உண்மையாதலினுல் தாகசாந்தி பெறுகின் ருன். இந்த உடம்பாடு எதிர்மறை விவகாரங்களால் காரியத்

திற்கு உண்மை உண்டென்பது நன்கு விளங்கும். பரமாத்துவிதக் கண்கொண்டு பார்த்தால், அதுவும் காரணத்தின் இருப்பென்பதும் பொருள் வேற்றுமையில்லை என்பதும் தெளிவாகும்.

நம்மாழ்வாரையும் நாவுக்கரசரையும் நாராயணுத்மகமாகவோ, சிவாத்மகமாகவோ காணலாம். அல்லது உலகப் பொருள்களை மூலமில்லாத ஸத்தியம் என எண்ணி அவைகளில் மோகங்கொள்ளுவதற்கு ஏதுவாயுள்ள அஞ்ஞானத்தைப்போக்கி, இப்பொருள்களுக்கெல்லாம் ஒப்பற்ற ஒரு மூலப்பொருள் உண்டெனப் பரமாத்துவித ஞானத்தைப் போதிக்க எழுந்த பரமாச்சாரியர்கள் என்ருவது கொள்ளலாம். இவர்கள்—ஞானசம்பந்தரால் 'எனக்கு அப்பர் எங்கே' என்று ஞானப்பாலுண்டும், மதுரகவியாழ்வாரால் 'என்னை ஆழ்வார் எங்கே' என்று நாடெங்கும் தேடியும் கண்டெடுத்துப்போற்றிய குருமூர்த்திகளாகும். அங்ஙனமன்றி வேறுவிதமாகக் கண்டு வேறுவிதமாக நடப்பாணுயின் அது விபரீத பாவனையாதலின் அதனுல் வரும்கேட்டையனுபவியாதொழிவது முடியாதென்பது நிச்சயம். இவ்வாறே மற்றதும் கண்டுகொள்ளத்தக்கது.

இங்ஙனம் அன்றி ஒரு பொருளுக்குள்ள நிலை வேற்றுமையைப் பொருள் வேற்றுமை எனக் கருதிக்கொண்டு பொருளாலும் பேதமுண்டு எனப் பேதா பேதவாதம் கூறப்படுமாயின் அது பொருந்தாது. காப்பென்றும் பொன்னென்றும் இரண்டு சொல் இருப்பதனுல் தீ நீர்போல இரண்டு பொருள் தனித்தனி உண்டென்று கொள்ளுவதற்கில்லை. ஒன்றே, பொருளியல்பு மாருமல் வேறுமோர் நாமத்தையும், வடிவத்தையும் பெற்றுக் காரியமாய் விவகாரயோக்கியமாய் இருக்கின்றதல்லவா ?

அவ்வாருயின் பொன்னுக்கும், மண்ணுக்குமே பொருளுண்டு? காப்பு குடம் என்பதற்குப் பொருளில்லேயே, பொய்தானே என்ருல், அவைகளுக்கும் அவைகளே (காப்புக்கும், கடத்திற்கும், பொன்னும் மண்ணுமே) பொருளாயிருத்தலேத் தினமுமனுபவித்துக் கண்டும், இவ்வாறு, கேட்பது என்ருல் ‘குட்டிச்சுவறு முட்டி வெள்ளெழுத் தென்பாரை’க் குருடென்று விடுவதைத்தவிர, அறிஞர்கள் அவனுக்குச் சாளேசரக் கண்ணுடி வாங்கிக்கொடுப்பார்களா? ஆதலினுல் காப்பாகவும், குடமாகவும் நிகழ்வதும் அவைகளேயாம். பொருட்பேதம் சிறிதுமில்லே. முக்காலத்தும் அனந்யமேயாம். பிரம்மசூத்திர ஆரம்பணு திகரணமும் இதையே வற்புறுத்துகின்றது. இது தெரியாத பேதாபேதவாதியரைப் பிரமதேவனுநம் கனகமதபேதம்வேறு கடகமகுடாதிபோல அனிய வடிவாலனேகம், அறிவு நிலேயால் அபேதம் எனவும், உரையாடுவாரும் இதயமிலர் ஞானவீனர்’ என நெஞ்சில்லாதவர் என்றும், ‘ஏன் விசாலமாகக் காணப்படுகின்றதே’ என்ருல், ‘ஞானசூனியர் அறிவில்லாதவர்’ என்றும் அவரை நிந்தித்து, ‘எனேய நிகழ்வாலும் ஈசன் என நினேகுவான் அவ்வீசன்’ என எல்லாவித காரியபேதமாகவும். அவ்விறைவன் ஒருவனே நிகழ்கின்ருன் எனக்காணும் பரமாத்துவித ஞானியை அவ்வீசனேன்றே போற்றிப் புகழ்ந்திருப்பதுகண்டு அமையத்தக்கது.

இவ்வாருகப் பரமாத்துமாவின் எல்லேயற்ற திருமேனியின் அணுமாத்திரமான ஏகதேசத்தில் இவ்வுலக கோடிகளனைத்தும் தூலமாகவோ சூக்குமமாகவோ பரமாத்துவிதமாய் என்றும் நின்று நிலவுகின்றது என்பது உண்மையேயாகும். இதற்கு எண்ணிலா ஊழிக்காலங்கள் கடந்தும், எண்ணிலாப்

பக்குவான்மாக்கள் முக்தியடைந்தும் இன்றும் நம் முன் நின்று நிலவும் இவ்வுலகமே சாக்ஷிகூறுவ ஆகின்றது.

இதனுல் அப்பரம் பொ[illegible]ருளின் ஏகதேச[illegible] நிர்விகார பரிணமம் உ[illegible] ஒத்துக்கொண்டு [illegible] யுக்தி யனுபவம் மூன்றை[illegible]ருத்தமுறச் செய்கின்[illegible] (ஸமர்த்தனம் செய்கின்றே[illegible] அல்லது இவைக பொருத்தமுறச் செய்வதற்கா[illegible]வது அவ்வாறு கொ[illegible] படுகின்றது என்ருவது சொல்லி[illegible]காள்ளலாம்.

இப்பொருளைச் சுருதியில் நன்கு விளக்கப்பட் கின்றது. அது வருமாறு—

வரக்கடவ[illegible]பொருளும் முன்பு வருமாபோல்
உரைத்த[illegible]உடையவாகி ஒளிர்கின்ருன்
அ[illegible]நம்[illegible]அரனுக்கும் அறிவு ஈதே
இருக்கும் [illegible] ஒருகாலும் இதில் எய்தா'

எனப் பிரமதேவனுல் [illegible] விள சொல்லப்பட்டிருக்கின்ற[illegible]

'உலகம் யாவும் உயிர்பலவும் நானே, சிறிதும் [illegible] இல்லை. அலகிலறிவாலாய்ந்திடத்தும் ஆயாவிடத் அருத்தமிதே. திலகமாய மறை துணிந்து செப்பும் [illegible] ளும் இது, என்றன் இலகும் தன்மையனுபவமும், [illegible] ஓர் ஐயம் உ[illegible]ருல்' எனப் பரமேசனும் அழுத்தம் தி[illegible] மாக எவ்வளவு தூரம் இப்பரமாத்து விதத்தில் ஐயமின் சொல்லவேண்டுமோ அவ்வளவு தூரம் சொல்லிவிட்டா[illegible]

மேலும் ஜன்மாந்தரங்...
க்கும், ததீசி கௌதம முனிவ...
இது எவ்வளவு எளிதாயினும் ...
படினும் விளங்காது. அன்பும் உ...
பட்டிருக்கின்றது. அது 'பரமாத்துவ...
தான்' 'அவனே இத்திரமா முத்தி...
பொருள். செய்வினையாலும், உரமாம...
உண்டாம் சாப உரையாலும், கரமாம் மலு...
காதல் செய்யாது ஒருக்காலும்' என்பது ...
தக்கது.

'ஒப்பரும் பரமாத்துவித வேதனத்தை ...
பரமயோகிக்குக் கைப்பொருள் ஆவி காயமும் கொ...
என்றும், 'மேலான அத்துவித ஞானமாகும் நாதனு... பர
மத்தை நவிலலாமோ' என்றும், 'ஆதியாம் சிவன் நாராயணன்
நான் இங்கு அரைந்ததும் அபேதமாயிருக்க, வாதியாம் ஒரு
வர்க்கு இதை அனுதரித்தல் மாயையினுடைய வல்லபமே'
என்றும் காரியகாரண அனந்நியத்தை பரமாத்துவிதம் என
வாயாரப் புகழ்ந்திருப்பது கண்டு போற்றத்தக்கது.

இவ்வாருக காரிய காரணங்கட்கு இயல்பாயுள்ள நிர்
விகார பரிணமத்தால் பேத அபேதமான லௌகிக வைதிகமா
யுள்ள எல்லா விவகாரங்களும் நேர்படப் பொருந்தும்
மேலான ஒற்றுமை என்னும் பரமாத்துவிதமானது ஆரிய
வேதத்தில் திருநான்மறை முடிவாதிகளிலும், தமிழ் வேதத்
தில் தேவார, பிரபந்த, திருவாசக, திருமந்திர, திருக்குறள்
களிலும், லோகத்தில் பொன்னுசாரியார் வீட்டுத் திண்ணை
யிலும், மண்ணுடையார் வீட்டுவாயிலிலும், யூகங்களில்
காரிய காரண அனன்யத்திலும், ஓடியொளிந்து ஆடிக்களித்து,

கட்டளை

பக்குவான்மாக்கள் முக்தியடை
முன் நின்று நிலவும் இடவம் புரிகின்றது. மேலு
ஆகின்றது.

ரியாய்,முன்னவனை முன்னிய நய
ம், 'நம்கடன்பணி' யெனப் பணித்த

இதனுல் அப்பதும் அரசு செலுத்திய திருநா வின
நிர்விகார பரிணுமமின்று கொலுவீற்றிருந்து சுருதி, யுக்த,
யுக்தி யனுபவம் உலகத்திலும் நடுநிலே தவருது தகுதிய
(ஸமர்த்தனம் த்துகின்றது.
பொருத்தமு
படுகின்றது 'வவுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே'
நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே'

—:❀:—

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்ருகி, இளமைய
லேயே என்னுயிருண்ட கள்வராகிய குருநாதர், தான் மறை
தும், என்னே மறந்தாரில்லே. எவனே ஒருவன் அவருக்கு
மறைந்திருக்க, அவர் எனக்குள் மறைந்திருந்து, என்னே மற
பித்து, என்முகமாக இதை வெளிப்படுத்தினுர். உலகப் பெரும
களின் ஆதரவும், அன்பும், நண்பும், சுற்றமும், சிஷ்டமும்
இப்பரமாத்துவித சித்தாந்தத்தை தாங்கி வெளியிட்டது என
பதைத்தவிர வேறு என்ன இங்கு நம்மால் சொல்லவிருக்

அருணுசல முனிகள் அடிமலர் போற்றி,

ஐயாறப்பன் திருவடிகள் போற்றி.

முற்றிற்று.



